உ

சிவமயம்.

ஸ்ரீ நிரம்ப அழகிய தேசிகர்

அருளிச்செய்த

# திருப்பரங்கிரிப்புராணம்

மூலமும்

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்

## மு. ரா. அருணசலக்கவிராயர்

எழுதிய

## பொழிப்புரையும்.



இவை

ஷை மு. ரா. அருணசலக்கவிராயரால்

மதுரை

மீனலோசனி அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றன.

---

விபவ ஹு ஐப்பசி மீ

விலை ரூ 1—4—0.

---

1928

சிவமயம்.

ஸ்ரீ நிரம்ப அழகிய தேசிகர்

அருளிச்செய்த

# திருப்பரங்கிரிப் புராணம்

மூலமும்

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்

மு. ரா. அருணாசலக் கவிராயர்

எழுதிய

பொழிப்புரையும்.



இவை

ஷை மு. ரா. அருணாசலக்கவிராயரால்

மதுரை

மீனலோசனி அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றன.

விபவஞு ஐப்பசி மீ

விலை ரூ 1—4—0

1928

உ

சிவமயம்.

முருகன் துணை.



கற்பக விநாயகர்.



பரங்கிரி நாதர்



ஆவுடை நாயகி.



சுப்பிரமணியர்.



# பொருளடக்கம்.


| | | |
|---|---|---|
| | பதிப்புரை ... ... | 1 |
| | முகவுரை ... ... | 5 |
| | அபிப்பிராயம் ... ... | 10 |
| | சாற்றுக்கவிகள் ... ... | 12 |
| | பொருளுதவிசெய்தவர்கள் ... | 15 |
| | தேவாரத்திருப்பதிகம் ... | 16 |
| | திருப்புகழ் ... ... | 21 |
| 1. | பாயிரச்சருக்கம் ... ... | ௧ |
| 2. | குமரன் உபதேசச் சருக்கம் ... | ௧௬ |
| 3. | குமரன் தவசுச் சருக்கம் ... | ௪௨ |
| 4. | சிபிவேந்தன் பூதானச் சருக்கம் ... | ௬௮ |
| 5. | பிரமகூவச சருக்கம் ... | ௮௭ |
| 6. | தலவிசேடச் சருக்கம் ... ... | ௧௦௨ |
| 7. | அரிச்சந்திரச் சருக்கம் ... ... | ௧௧௦ |
| 8. | திருவிழாச் சருக்கம் ... ... | ௧௨௫ |
| 9. | நற்கீரச் சருக்கம் ... ... | ௧௩௯ |
| 10. | சூரசங்காரச் சருக்கம் ... ... | ௧௪௭ |
| 11. | திருக்கலியாணச் சருக்கம் ... | ௧௫௬ |

உயர்தரநீதி மன்றவாதி, திருவாளர்

## சோமசுந்தர பாரதியாரவர்கள் எழுதியது.

திருப்பரங் குன்றமென்னுந் திருப்பரங்கிரிப் புராணத்தைச் சேற்றூர் ஆத்தான வித்துவானும், மதுரை நான்காந் தமிழ்ச்சங்கப் புலவருமாகிய திருவாளர் மு. ரா. அருணாசலக்கவிராயரவர்கள் பதிப்பாசிரியராயிருந்து பழைய ஏட்டுச் சுவடிகளைப் பரிசோதித்துப் பிழை நீக்கி புரையெழுதி வெளியிடுகின்றவர்கள் என்னை அதற்கொரு முன்னுரை யெழுதும்படி விரும்பினார்கள். அவர்கள் விருப்ப மகற்றுணைப் பணியாதலால் பிறிது தகவின்றியும் அப்பணியை மேற்கொள்ளலானேன்.

குன்றமெறிந்த குமரவேள் பரங்குன்றம் தமிழகத்திற் பண்டைப் பழம்பதிகளிலொன்றாகும். என்று தொட்டு மதுரையோ அன்று தொட்டு, இக்குமரன்குன்றமுந் தமிழ்நாட்டில் தலைநின்ற புகழ் கொண்டுள்ளது. சங்கப்பாக்களில் நின்று நிலவுவது. ஆதியறியப் படாத பழைய பாண்டியர் தமிழோடு தோன்றி அப்பாண்டியர் புகழென வளர்ந்துவருவது. தமிழ்க்கடவுளான முருகவேள் கலியுக வரதராய்த் தம்மை வழிபடுவார்களுக்கு வேண்டிய இட்டசித்திகளெல்லா மீந்தருளுதற் சிறப்புறுவது. தன்னினவரைகளுக் கிடரிழைத்த இந்திரனை வணங்கி, அவன் மகளோடு வந்து குறையிரக்க அவ்விறை வேலவனை யிணக்கி அவனுக்குந் தன்னினவரைகளுக்குந் தேவர் முதலிய யாவருக்கு மகிழ்ச்சி விளைவித் திறுமாப்பது. இம்மட்டோ கறைமிடற்றிறைவர் நெற்றிக்கண்ணை யஞ்சாத மெய்ப்புலவன் றமிழ்வேட்ட குமரனுக்குத் துணைநின்று, அப்புலவனாகிய கீரனுக்குச் சிறைபோல நல்வசதியு முதவி அவன் முருகாற்றுப்படை நிதியைத் தமிழினுக்குத் தந்த பெருவள்ளன்மை வாய்ந்து நிற்பது. சங்கத்தார் தமிழ்மணக்கத் தானிதமுந் தமிழ்ச்செய்யுட் சுவைபருகிப் புலவர்குழாம் புகுநிலைய மாயிருக்கும் புனிதக்குன்றம்.

இப்பழம்பதியி னென்றும் விளையாடிவரு முருகவேள் தமிழர் பழங்கடவுள். முனிவரொடு தேவர்களுக்கு மனிதர்களுக்குங் கனியுமுளம் அருள்சுரக்க இனிய வரமனைத்தையும் அனவரதமுதவு முதற் கடவுளெனப் புலவர் பலர் நிதம் வாழ்த்த அவர் தமிழுக்குத் தெய்வமாகும். பிரமனுக்குப் பிரணவப்பொருளை விளக்கி அவன் படைப்புத்தொழிலியற்றப்பணித்த தேவன். இந்திரனும் உபேந்திரனும்

விழைந்து மகட்கொடைநேர அவர் மக்களிருவரையு மனிதர் மனை யறஞ் சிறக்க மணந்து மணவற நிறுவிய தெய்வம். கீரனுரை கேட்க வாயற்ற வொருபுலவனுப் சங்கத்தில் வந்தருளி அகப்பொருளினும் பொருளை யவன் விளக்கச்சிரந்துளக்கியுவந்த மூர்த்தி. மூங்கைய ராய்ப்பிறந்த இளங்குமரகுருபரரைத் தமிழ்பாடச்செய்து மகிழ்ந்த தெய்வச்செம்மல்.

இச்செவ்வேள் வாழும் இத்தெய்வக்குன்றத்தின் பெருமை யினைத் திரட்டி, அவன் விரும்புந் தமிழ்ச் செய்யுளினிற் றருவதே திருப்பரங்கிரிப் புராணமாகும். இதைச் செய்தவர் ஸ்ரீ நிரம்ப அழகிய தேசிக ரென்னுந் தமிழ்ப் பெரும்புலவர் திலகமென்ப. இவர் செய்த சேதுபுராணச் சிறப்பும் சிவஞானசித்தியாருரைநலச்செவ்வியுந் தமிழகமறிந்த செய்திகள். இப்பெரியார் பரங்கிரிப்புராணத்தைப் பாடினாரென்றபோது அதற்கொரு முகவுரை வேண்டற்பாற்றதன்று.

இனி நடைப்போக்கினும் பொருளாழ்ச்சியினும் சேதுபுரா ணத்தினின்றும் பிறிதிசைப்பதாகக் காண்பவர்கள் காலதேச வர்த்த மானங்களால் புலவர் மனோபாவம் வேறுபடு மியல்பையும் எடுழுது பவர் இயலளவில் நாலியலு மொரோவிடத்தில் மாறுபடு முண்மை யையுங் கருதுவரே லொருவாறமைதி பெறலாகும்.

தமிழிலே தற்காலத் தனிகருக்கும் இப்பழம்பதி *அத்தியட்சர் பலருக்கும் இருந்துவரும் நொதுமல் நிலையினைவுகளைக் கருதுங்கால் இறப்பின் வாய்ப்பட்ட இப்புராணத்தை மீட்டிப் புத்துயிர் தந்து, அதனை யிவ்வுருவில் வெளிவந்துலாவச் செய்த புலவராகிய மு. ரா. அருணசலக்கவிராயரவர்களின் தமிழார்வமும் தன்னல மறுப்பும் தமிழ்த்தொண்டும் இணையனவென விளங்கும் இப்புராணம் இப்போது வெளிப்படுத்தப்படா தொழியின் இஃது அறவே யறைபடலாகு மென்பதற் கையமில்லை. புத்தம்புதிய புலவர் போலாமல் தொன்று தொட்டுத் தமிழொடு நின்று வளரும் பரங்குன்றப் பழம்பதிக்குப் பாவலசிகாமணியாகிய நிரம்ப அழகிய தேசிகர் பாடித்தந்த இப்புரா ணத்தைப் படித்துமகிழப் பிறிது தூண்டுதல் வேண்டா. இருமையு மினிதுதரு மிதனைத் தமிழர் தகவறிந்து போற்றுவரென்று நம்புகிறேன்.

---

* அத்தியட்சர்-மேல்விசாரணை செய்வோர்.

# பதிப்புரை.

திருக்கயிலாசபதியாகிய பரம்பொருளா லருளிச்செய்யப்பட்ட வேதவாக்கியங்கள் கவர் பொருள்பட்டுச் சந்தேகிக்க நின்ற இடத்துப் புராண இதிகாசங்களைக்கொண்டு நிர்ணயஞ் செய்யவேண்டுமென்று சிவமகா புராணத்திலுள்ள வாயு சங்கிதை பூருவ பாகம் முதலாவது அத்தியாயங் கூறுகின்றதை யுணர்ந்த மேதாவிகள் வேதத்தினும் புராணம் மிகுந்த பலமுடையதென்று சொல்ல ஒரு சிறிதும் பின்னிட மாட்டார்கள்.

இத்தகைய மகத்துவம்பெற்ற புராணம் பதினெட்டனுளடங்கிய கந்த புராணத்தும், சைவ புராணத்துஞ் சிவசொரூபமென்று சொல்லப்பட்ட திருப்பரங்கிரி மான்மியத்தையும், அத் திருப்பரங்கிரியே தமது முதற்படை வீடாக எழுந்தருளியிருந்து தெய்வயானை யம்மையைத் திருமணஞ்செய்த கலியுகவரதராகிய முருகக்கடவுள் அற்புதத் திருவிளையாடல்களையும், திருப்பரங்கிரியிலுள்ள தீர்த்தம் மூர்த்தி விசேடங்களையுந் திரட்டி வடமொழியினின்றுந் தென்மொழியில் விருத்தப் பாக்களாகத் திருப்பரங்கிரிப் புராணமெனப் பெயரிட்டுத் திருப்பரங் கிரியில் மடாதிபதியாயிருந்த சைவாசாரியராகிய நிரம்ப அழகிய தேசிகர் பாடியருளினர். அவர் பாடிய காலம் நூற்றுக்கணக்காக நீண்ட காலமெனக் கன்னபரம்பரையில் தெரிவதல்லாமல் வரையறுத்துத் தெரிய முடியவில்லை. அவர் செய்த சேதுபுராணத்தையும், திருவையாற்றுப் புராணத்தையும், சிவஞான சித்தியாருரையையும் தேடிப் பார்த்ததிலும் அவைகளில் அவர் பெயர் மாத்திரங் காணப் படுதலன்றிக் காலங் காணப்படவில்லை. அவருக்கு வருடந்தோறுங் குருபூசை துளாவூரிலிருந்து செய்துவருகிற அவர் * சந்ததியாரைக் கேட்கும்போது அவர்கள் சேது சமஸ்தானத்திலிருந்து தேசிகருக்குத் துளாவூர் முதலிய சில கிராமங்களும் திருப்பரங்கிரி மடமுந் தான மாகக் கொடுக்கப்பட்ட சாதனத்திற் காலங் காணலாமென்றும் அச் சாதனம் வெளிப்படையாயில்லை யென்றுஞ் சொல்கிறார்கள். நிற்க.

---

* தற்போது பட்டத்திலிருக்கிற ஸ்ரீ பால உதயமூர்த்தி தேசிகரவர்களும், ஸ்ரீ ஆர். மாணிக்கவாசக தேசிகரவர்களும், பிறரும்.

ஏட்டுச் சுவடிகளில் இலைமறை காய்போல் மறைந்திருந்த இப் புராணத்தைத் திருப்பரங்கிரி ஸ்ரீ நாராயணசரணரவர்கள் 46 வருடங்களுக்குமுன்னர்த் தேடியெடுத்துக் காரைக்காலுக்குக் கொண்டுபோய் அச்சிற் பதிப்பித்துப் புத்தக வடிவமாக்கி வெளிவந்துலாவச் செய்தார்கள். அப் புத்தகத்தைச் சற்றேறக்குறைய 30 வருடங்களுக்கு முன் யான் வாங்கிப் படித்துச் சாமானியமாகப் படித்தவர்களுக்குப் பற்பல பாடல்களில் பொருள் விளங்காமலிருக்கக் கண்டு, இப் புராணத்தின் அருமைபெருமைகளை எல்லாருந் தெளிவாகத் தெரிந்து நம் குமாரக் கடவுளை வழிபாடுசெய் துய்யும்பொருட்டு எளிய நடையிலொரு வசனமெழுதி, யான் பாடிய பரங்கிரிப் பிள்ளைத்தமிழுடன் சேர்த்து, அச்சிற் பதிப்பித்து வெளிப்படுத்தினேன். அப்புத்தகமும் தற்காலம் படிப்பவருக்குக் கிடைப்பதரிதாயிருக்கின்றது.

இதைத் தெரிந்து திருப்பரங்குன்றம் சைவவேளாளர் மரபினராகிய ஸ்ரீ நா. முத்துப்பிள்ளையவர்கள் நம் குமாரக்கடவுள் பத்தி முதிர்ச்சியால் இப்புராணம் உரையோடிருந்தால் எல்லாருந் தெளிவாகப் படிக்கலாமென்றெண்ணி இப்புராணத்துட் கூறும் *சதுர்வேத மங்கலம் வித்துவான் ஸ்ரீ ஆறுமுகம் பிள்ளையவர்களை ஓருரை யெழுதுப்படி வேண்டிக்கொள்ள, அவர்களு மதற்கிணங்கி 2 ஆவது சருக்க முதல் 9 ஆவது சருக்கம் வரை பொழிப்புரை யெழுதிவரும்போது தமக்கு நேர்ந்த அசௌகரியத்தால் எழுதாது விடப்பட்ட 3 சருக்கங்களுக்கும் என்னை உரையெழுதச் சொன்னதுடன் தாமெழுதிய உரையைத் திருத்தமுஞ்செய்து அச்சிட்டு வெளிப்படுத்துக என்று சொல்லிக் காலஞ்சென்றுவிட்டார்கள். அவர்கள், நான் திருப்பரங்கிரி வாசியாக வந்திருந்த நாள்முதல் கல்வியாராய்ச்சியில் உசாத்துணையாயிருந்த நண்பராதலால் அவர்கள் கட்டளையை மறுக்காமற் சம்மதித்துக்கொண்டிருந்ததையறிந்த மேற்குறித்த நா. முத்துப்பிள்ளையவர்கள் இந்த வேலையைத் தங்கள் காலத்திலாவது பரோபகார தருமமாக முற்றுப்பெறச் செய்யவேண்டுமென் றென்னை வற்புறுத்தி வந்தார்கள். இவர்கள் போலவே இந்நகரவாசிகளாகிய சிவநேசச் செல்வமிக்க பெரியார் பலரும் வற்புறுத்தி ஊக்கமூட்டினார்கள்.

---

* சதுர்வேதமங்கலம் - கூத்தியார்குண்டு.

இத்தன்மையவாகிய வேலைகளைச் செய்வது நம் கடமையெனக் கைக்கொண்டு காலங் கழித்திருக்கின்ற எனக்கு அவர்கள் சொன்னது சருக்கரைப் பந்தலில் தேன்மழை பெய்ததுபோ லிருந்ததனால் மிக மகிழ்ச்சியுற்றுப் பரங்கிரிப்புராண ஓலையேட்டுச்சுவடி தேடும்போது மேற்குறித்த ஆறுமுகம்பிள்ளையவர்க ளருமைச் சகோதரராகிய ஸ்ரீ. அபிஷேகசுந்தரம் பிள்ளையவர்கள் தாம் சேமித்து வைத்திருந்த நெடுங்காலஞ்சென்ற மிகப்பழைய ஏட்டுச் சுவடியொன்று கொண்டு வந்து கொடுத்தார்கள். அவர்கள் செய்த உதவி காலத்திநாற் செய்த நன்றியாயிருந்தது.

அதன்மேல் ஏட்டுச் சுவடியையும் அச்சுப்புத்தகத்தையும் ஒத்திட்டுப்பார்த்து வேண்டிய இடத்து மூலத்தைத் திருத்தமாக்கி யானெழுதிய வுரையையும் பிள்ளையவர்களெழுதிய வுரையையுஞ் செப்பஞ்செய்து வைத்துக்கொண்டு, அச்சிடுதற்கு வேண்டுந் திரவிய சகாயங்கருதி அறிக்கைப்பத்திர மொன்றெழுதி யச்சிட்டு, அன்பர்கள் பலருக்கு மனுப்பிப் பொருள்வருவாயை யெதிர்பார்த்துக்கொண் டிருந்தேன். ஐந்தாறு மாதங்கள் சென்றபின் திருப்பரங்குன்றம் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம்பிள்ளையவர்கள் மனத்தொடு வாய்மை நிரம்பிய சிவநேசச் செல்வர்களாதலால் 'சிலஞ் சிறந்த நீ காலங்கடவாமல் இப்புராணம் அச்சிடும் வேலையைச் சீக்கிரந் தொடங்குவது நல்லது' என்று திரமுறும் உறுதியாகவுபசாரவார்த்தை கூறிச் சிறிது பொருளுதவியுஞ் செய்தார்கள். அவர்கள் வார்த்தை "மூத்தோர்சொன்ன வார்த்தை யமிர்தம்" என்ற முதுமொழிக்கிணங்கி யிருத்தலால் அச்சிடும் வேலையை யாரம்பித்தலும், முதலிற் சிறிது நிதி அவர்கள்கொடுத்த அன்பு விசேடத்தால் மற்றை மெய்யன்பர் களிற் சிற்சிலர்பட்டுந் தங்கள் தங்களாலியன்ற திரவிய சகாயங்களை யடுத்தடுத்துச் செய்துவந்தார்கள். அவர்கள் ஊர், பெயர், பொருட் டொகைகளைச் சாற்றுக்கவிகளுக்குப் பின்பக்கத்தி லெழுதிக் காட்டு வேன். ஆவ்விடத்துக் கண்டுகொள்க.

மேற்குறித்தவாறு நன்கொடையாகக் கிடைத்த பொருள் புராணம் அச்சிடுதற்குப் போதியதின்மையானாலும், அதையே யாதாரமாக வைத்துக்கொண்டு, அச்சு வேலை பயின்ற வேலைகளை

சாக்ஷாத் ஆறுமுகப்பெருமான் திருவருட் பலத்தால் முடித்துப் புத்தகத்தை வெளியிட்டுள்ளேன். யானெழுதிய உரை முதலிய வேலைகளிற் குற்றங் காணுதலெளிது. குணங்காணுதலரிதாயினுங் கற்றறிந்தார் குற்றத்தைத்தள்ளிக் குணத்தைக் கொள்ளவேண்டுமென்று, அவ ரெல்லாரையும் வணக்கத்துடன் பிரார்த்திப்பதோடு நன்கொடையாகப் பொருளுதவி செய்த அன்பரனைவருக்கும் நீண்ட ஆயுளும் வேண்டிய சகல சம்பத்தும் நம் கந்தக்கடவுள் முந்தச்செய்தருளவேண்டுமென்று சிந்தைத் தியானத்தில் வந்தித்து வாழ்த்துகின்றேன்.

இங்ஙனம்
மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்
மு. ரா. அருணாசலக் கவிராயர்
திருப்பரங்குன்றம் போஸ்டு.

---

# முகவுரை.

மதுரைத் தமிழ்ச்சங்கம் தலைமைத் தமிழாசிரியரும்,
செந்தமிழ்ப் பத்திராசிரியருமாகிய பிரமஸ்ரீ
திரு. நாராயண ஐயங்காரவர்கள் எழுதியது.

உலகின்கட் டோன்றிய மக்களுயிர்கள் நன்று தீதுணர்ந்து உய்யும்பொருட்டு இறைவனருளிய கலைகளின் றொகுதியை அட்டாதச வித்தையென ஆன்றோர் வழங்குவர். அவ்வித்தைகளாவன:— வேதம் நான்கு, வேதாங்கம் ஆறு, உபாங்கம் நான்கு, உபவேதம் நான்கு என்பனவாம். அவற்றுட் புராணமென்பது உபாங்கமென்னும் பகுதியைச் சார்ந்ததாய் உரைக்கப்படும்.

புராணமென்னுஞ் சொல் பழைமையுடையது என்னும் பொருட்டு, அதனை ஈண்டுப் பழைமைசான்ற வரலாறுகளுரைக்கும் நூலுக்கேற்றி வழங்கலாயிற்று. இனி, அப் புராண நூல்கள் உலகத்தின் றோற்றம், ஒடுக்கம், முனிவர் அரசர்களின் வழிமுறை, அவர்கள் சரித்திரம், மந்வந்தரம் என்னும் ஐந்து விஷயங்களும் தம்பால் விரவிவருதலை இலக்கணமாகவுடையன வென்பர்.

ஆகவே புராணங்களென்பன மறைகளின் வழிவந்த மாண்புடையன வென்பதும், புண்ணிய மளிக்கும் புராதன கதைகளை வாயிலாகக் கொண்டு அவை நான்மறைப் பொருளினை நன்கு விளக்கும் இயல்பின வென்பதும் ஒருவாறு போதரும். இங்ஙனம் வெளிப்படையான பொருளுடைமையாலேயே அவைகளை யாவரும் விரும்பிக் கற்றற்கு முற்படுகின்றனர். அப்புராணங்கள் தம்மைக் கற்பார்க்கு இருமைப் பயனும் ஒருங்களிக்க வல்லனவென்பது பலரும் கண்டறிந்த உண்மையேயன்றோ? அது நிற்க. இத்தகைய இலக்கணமமைந்த புராணங்கள் பதினெட்டெனக் கணக்கிடப்படுவனவாம். அவை யாவும் வடமொழிக்கண் வேதவியாச முனிவராற் செய்யப்பெற்ற பெருமையுடன் விளங்குகின்றன. அப்பதினெண் புராணங்களுள், இறைவன் திருக்கோயில் கொண்டருளும் சிற்சில தலங்களின் மான்மிய முரைக்கும் பகுதிகளும் உள்ளன. அவ்வப்பகுதிகளைத் தனித்தனியே

வேறு பிரித்து, அவ்வத்தலங்களின் பெயரோடு சார்த்திப் பிற்காலத் தான்றோர் அவற்றிற்குத் தலபுராணமெனப் பெயர்வழங்கலாயினர். புராணங்களின் பகுதியவாதலால் அவற்றிற்கும் புராணமென்ற பெயர் பொருத்தமுடைத்தென்றே கொள்ளற்பாலது.

அஃதொருபுறமிருக்க; வடமொழியின் வழிநூல்களாய்த் தென் மொழியினும் செய்யுள்வடிவில் யாக்கப்பெற்று இத்தலபுராண இலக்கியங்கள், பிற்காலத்தில மிகவிரிந்து பரவுதலுற்றன. சேது புராணம், காஞ்சிப்புராணம், தணிகைப்புராணம், திருக்குற்றாலப் புராணம் போல்வனவற்றை அவற்றுள் முதன்மையவாகக் குறிப்பிட லாம். அவையாவும் தமிழ்மக்களிடையே கல்வியறிவொழுக்கங்களை நாளும் வளரச்செய்து அவர்களை நற்கதிக்கட் செலுத்திப் பயனுடைய வாவனவென்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை.

இனி, இத்தகைய தமிழிலக்கியங்களுள், திருப்பரங்கிரிப் புராணமும் ஒன்றென்பது இங்கு அறியத்தக்கது. இதுவும் சேது புராண ஆசிரியராகிய நிரம்பவழகிய தேசிகராலேயே இயற்றப்பெற்ற பெருமையுடன் திகழ்கின்றது. திருப்பரங்கிரியின் தெய்வப்பெருமை யைப் புராண முறையாகப் போற்றியுரைத்தலின் இஃதப்பெயர்த்தா யிற்றென்பது களிதின் விளங்குவதாம்.

திருப்பரங்கிரி யென்பது சைவசமயாசாரியராகிய திருஞானசம்பந் தப் பெருமானது தேவாரமும், சுந்தரமூர்த்தி நாயனாது தேவாரமும் பெற்ற தலங்களுள் ஒன்று. அன்றியும், அது முருகப்பிரான் கோயில் கொண்டருளும் ஆறுபடை வீடுகளில் ஒன்றாய்ச் சிறப்பிக்கப் பெறுவது; திருமுருகாற்றுப்படை, பரிபாடல், அகநானூறு முதலிய சங்க நூல்களால் தக்கவாறு புகழப்படுவது. அருணகிரியார்போன்ற ஆன்றோர்களாலும் மிகுந்த ஈடுபாட்டுடன் ஏத்தற்குரியது. மற்றும் இதன் மேம்பாடுகளனைத்தும் ஈண்டு விரித்துரைப்பிற் பெருகும்.

இனி, அப்பரங்குன்றத்தின் சிறப்பினை யெல்லாம் ஒருகாற் சிவ பெருமான் திருநந்திதேவருக்கு உபதேசிக்க, அவர் சனற்குமார முனிவர்க்கு அருளிச்செய்தார். அவரும் அச்சீரிய பொருள்களை வியாசமாமுனிவர்க்கு வெளியிட்டருள, வியாசர் சூதமுனிவருக்குச் சொல்ல, அச்சூதமுனிவரும் அவற்றை நைமிசவனத்து இருடி

கணங்களுக்கு விரித்து உரைத்தருளினார். இங்ஙனம் வரலாற்று முறையான் வந்த பொருளை வடமொழிப் பதினெண் புராணங்களிற் சைவம், காந்தம் என்பனவற்றோடு இயைய இனிய செந்தமிழ்ப் பாக்களால் இத்திருப்பரங்கிரிப் புராணம் இயற்றப்பெற்றதாகும்.

அதனுள், திருப்பரங்கிரியின் சிறப்பினைப் பின்வருமாறு காணலாம். ஒரு காலம் திருக்கைலாயத்தில் சிவபெருமான் பஞ்சாக்கர மந்திரத்தை உமாதேவியார்க்கு உபதேசித்தருளினார். அப்பொழுது அன்னையின் மடிமீதமர்ந்த குமாரக்கடவுள் அதனை ஒளித்திருந்து கேட்கநேர்ந்தது. குருமுகமாகவன்றி அங்ஙனம் மந்திரப்பொருளை மறைவினிற்கோடல் குற்ற முடைத்தாகலான், அவ்வுண்மையை உலகினுக் குணர்த்துதற்பொருட்டு அவர் பரங்குன்றீசரை வழிபட்டு அப் பாவத்தின் நீங்கினார். அது நிற்க சிபிச்சக்கரவர்த்தி பூதானஞ் செய்கின்ற காலத்து அதனைப் பெறுதற்குரிய அந்தணரொருவர் குறைபட்டமை கண்டு அளவிலாத் துயரமெய்தி நின்றான். அப் பொழுது பரங்கிரிப்பெருமான் ஒரு பார்ப்பனக்கோலத்துடன் தான மேற்று அவனுக்கு அருள் புரிந்தனர். அன்றியும், நான்முகக் கடவுள் நாமகளை மணம்புரிந்துகொண்டு அப்பரங்குன்றிற்றானே பிரம தீர்த்தத்தை உண்டாக்கினார். சாபவசத்தாற் குட்டநோயுற்ற அரசனொருவன் ஆங்குப் பிரமகூபமென்னுந் தீர்த்தத்துட் படிந்து பிணி நீங்கியவனானான். அரிச்சந்திர ராஜன் சத்திய கூவத்துள் நீராடி முருகக் கடவுளுக்குத் திருவிழா இபற்றி அவரருளாற் சத்தியவாக்குடன் முத்தியும் பெற்றனன். அவையேயன்றி, மற்றொருசமயம் அக்கடவுள் தமிழ்நர் பெருமானும் நக்கீரதேவரைத் திருமுருகாற்றுப்படை பாடச் செய்து அவரைச் சிறையினின்றும் விடுவித்தருளினார். சூர சங்காரம் செய்தபின்னர் அக் குமரப் பிரானார் திருப்பரங்கிரியிலேயே தங்கித் தெய்வயானை யம்மையைத் திருமணம் புரிந்து, தம்மை வணங்கினார்க்கெல்லாம் இட்டசித்தியளித்து, மணக்கோலத்துடனேயே என்ஞான்றும் வதிந்தருளுகின்றனர். இவ் வரலாறுகள்முதலாயினவெல்லாம் இந்நூலுள் மிகத் தெளிவாக விரித்துரைக்கப் பெறுவனவாம்.

இனி, இந்நூலை இயற்றியருளிய சிரம்ப வழகிய தேசிகரென்பார் வேதாரணியமென்னும் திருமறைக் காட்டில் சைவவேளாளர் குலத்

திற்றோன்றியவர். தமிழ்நூற் கடலை நிலைகண்டுணர்ந்து வடமொழியினும் வல்லுநராய்த் திருக்கூட்டத்தார் மரபிற்குத் திலகமாய் விளங்கியவர். சித்தாந்த சாத்திரப் பயிற்சியிற் றம்மையொப்பார் பிறரின்றி, சிவஞானசித்தியார் திருவருட்பயன் முதலிய நூல்கட்கு அரும்பெற லுரைவகுத்துப் பெரும்புகழ்படைத்த புலவர் சிகாமணியாய்த் திகழ்ந்தவர். சொற்பொருள் வளங்களும் கற்பனை நயங்களும் வாய்ப்புடையவாகுமாறு சீரிய செந்தமிழ்ப்பாடல்களியற்றும் ஆற்றல் பெரிதுடையவர். இப்பெற்றியெல்லாம் நோக்கி இவர்பாடிய சேதுபுராணம் தமிழ் மக்களிடைப் பெருமதிப்புற்று விளங்குதல் கற்றோர் பலரும் நன்கறிந்தது. அங்ஙனமே இத்திருப்பரங்கிரிப் புராணமும் அறிஞர்கட்கு ஓர் அருவிருந்தாகுமென்பதில் ஐயமில்லை.

பஞ்சநதமென்னும் திருவையாற்றுப் புராணமும் இப்பெரியார் இயற்றியருளியதேயென்பது அந் நூலேட்டுச் சுவடியொன்றால் அறியக்கிடக்கின்றது. இவர் கருணைஞானப்பிரகாசரிடம் சிவதீக்ஷை பெற்றவரென்றும், திருப்பரங்கிரியில் மடம் அமைத்துகொண்டு நெடுங்காலம் வசித்திருந்தவரென்றும், பரஞ்சோதி முனிவரோடு உடன்பயின்றவரென்றும் இவரது வரலாறுணர்ந்தோர் கூறுவதுண்டு.

இத்தகைய புலவர்பெருமான் அருளிய இந்நூல் உரையொடு இதுகாறும் அச்சியற்றப்பெறாத குறை மிக மிக வருந்துதலுடைத்து. அதனை இஞ்ஞான்று நீக்குவான் முற்பட்ட அன்பர் ஸ்ரீமாந் மு. ரா. அருணாசலக் கவிராயரவர்களின் செய்ந்நன்றி சிறிதும் மறக்கற்பாலதன்று. தமிழன்னையின் உண்மைப் புதல்வர்களாய், அவட்குத் தளர்ச்சி வாராமற் காக்கும் தகவுடையவர்களிற் கவிராயரவர்கள் மிகச் சிறந்து நிற்றற்குரியவர். மதுரைத் தமிழ்ச்சங்கத்து நூற்பரிசோதகராயமர்ந்து பன்னெடுநாள் உழைத்த பிற்பாடு மிகத் தளர்ச்சியுற்று வயது முதிர்ந்த இக்காலத்தும அவர்கள் எத்துணையோ பல தமிழ் நூல்களைப் பரிசோதித்தும், உரைவகுத்தும், தாமே புதிதாய் இயற்றியும் வெளியிட்டு வருதலை நினைக்க நினைக்க மகிழ்ச்சி மீதூருகின்றது. ஆயினும் அவர்கள் பரம்பரையின் பெருமையை நோக்குமிடத்து, அஃதவர்கட்கு ஒரு வியப்பன்று; இயற்கையினமைந்ததே என்பது நன்கு விளங்குகிறது.

"இருவிணிடை யேழிருடி யினமீன்க ளுடங்கிலங்க
லென்ன விண்ணிற்
பெருகுபுக * ழெழுபுலவ ரொருகுடியி லொருங்குமிகப்
பிறங்கி னரால்"

என இவர்களது குடிப்பெருமை பாராட்டப் பெறுவதும் ஈண்டுக் குறிப்பிடற்பாலது. அது நிற்க.

இத் திருப்பரங்கிரிப் புராணத்தைப் பிழையறப் பரிசோதித்து அச்சிடுதல் மட்டுமன்றி அழகுக்கழகு செய்வார்போலக் கவிராயரவர்கள் இதற்குச் சீரிய பொழிப்புரையும் எழுதியுதவியுள்ளார்கள். இந் நூலினையும் உரையினையும் பயிலுந்தோறும் அவை சுவை மிகுதி பயக்கின்றன. அவ்வின்பத்தைப் பிறரும் பெறவேண்டுமே என்ற பெருவிருப்பம் மனத்தினுட் குடிகொண்டு நிற்கின்றது. ஆகலின் இந் நூற்கல்வியானுய பயனை எல்லோரும் எய்துமாறு இறைவன் திருவருள் புரிவாராக.

---

* எழுபுலவர்—சேற்றூர்ச் சமஸ்தான வித்வான் மு. கந்தசாமிக் கவிராயரவர்கள், அவர்கள் குமாரர் திருவாவடுதுறை யாதீனம் பழநிக் குமாரத் தம்பிரான் சுவாமிகள். மீனாக்ஷிசுந்தரகவிராயரவர்கள், ஷை கந்தசாமிக்கவிராயரவர்கள் சகோதரர் மு. இராமசாமிக் கவிராயரவர்கள், ஷை யார் குமாரர் மு. ரா. அருணாசலக்கவிராயரவர்கள், மு. ரா. சுப்பிரமணியகவிராயரவர்கள், மு. ரா. கந்தசாமிக்கவிராயரவர்கள் என்பார்.

# அபிப்பிராயம்.

---

## திருக்குற்றாலத்துப்பக்கமிருக்கிற வேள்ளகால் வித்துவான் ராவ் சாகிபு பட்டம் பெற்ற ஸ்ரீமாந்.

## வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்க ளெழுதியது.

மதுரைமாநகரத்துப் பக்கத்தில் தலம், தீர்த்தம், மூர்த்தி விசேடங்களிற் சிறந்து தேவாரப்பதிகம்பெற்ற திருப்பரங்கிரிப்புராணம் உரையுடன் அச்சிடப்பெற்றிருக்கின்றது. அதிற் சில பகுதிகளைப் படித்துப் பார்த்து மிகுதி மகிழ்ச்சியடைந்தேன். இந்தப் புராண நூலாசிரியர் ஸ்ரீ நிரம்ப அழகிய தேசிகர். உரையாசிரியர் திருவாளர் மு. ரா. அருணாசலக்கவிராயர். கற்றோரிற் பெரும்பாலர்க்கு மனப்பாடமான

வஞ்சகத்தி லொன்றானைத் துதிக்கைமிகுத் திரண்டானை
 வணங்கா ருள்ளே
அஞ்சரண மூன்றானை மறைசொலுநால் வாயானை
 யத்த னாகித்
துஞ்சவுணர்க் கஞ்சானைச் சென்னியணி யாறானைத்
 துகளி லானைச்
செஞ்சொன்மறைக் கெட்டானைப் பரங்கிரிவாழ் கற்பகத்தைச்
 சிந்தை செய்வாம்.

என்ற பாட்டு, இத்தலபுராணப் பாயிரச் சருக்கத்துள்ளது. இவ்வொரு பாட்டைப் படித்தார் நூல் முழுவதையும் படிக்க விரும்புவாரென்பது திண்ணம். கவிராயரவர்கள் மிகப் பல செய்யுள் நூல்களும் உரை நூல்களும் இயற்றி வெளியிட்டுள்ளவர்கள். இவர்களது செய்யுள் நடையும் உரை நடையும் மிக்கதெளிவும் தக்க இனிமையும் வாய்ந்தவை யென்பது அவ்விருவகை நூல்களையும் பார்வையிட்டார் அறிந்தது. அவர்கள் இந்நூலுக்கெழுதியிருக்கிற உரை, பாட்டுக்களின் பொருள்களை எல்லாரும் எளிதாக அறிந்துகொள்ளும்படி

மிகவுந் தெளிவாயிருக்கின்றது. இந்த உரையைத் துணையாகக் கொண்டு சிறிது கல்வி பயின்றவர்களும் புலமை நிரம்பியவர்கள் போலக் கவிக்கருத்தறிந்து பயனடையலாம்.

கவிராயரவர்கள் கவிச்சுவையும் பத்திச் சுவையுங் கனியப்பாடி வெளியிட்டிருக்கின்ற இந்தத் தலத்தைப்பற்றிய எட்டுப்பிரபந்தங் களையும் இத்தலபுராணத்தையும் படிப்போர் முருகப் பெருமான் மெய்ப்பத்தியும் இலக்கிய விற்பத்தியும் ஒருங்கே முதிர்ச்சியுறப் பெறு வார்கள். இன்னும் பல நூல்களையும் உரைகளையும் வெளியிட்டுத் தமிழுலகத்துக்கு உதவிவரும்வண்ணம் கவிராயரவர்களுக்கு நோயற்ற வலிய உடல் நலமும் தளராத மதிநலமும் நீடிய ஆயுளும் அருளுமாறு எல்லாம் வல்ல இறைவனைச் சிந்தித்து வந்தித்து வாழ்த்தி வேண்டிக் கொள்கின்றேன்....

# சாற்றுக்கவிகள்.

மதுரைத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் ஆதீனவித்துவானும்,
மதுரை செயிண்டுமேரிஸ் ஐஸ்கூல் தமிழ்ப்பண்டிதருமாகிய

## பிரமஸ்ரீ மு. கோவிந்தசாமி ஐயாவர்களியற்றியவை.

பூவள ரயன்மால் புரந்தரன் போற்றப்
புராரியின் விழியனற் பொறியாய்
மேவியங் கமலச் சரவணம் புகுந்து
வியன்மக வறுவராய் விளங்கி
யாவரோ டன்னை யணைக்கவொ ருடலும்
ஆறுமா முகமுமீ ராறு
தாவரு கரமும் வயங்கவே வளர்ந்த
தயாநிதி யெனைப்புரந் தருள்வோன். (1)

பங்கயன் சிரத்தைப் புடைத்தவன் செருக்கைப்
பறித்துநுண் பிரணவப் பொருளைச்
சங்கரற் கோதிக் குன்றினைப் பிளந்து
தாரகன் றலையினைத் தகர்த்த
அங்கரத் தயிலாற் சூரனை வீழ்த்தி
யமரரை வான்குடி யேற்றி
மங்கல பாகத் தேவகுஞ் சரியை
மணம்புரிந் தாண்டநற் றலமாம். (2)

வழுவிலா வளஞ்சேர் பரங்கிரிப் பதியின்
மான்மிய மதனைவண் டமிழி
லழகுறுஞ் சுவைக ளமைதர நிரம்ப
அழகிய தேசிக ருரைத்தார்
செழுமைகொண் டன்னார் செப்பிய பொருளின்
றிறங்களை யங்கையி னெல்லிப்
பழமென யாருந் தெள்ளிதி னுணரப்
பகர்ந்தனன் பொழிப்புரை யினிதே. (3)

துன்னவன் றானும் யாரெனி லாறு
　　ரனாறுகல் லாலடி யமர்ந்தே
யுன்னருந் தவத்தோர் நால்வருக் குண்மை
　　யுணர்த்தல்போ லுலகெலா முணர
மன்னுநல் வளஞ்சால் ஆவடு துறையின்
　　மாதவ முனிவராய் வந்து
துன்னிய * நமச்சி வாயதே சிகராந்
　　துறவியர் வேந்தெனுங் கடலில். (4)

எண்ணுதீந் தமிழிற் சைவசித் தாந்த
　　மிலக்கிய மிலக்கண மென்னு
மூண்ணுநீர் பருகிக் கவிமழை பொழியு
　　மொருமுகி லென்னனை யார்க்குக்
கண்ணிகர் நண்பன் பரம்பரைக் கவிஞன்
　　கண்ணுத லடியிணை மறவாப்
புண்ணிய னருணா சலக்கவி ராயன்
　　புலவருக் கணியனை யோனே. (5)

---

இவர் திருவாவடுதுறை யாதீனம் பதினாறாவது பட்டத்திலே யெழுந்தருளியிருந்த ஸ்ரீ. சுப்பிரமணிய தேசிகரவர்களுடன் சின்னப்பட்டத்திலிருந்தவர்.

## மதுரைத் தேவஸ்தானம் பாஜி கமிட்டிமெம்பர் ஸ்ரீமாந் வயி. நாக இராமநாதன் செட்டியாரவர்கள் இயற்றியவை.

நிரம்பவழ கியபெருமைப் பரங்குன்றப் புராணத்தை
நீணாண் முன்னர்
நிரம்பவழ கியதேசி கன்பொழில்சூழ் பரங்கிரியில்
நெடிது வாழ்ந்தோன்
நிரம்பவழ கியசெஞ்சொற் செய்யுள்செறித் தாக்கினனீ
நிலத்தி லீந்து
நிரம்பவழ கியஉரையொன் றில்லாமற் குடவிளக்காய்
நிலவிற் றம்மா. (1)

இழிப்புரைசென் றேறாத சிவமேசொல் லென்றுளு
மிமய மாதாம்
பழிப்புரைகொள் ளாதபொருள் சேர்ந்திலதே வியங்காதப்
பான்மை தேர்ந்து
தெழிப்புரைசெய் குறவர்செறி பரங்குன்றப் புராணச்சொற்
றெளிந்து காணப்
பொழிப்புரையொன் றினைத்தேனைப் போலாக்கி னனவனைப்
புகல்வன் மாதோ. (2)

உலையின்மேல் வைத்தமெழு கெனப்பரம னடிக்குருகு
முள்ள முள்ளான்
தலையின்மேல் வைத்துநவ மணிமுடிபோற் புலவரெலாந்
தாங்குந் தூயோன்
கலையின்மேல் வைத்தவுணர் வினனருணா சலநாமக்
கவிரா ஜன்றான்
மலையின்மேல் வைத்தவிளக் காமிந்த வுரையொட்டவன்
வாழி மாதோ. (3)

# திருப்பரங்கிரிப்புராணம் உரையெழுதி அச்சிட்டு வெளிப்படுத்துதற்குப் பொருளுதவி புரிந்தார் ஊர் பெயர் முதலியன.

---

| | ரூ. அ. பை. |
|---|---|
| விஜயநகரம் போலீஸ் டிப்டி சூப்பிரண்டெண்ட், T. இராசுப்பிள்ளையவர்கள் | 20—0—0 |
| **திருப்பரங்குன்றம்.** | |
| டாக்டர், பிரமஸ்ரீ ஸ்ரீநிவாசையரவர்கள் | 10—0—0 |
| கோயில் பேஷ்கார், பிரமஸ்ரீ சாமிநாதையரவர்கள் | 3—0—0 |
| போலீஸ் சப் இன்ஸ்பெக்டர், ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள் | 25—0—0 |
| கோயில் நிர்வாகம், ஸ்ரீ வீரபத்திரபிள்ளையவர்கள் | 10—0—0 |
| ,, கூடன்பணிவிடை ஸ்ரீஐயாத்துரை முதலியாரவர்கள் | 5—0—0 |
| திருப்பரங்குன்றம ஊர்பொதுப்பணத்திலிருந்து | 40—0—0 |
| ஸ்ரீ சொக்குமுதலியாரவர்கள் | 5—0—0 |
| ஸ்ரீ தஞ்சியப்பமுதலியாரவர்கள் | 5—0—0 |
| ஸ்ரீ சிவகாமிநாதமுதலியாரவர்கள் | 5—0—0 |
| ஸ்ரீ வெங்கடசுப்புநாயுடு அவர்கள் | 15—0—0 |
| கண்ராக்டர், ஸ்ரீ சுப்பையா செட்டியாரவர்கள் | 15—0—0 |
| ஸ்ரீ கருப்பபிள்ளையவர்கள் | 5—0—0 |
| திருநீலகண்டநாயனார் மடம் மிளகாய்ச்சாமியென்ற சோமசுந்தரத்தம்மாள் அவர்கள | 5—0—0 |
| அகிலாண்ட ஓதுவார் மகள் சுப்பம்மாளாச்சி அவர்கள் | 5—0—0 |
| ஸ்ரீ செல்லையாபிள்ளையவர்கள் | 3—0—0 |
| ஸ்ரீ இருளாண்டி பண்டிதரவர்கள் | 20—4—0 |
| மேவடர்புளியங்குளம் கர்ணம், ஸ்ரீ போத்தலிங்கம் பிள்ளையவர்கள் | 3—0—0 |
| ஆவணியாபுரம் கி. மு. பிரமஸ்ரீ சுப்பராயஐயரவர்கள் | 25—0—0 |
| மதுரை போலீஸ் சப் இன்ஸ்பெக்டர், பிரமஸ்ரீ வி. துரைச்சாமி ஐயரவர்கள் | 5—0—0 |
| ஷை ஓர்க்ஷாப், ஸ்ரீ சுப்புக்கண்ணு அவர்கள் | 5—0—0 |
| ஷை அச்சாபீஸ், ஸ்ரீ சாமியப்பபிள்ளையவர்கள் | 7—0—0 |
| பொதும்பு. ஸ்ரீ ப. வேலாயுதஞ்சேர்வைகாரரவர்கள் | 5—0—0 |
| கூத்தியார்குண்டு. ஸ்ரீ இராஜகோபால பிள்ளையவர்கள் | 10—0—0 |
| ஷை ஸ்ரீ அபிஷேகசுந்தரம்பிள்ளையவர்கள் | 10—0—0 |
| ஷை ஸ்ரீ சுப்பிரமணியபிள்ளையவர்கள் | 5—0—0 |
| ஷை ஸ்ரீ சங்கரமூர்த்தியாபிள்ளையவர்கள் | 15—0—0 |
| ஆ. கூ. | 286—4—0 |

உ

# திருஞானசம்பந்த சுவாமிக ளருளிச்செய்த
# தேவாரத் திருப்பதிகம்.

---

## திருப்பரங்குன்றம்—பண், குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

நீடலர்சோதிவெண்பிறையோடுநிரைகொன்றைச்
சூடலனந்திச்சுடரெரியேந்திச்சுடுகானி
லாடலனஞ்சொல்லணியிழையாளையொருபாகம்
பாடலன்மேயநன்னகர்போலும்பரங்குன்றே.

அங்கமோராறும்அருமறைநான்கும்அருள்செய்து
பொங்குவெண்ணூலும்பொடியணிமார்பிற்பொலிவித்துத்
திங்களும்பாம்புந்திகழ்சடைவைத்தோர்தேன்மொழி
பங்கினன்மேயநன்னகர்போலும்பரங்குன்றே.

நீரிடங்கொண்டநிமிர்சடைதன்மேனிரைகொன்றைச்
சீரிடங்கொண்டவெம்மிறைபோலுஞ்சேய்தாய
வோருடம்புள்ளேயுமையொருபாகமுடனாகிப்
பாரிடம்பாடவினிதுறைகோயில்பரங்குன்றே.

வளர்பூங்கோங்கமாதவியோடுமல்லிகைக்
குளிர்பூஞ்சாரல்வண்டறைசோலைப்பரங்குன்றந்
தளிர்போன்மேனித்தையனல்லாளோடொருபாகம்
நளிர்பூங்கொன்றைசூடினன்மேயநகர்தானே.

பொன்னியல்கொன்றைபொறிகிளர்நாகம்புரிசடைத்
துன்னியசோதியாகியவீசன்றொன்மறை
பன்னியபாடலாடலன்மேயபரங்குன்றை
யுன்னியசிந்தையுடையவர்க்கில்லையுறுநோயே.

கடைநெடுமாடக்கடியரண்மூன்றுங்கனன்மூழ்கத்
தொடைநவில்கின்றவில்லினனந்திச்சுடுகானிற்
புடைநவில்பூதம்பாடநின்றாடும்பொருசூலப்
படைநவில்வான்றனன்னகர்போலும்பரங்குன்றே.

அயிலுடைவேலோரனல்புல்குகையினம்பொன்றா
லெயில்படவெய்தவெம்மிறைமேயஇடம்போலு
மயில்பெடைபுல்கிமாநடமாடும்வளர்சோலைப்
பயில்பெடைவண்டுபாடலறாதபரங்குன்றே. (7)

மைத்தகுமேனிவாளரக்கன்றன்மகுடங்கள்
பத்தினதிண்டோளிருபதுஞ்செற்றான்பரங்குன்றைச்
சித்தமதொன்றிச்செய்கழலுன்னிச்சிவனென்று
நித்தலுமேத்தத்தொல்வினைநம்மேனில்லாவே. (8)

முந்தியிவ்வையந்தாவியமாலுமொய்யொளி
யுந்தியில்வந்திங்கருமறையீந்தவுரவோனுஞ்
சிந்தையினாலுந்தெரிவரிதாகித்திகழ்சோதிப்
பந்தியலங்கைமங்கையொர்பங்கன்பரங்குன்றே. (9)

குண்டாய்முற்றுந்திரிவார்கூறைமெய்போர்த்து
மிண்டாய்மிண்டர்பேசியபேச்சுமெய்யல்ல
பண்டானீழல்மேவியவீசன்பரங்குன்றைத்
தொண்டாலேத்தத்தொல்வினைநம்மேனில்லாவே. (10)

தடமலிபொய்கைச்சண்பைமன்ஞானசம்பந்தன்
படமலிநாகமரைக்கசைத்தான்றன்பரங்குன்றைத்
தொடைமலிபாடல்பத்தும்வல்லார்தந்துயர்போகி
விடமலிகண்டனருள்பெறுந்தன்மைமிக்கோரே. (11)

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்தி சுவாமிகளருளிச் செய்த தேவாரத் திருப்பதிகம்.

திருப்பரங்குன்றம்—பண், இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

கோத்திட்டையுங்கோவலுங்கோயில்கொண்டீருமைக்
கொண்டுழல்கின்றதோர்கொல்லைச்சில்லைச்
சேத்திட்டுக்குத்தித்தெருவேதிரியுஞ்
சில்பூதமுநீருந்திசைதிசையன
சோத்திட்டுவிண்ணோர்பலருந்தொழநும்
மரைக்கோவணத்தோடொருதோல்புடைசூழ்ந்
தார்த்திட்டதும்பாம்புகைக்கொண்டதும்நாம்
படிகேளுமக்காட்செயவஞ்சுதுமே. (1

முண்டந்தரித்தீர்முதுகாடுறைவீர்
முழுநீறுமெய்பூசுதிர்மூக்கப்பாம்பைக்
கண்டத்திலுந்தோளிலுங்கட்டிவைத்தீர்
கடலைக்கடைந்திட்டதோர்நஞ்சையுண்டீர்
பிண்டஞ்சுமந்தும்மொடுங்கூடமாட்டோம்
பெரியாரொடுநட்பினிதென்றிருத்தும்
அண்டங்கடந்தப்புறத்தும்மிருந்தீ
ரடிகேளுமக்காட்செயவஞ்சுதுமே. (2

மூடாயமுயலகன்மூக்கப்பாம்பு
முடைநாறியவெண்டலைமொய்த்தபல்பேய்
பாடாவருபூதங்கள்பாய்புலித்தோல்
பரிசொன்றறியாதனபாரிடங்கள்
தோடார்மலர்க்கொன்றையுந்துன்னெருக்குந்
துணைமாமணிநாகமரைக்கசைத்தொன்
றாடாதனவேசெய்திரெம்பெருமா
னடிகேளுமக்காட்செயவஞ்சுதுமே. (3

மஞ்சுண்டமாலைமதிசூடுசென்னி
மலையான்மடந்தைமணவாளநம்பி
பஞ்சுண்டவல்குற்பணைமென்முலையா
ளொடுநீருமொன்றாயிருத்தலொழியீர்

நஞ்சுண்டுதேவர்க்கமுதங்கொடுத்த
நலமொன்றறியோமுங்கைநாகமதற்
கஞ்சுண்டுபடமதுபோகவிடீ
ரடிகேளுமக்காட்செயவஞ்சுதுமே. (4)

பொல்லாப்புறங்காட்டகத்தாட்டொழியீர்
புலால்வாயனபேயொடுபூச்சொழியீ
ரெல்லாமறிவீரிதுவேயறியீ
ரென்றிரங்குவேனெல்லியுநண்பகலும்
கல்லானிழற்கீழொருநாட்கண்டதுங்
கடம்பூர்க்கரக்கோயிலின்முன்கண்டதும்
அல்லால்விரகொன்றிலமெம்பெருமா
னடிகேளுமக்காட்செயவஞ்சுதுமே. (5)

தென்னாத்தெனாத்தெத்தெனாவென்றுபாடிச்
சில்பூதமுநீருந்திசைதிசையன
பன்னான்மறைபாடுதிர்பாசூருளீர்
படம்பக்கங்கொட்டுந்திருவொற்றியூரீர்
பண்ணார்மொழியாளையோர்பங்குடையீர்
படுகாட்டகத்தென்றுமோர்பற்றொழியீர்
அண்ணாமலையேனென்றீராரூருளீர்
அடிகேளுமக்காட்செயவஞ்சுதுமே. (6)

சிங்கத்துரிமூடுதிர்தேவர்கணந்
தொழநிற்றீர்பெற்றமுகந்தேறிடுதிர்
பங்கம்பலபேசிடப்பாடுந்தொண்டர்
தமைப்பற்றிக்கொண்டாண்டுவிடவுங்கில்லீர்
கங்கைச்சடையீருங்கருத்தறியோங்
கண்ணுமூன்றுடையீர்கண்ணேயாயிருந்தா
லங்கத்துறுநோய்களைந்தாளகில்லீ
ரடிகேளுமக்காட்செயவஞ்சுதுமே. (7)

பிணிவண்ணத்தவல்வினைதீர்த்தருளீர்
பெருங்காட்டகத்திற்பெரும்பேயுநீருந்
துணிவண்ணத்தின்மேலுமோர்தோலுடுத்துச்
சுற்றுநாகத்தராய்ச்சுண்ணநீறுபூசி

மணிவண்ணத்தின்மேலுமொர்வண்ணத்தராய்
மற்றுமற்றும்பல்பலவண்ணத்தரா
யணிவண்ணத்தராய்நிற்றீரெம்பெருமா
னடிகேளுமக்காட்செயவஞ்சுதுமே. (8)

கோளாளியகுஞ்சரங்கோளிழைத்தீர்
மலையின்றலையல்லதுகோயில்கொள்ளீர்
வேளாளியகாமனைவெந்தழிய
விழித்தீரதுவன்றியும்வேய்புரையுந்
தோளாளுமைநங்கையொர்பங்குடையீ
ருடுகூறையுஞ்சோறுந்தந்தாளகில்லீ
ராளாளியவேகிற்றீரெம்பெருமா
னடிகேளுமக்காட்செயவஞ்சுதுமே. (9)

பாரோடுவிண்ணும்பகலுமாகிப்
பனிமால்வரையாகிப்பரவையாகி
நீரோடுதீயுநெடுங்காற்றுமாகி
நெடுவெள்ளிடையாகிநிலனுமாகித்
தேரோடவரையெடுத்தவரக்கன்
சிரம்பத்திறுத்தீருமசெய்கையெல்லா
மாரோடுங்கூடாவடிகேளிதுவென்
னடியேமுமக்காட்செயவஞ்சுதுமே. (10)

அடிகேளுமக்காட்செயவஞ்சுதுமென்
றமரர்பெருமானையாரூரனஞ்சி
முடியாலுலகாண்டமூவேந்தர்முன்னே
மொழிந்தாறுமோர்நான்குமோரொன்றினையும்
படியாயிவைகற்றுவல்லவடியார்
பரங்குன்றமேயபரமன்னடிக்கே
குடியாகிவானோர்க்குமோர்கோவுமாகிக்
குலவேந்தராய்விண்முழுதாள்பவரே. (11)

திருச்சிற்றம்பலம்.

உ

## அருணகிரிநாதரருளிச்செய்த
## திருப்பரங்கிரித் திருப்புகழ்.

---

உனைத்தினந்தொழு திலனுனதியல்பினை
உரைத்திலன்பல மலர்கொடுனடியிணை
உறப்பணிந்தில னொருதவமிலனுன — தருள்மாறா

உளத்துளன்பின ருறைவிடமறிகிலன்
விருப்பொடுன்சிக ரமும்வலம்வருகிலன்
உவப்பொடுன்புகழ் துதிசெயவிழைகிலன் — மலைபோலே

கனைத்தெழும்பக டதுபிடர்மிசைவரு
கறுத்தவெஞ்சின மறலிதனுழையினர்
கதித்தடர்ந்தெறி கயிறடுகதைகொடு — பொருபோதே

கலக்குறுஞ்செய லொழிவறஅழிவுறு
கருத்துநைந்தல முறுபொழுதளவைகொள்
கணத்திலென்பய மறமயில்முதுகினில் — வருவாயே

வினைத்தலந்தனி லலகைகள்குதிகொள
விழுக்குடைந்துமெ யுகுதசைகழுகுண
விரித்தகுஞ்சிய ரெனுமவுணரையமர் — புரிவேலா

மிகுத்தபண்பயில் குயில்மொழியழகிய
கொடிச்சிகுங்கும முலைமுகடுழுநறை
விரைத்தசந்தன ம்ருகமதபுயவரை — யுடையோனே

தினத்தினஞ்சதுர் மறைமுனிமுறைகொடு
புனற்சொரிந்தலர் பொதியவிணவரொடு
சினத்தைநிந்தனை செயுமுனிவரர்தொழ — மகிழ்வோனே

தெனத்தெனந்தன எனவரியளிநறை
தெவிட்டஅன்பொடு பருகுயர்பொழில்திகழ்
திருப்பரங்கிரி தனிலுறைசரவண — பெருமாளே.

# திருப்பரங்கிரித் திருப்புகழ்.

மன்றலங்கொந்துமிசை தெந்தனந்தெந்தனென
வண்டினங்கண்டுதொடர் குழல்மாதர்

மண்டிநிந்தொண்டையழ துண்டுகொண்டன்பின்மிக
வம்பிநிங்கும்பகன தனமார்பில்

ஒன்றஅம்பொன்றுவிழி கன்றஅங்கங்குழைய
உந்தியென்கின்றமடு விழுவேனை

உன்சிலம்புங்கனக தண்டையுங்கிண்கிணியும்
ஒண்கடம்பும்புனையும் அடிசேராய்

பன்றியங்கொம்புகம டம்புயங்கஞ்சுரர்கள்
பண்டையென்பங்கமணி பவர்சேயே

பஞ்சரங்கொஞ்சுகிளி வந்துவந்தைந்துகர
பண்டிதன்தம்பியெனும் வயலூரா

சென்றுமுன்குன்றவர்கள் தந்தபெண்கொண்டுவளர்
செண்பகமபைம்பொன்மலர் செறிசோலை

திங்களுஞ்செங்கதிரு மங்குலுந்தங்குமுயர்
தென்பரங்குன்றிலுறை பெருமாளே.



உ

சிவமயம்.

# திருப்பரங்கிரிப் புராணம்.



## முதலாவது பாயிரச்சருக்கம்.

### விநாயகர் துதி.

நலந்த ழைத்திடு நற்பத நீழலைக்
கலந்த வர்க்குக் கருணை யரும்பிநின்
றலர்ந்த வானந்தத் தேனுக வானன
மலர்ந்த கற்பக வேழத்தை வாழ்த்துவாம்.

(இதன் பொருள்) சிவானந்தத் தேனிறைந்த திருவடித்தாமரை நிழலைத் தம்மைவந்து சேர்ந்தவர்க்குப் பிறவி வெப்பந் தணியும்படி முகமலர்ச்சியோடு தந்தருளும் யானை முகத்தையுடைய கற்பக விநாயகக்கடவுளைத் திருப்பரங்கிரிப் புராணம்பாடி முடிதற்கு வணக்கஞ்செய்வோம். (என்பதாம்.)

### பரங்குன்றீசுரர் துதி.

உலகெ லாநிறைந் துள்ளும் புறம்புமா
யிலகு பேரொளி யின்பமுந் துன்பமும்
விலகி நின்ற விமலன் பரங்கிரித்
தலைவன் பாதந் தலைமிசை யேற்றுவாம்.

(இ-ள்) உலகமெல்லாம் உள்ளும் புறம்புமாய் வியாபித்துச் சோதிமயமாகி இன்பமுந் துன்பமுங் கடந்து நின்மலசொரூபியாய்த் திருப்பரங்குன்றத்தி லெழுந்தருளியிருக்கும் சிவபெருமானுடைய திருவடித் தாமரை மலர்களைத் தலையின்மேலே யேற்றிவைத்துக் கொள்வோம். (எ-ம்.) (௧)

### சுப்பிரமணியர் துதி.

வேறு.

சுருதிமழை பிலிற்றியிடுஞ் சதுமுகனார் சடங்கியற்றத்
தோகை பாகன்
கருதிவிழி விருந்தருந்தக் கண்ணிறைந்த மேனியான்
கைந்நீர் வார்ப்பத்

தருதியெனக் கையேந்திப் பரிதிமதி விளக்கேந்தத்
தந்தி மாதை
வருதியெனக் கைப்பிடித்துப் பரங்கிரியின் மணந்தவனை
வணக்கஞ் செய்வாம்.

(இ-ள்) நான்குவேதங்களையும் மேகங்கள்போல முழக்கும்பிரமதேவன் மந்திரபூருவமாக விவாகத்துக்குரிய கிரியைகளைச் செய்ய, சூரிய சந்திரர்கள் இரத்ந தீபங்களைத் தாங்கிக்கொண்டு நிற்க, சிவபிரானும் உமாதேவியாரும் கண்டு மனமகிழ்ந்திருக்க, தேகமெல்லாங் கண்களையுடைய தேவேந்திரன் தமது திருக்கரத்திலே தாரைநீரை வார்க்கத் தெய்வயானையம்மை திருக் கரத்தைப் பிடித்துத் திருக்கலியாணஞ் செய்தருளிய சுப்பிரமணிய சுவாமியை வணக்கஞ்செய்வோம். (எ-ம்) (உ)

## ஆவுடைநாயகி துதி.

பொழியருவி யெனவொழுகக் கருணைவெள்ள மடைதிறக்கும்
பூங்கண் மாதை
மழலையமு தம்பொழியப் பேசுமொரு பசுங்கிளியை
மருவி நாளும்
பழமறைக ளோலமிடவே பதம்பெயர்க்கும் பொலங்கொடியைப்
பார்க்குந் தோறு
மழகொழுக நின்றவளைப் பரங்குன்றி லாவுடையை
யகத்துள் வைப்பாம்.

(இ-ள்) கருணைவெள்ளமானது மடைதிறந்து அருவிபோலப் பொழியுங் கண்களையும்,கிளியைப்போல மழலையமுதம்பெருகப் பேசும்வார்த்தையினையும், வேதங்களெல்லாம் ஓலமிட்டுத் தேடியும் எட்டாமல் அப்புறம் நின்ற திருவடி களையுமுடையவளாய்ப் பொன்னங்கொடிபோலப் பார்க்குந்தோறும் அழகு விளங்கத் திருப்பரங்குன்றத்தி லெழுந்தருளியிருக்கிற ஆவுடைநாயகி யம்மை யை மனத்திலுள்ளே வைத்துத் தியானிப்போம். (எ-ம்.) (௩)

## கற்பகவிநாயகர் துதி.

வஞ்சகத்தி லொன்றானைத் துதிக்கைமிகத் திரண்டானை
வணங்கா ருள்ளே
பஞ்சாண மூன்றானை மறைசொலுநால் வாயானை
பத்த னுகித்

துஞ்சவுணர்க் கஞ்சாளைச் சென்னியணி யாறுளைத்
துகளெ ழாளைச்
செஞ்சொன்மறைக் கெட்டாளைப் பரங்கிரிவாழ் கற்பகத்தைச்
சிந்தை செய்வாம்.

(இ-ள்) வஞ்சகத்திலே பொருந்ாதவரும், திரண்ட துதிக்கையினை யுடையவரும், தம்மை வணங்காதவருள்ளத்திலே அழகிய திருவடிகளைப் பதித்து வையாதவரும், வேதங்களைச் சொல்லுந் தொங்கிய வாயினை யுடையவரும், எல்லாருக்கும் பிதாவாயுள்ளவரும், அவுணராகிய அசுரர்களுக்கு யுத்தத்திலே பயப்படாதவரும், சிரசிலே கங்கையைத் தரித்தவரும், யாதொரு குற்றமுமில்லாதவரும், செவ்வையாகிய சொற்களையுடைய வேதங்களுக்கும் எட்டாதவரும் ஆகிய, திருப்பரங்கிரியிலெழுந்தருளியிருக்குங் கற்பக விநாயகக் கடவுளைத் தியானித்து வணங்குவோம். (எ-ம்.) இப்பாட்டில் ஒன்று முதல் எட்டு வரையுள்ள எண்களையமைத்திருக்குஞ் சிலேடைப்பொருள் வியக்கத் தக்கது. (ச)

## குமாரக்கடவுள் துதி.

வேறு.

ஞாலம் போற்ற யான்விரும்பி நாடும் பொருளை யளித்தருள்வான்
மாலை யெனவே கடம்பணிந்த மார்பன் வரிவண் டிசைபாடுஞ்
சோலை யுடுத்த பழநிமலைத் தூயன் மகரஞ் சுலவியிடும்
வேலை தனிலே வேலையிட வேலை புரிந்தான் பதம்பணிவாம்.

(இ-ள்) 'உலகமெல்லாம் துதிக்க யாங்க ளிச்சித்த பொருளை யருளிச் செய்பவரும், கடப்பமாலையணிந்த மார்பினையுடையவரும்,வண்டுக ளிசைபாடுகின்ற சோலைகள் சூழ்ந்த பழநியங்கிரியில் வாசஞ்செய்யும் பரிசுத்தமுள்ளவரும்,மகரமீன்களையுடைய சமுத்திரத்திலே வேலாயுதத்தையேவிய தொழிலை யுடையவருமாகிய குமாரக்கடவுளது திருவடிகளை வணக்கஞ் செய்வோம். (எ-ம்.) (ரு)

## தெய்வயானையம்மை துதி.

வேறு.

வார்கொண்ட கொங்கையெனுங் கோடு தன்னால்
வடிவேலர் பன்னிருதோள் வரையைப் பாய்ந்து
தார்கொண்ட கடம்பதனை யுழக்கி யோகத்
தண்பரவை படிந்திறைவர் தடங்கண் வண்டின்

போர்கொண்ட விழிக்கருணை மதத்தை யூற்றிப்
பொருபடையா யெம்வினையைப் பொடித்து நாளும்
பார்கொண்ட பரங்கிரிவாழ் தெய்வ யானை
பதமலரை யிதயமலர் பதித்து வைப்பாம்.

(இ-ள்) கச்சணிந்த தனங்களென்னுங் கொம்புகளாலே, கூரிய வேலாயுதத்தை யேந்திய குமாரக்கடவுளது பன்னிரண்டு புயங்களாகிய மலைகளிற் பாய்ந்து, அங்கங்கேயுள்ள கடப்பமாலையைச் சிதறி, புணர்ச்சியாகிய சமுத்திரத்திலே மூழ்கி, அவருடைய கண்களாகிய வண்டுகளுக்கு விருந்தாகத் தனது கண்களினின்றுங் கருணையாகிய தேனைச்சொரிந்து, மோதுகின்ற ஆயுதம்போல எங்களுடைய தீவினைகளைக் கெடுத்து, திருப்பரங்கிரியிலெழுந்தருளியிருக்குந் தெய்வயானையம்மை திருவடித்தாமரைமலரை எங்களுடைய இருதய தாமரைமலரிலே சேர்த்துவைத்துக்கொள்வோம். (எ-ம்.) (௬)

## வள்ளிநாயகியம்மை துதி.

மணிகொண்ட மானிடத்து முளைத்து வேடர்
மனைபதிந்து பசுந்தழையாய் மருவுஞ் சோதி
யணிகொண்டு தழைந்தருளிக் கொழுகொம் பாக
வமலர்புயந் தழுவிவெள்ளி யசல மேறிக்
கணிகொண்ட புகழ்பூத்தெம் வினையைக் காய்த்துக்
கனின்பழுத்துக் கண்டவர்க்குக் கருணை யூற்றிப்
பணிகொண்ட வள்ளியெனுங் கொடியெம் முள்ளப்
பங்கயத்தைச் சுற்றியிடப் பதித்து வாழ்வாம்.

(இ-ள்) அழகுதங்கிய மானிடத்திலே முளைத்து, (தோன்றி) வேடர் மனையிலே பதிந்து,(தங்கி) பச்சைத்தளிர்போன்று, சோதிமயமா யலங்காரம் பெறத்தழைந்து, குமாரக்கடவுள் புயமாகிய கொழுகொம்பிலே படர்ந்து, கயிலாசமலைபோலே யுயர்ந்து விளங்கும் புகழாகிய பூவைப் பூத்து, எங்கள் வினையாகிய காய்களைக் காய்த்து, (கெடுத்து) அழகாகிய பழம் பழுத்து, தரிசித்தவர்க்குக் கருணையாகியதேனைப்பொழிந்து, எங்கள் வணக்கத்தையேற்றுக் கொண்ட வள்ளி யென்னும் பூங்கொடியானது, எங்களுடைய மனமாகிய தாமரையைச் சுற்றிக்கொண்டிருக்கப் பதித்துவைத்துப் பெருவாழ்வை யடைவோம். (எ-ம்.) (௭)

## பவளக்கனிவாய்ப்பெருமாள் துதி.

வேறு.

முன்னொருநா ளரியதவ மிழைத்தருளு முனிவருக்கு
முன்னர்க் காட்சி
யுன்னியகா லதிவரா கத்தினொடு நாரசிங்க
வுருவங் காட்டித்
தன்னிகரில் கமலையுடன் முருகர்மணக் கோலமெழுந்
தகைமை நோக்கிப்
பன்னுபுகழ்ப் பரங்கிரியி லிருந்தபவ ளத்திருவைப்
பணிதல் செய்வாம்.

(இ-ள்) பூருவகாலத்தி லொருநாள் அருமையாகிய தவஞ்செய்து கொண்ட முனிவர்களுக்குக் காட்சிகொடுப்பதை நினைத்தஇடத்து முதலாவது வராகாவதாரம் (பன்றிவடிவம்) எடுத்ததுடன் நரசிங்க அவதாரமுமெடுத்து, அதன்மேல் தனக்குத்தானே சமமாகிய இலக்குமி சமேதராய்த் திருப்பரங்கிரியில் வந்து குமாரக்கடவுள் தெய்வயானையம்மையை விவாகஞ் செய்யவருவது தெரிந்து, அங்கே அந்த மணக்கோலந் தரிசிக்கும்பொருட்டு வசித்திருந்த பவளக்கனிவாய்ப் பெருமானை வணக்கஞ்செய்வோம்.(எ-ம்.) (அ)

## திருமகள் துதி.

வேறு.

இரண்டு முனிவ ரிருபாலுஞ் சிறந்து தினமுஞ் சேவிப்ப
வரந்தந் தருளும் பெண்கொடியை வடிவேற் குமரன் மணக்கோலம்
புரிந்த வழகை யிருவிழிக்கு விருந்தா யருந்தும் புத்தமுதைப்
பரங்குன் றமர்ந்தெழுந்திருவைப்பணிந்துதிருவைப்பொருந்துவாம்.

(இ-ள்) இரண்டு பக்கமும் முனிவர்கள் சிறப்பாகக்கூடி நின்று வணங்க வரங்கொடுத்தருளும் பூங்கொடி போன்றவளும், கூரிய வேலாயுதத்தை யேந்திய குமாரக்கடவுளது திருமணக்கோலக்காட்சியாகிய அழகைத் தன்னுடைய இரண்டு நேத்திரங்களாலும் விருந்தாக உண்ணும் புதிய அமுதம் போல்பவளுமாகிய, திருப்பரங்கிரியிலெழுந்தருளியிருக்கும் இலக்குமியை வணங்கிச் செல்வத்தை யடைவோம். (எ-ம்.) (கூ)

ஸ்ரீ

# திருப்பரங்கிரிப் புராணம்.

## ஆதிபுவனேஸ்வரி துதி.

வேறு.

மருவிசிறும் பசுங்களபச் சேறெழுதத் திரண்டமுலை
மார்பி னாளைக்
கருணைநிறைந் தருவியெழக் கசிந்துகசிந் தூற்றுமிரு
கடைக்கண் ணாளை
யிருபுறமு மாதவர்க ளிருந்துகரங் குவிக்கவள
ரியல்பி னாளை
யருள்பெருகும் பரங்கிரியி லாதிபுவ னேஸ்வரியை
யகத்துள் வைப்பாம்.

(இ-ள்) வாசனைவீசும் பசியகளபச்சேறெழுதுந் திரண்ட தனங்களை யுடைய மார்பினையும், நிறைந்த கருணையைக் கசிந்து கசிந்து ஊற்றுகின்ற கடைக்கண்களையும், இரண்டு பக்கமும் பெரிய தவமுனிவர்கள் கைகளைக் குவித்து வணங்க மேலோங்கிய இயற்கைத் தோற்றத்தையு முடையவளாய்த் திருப்பரங்குன்றத்தில் வீற்றிருந்தருளும் ஆதிபுவனேஸ்வரியென்னும் அம்மையை யிருதயத்திலே வைத்துத் தியானித்து வணக்கஞ்செய்வோம்.(எ-ம்.) (௧0)

## துர்க்கா தேவி துதி.

பரங்கிரியில் மேவியருந் தவமிழைத்து விறல்சேர்ந்து
பாரு ளோங்கித்
திரங்குலவு மவுணனையே வீட்டியவன் சிரமிதித்த
சிலம்பி னாளை
வரங்குலவு வேலவனார் மணக்கோலங் கண்டிருந்த
மகிழ்ச்சி யாளைக்
கரங்குலவு சங்காழி தரித்துவளர் துர்க்கைதனைக்
கருத்துள் வைப்பாம்.

(இ-ள்) திருப்பரங்கிரியைச் சேர்ந்து அரிய தவஞ்செய்து வலிமை யடைந்தவளும், உலகத்திலேயுயர்ந்த வலிமைபெற்ற மகிடாசுரனைச் சங்கரித்து அவன் சிரத்திலேமிதித்து நின்ற சிலம்பணிந்த பாதத்தையுடையவளும், விசேட

---

* ஆதிபுவனேஸ்வரி-பரங்குன்றீசுரருக்கு மேற்கு முத்தீசுரருடனிருக்கும் பராசத்தி; இவ்விருவரும் குமாரக்கடவுள் தவசு முடிவில் எழுந்தருளி வரங்கொடுத்த மூர்த்திகள்.

மாக விளங்குங் குமாரக்கடவுளது திருமணக்கோலந் தரிசித்திருந்த மகிழ்ச்சி யுடையவளும், சங்கு சக்கரதாரியுமாகிய துர்க்காதேவியை மனத்தினுள்ளே தியானித்து வணக்கஞ்செய்வோம். (எ-ம்) (கக)

## நவவீரர்கள் துதி.

வேறு.

பரையி னூபுர மணிகளிற் பிறந்திடும் பாலர்
பொருவில் சூரனைக் கிளையொடும பிடுக்கிய புயத்தார்
முருக வேளடி நிழலெனப் பிரிந்திடா முறையோர்
விருது மேவிய நவமெனும் வீரரைப் பணிவாம்.

(இ-ள்) உமாதேவியார் திருவடித் தாமரையிலே யணிந்த பாதசரங்களி னின்றும் உதிர்ந்த நவரதனங்களிற் பிறந்தவரும், ஒப்பில்லாத சூரபன்மனை யவன் கிளையோடு மாயும்படி சண்டைசெய்த புயங்களை யுடையவரும், முருகக் கடவுளது திருவடியை அத்திருவடி நிழலைப்போலப் பிரியாதிருப்பவருமாகிய வெற்றிபொருந்திய ஒன்பது வீரர்களையும் வணங்குவோம். (எ-ம்) (கஉ)

## உக்கிரமூர்த்தி, அண்டாபரணர் துதி.

வேறு.

பூண்டபுகழ்ப் பரங்கிரியில வேலவர்க்குக் கொடும்பிழைகள் புரிவார் தம்மைக்
காண்டகவே துணித்தெறியு முக்கிரனு முக்கிரன்றாள் கருத்துள் வைப்பாம
நீண்டபகி ரண்டமெடுத் தெடுத்துமுத்து மாலையென நிரப்ப மார்போ
டூண்டகையண் டாபரண னடிப்போதை முடிப்போதா யணிந்து கொள்வாம.

(இ-ள்) புகழையே ஆபரணமாகப் புனைந்த திருப்பரங்கிரி வேலாயுத மூர்த்திக்குக் கொடிய பிழைகள் செய்கின்றவரை எல்லாருங்காண இருதுண்ட மாக வெட்டி யெறியுங் கொடூரமுள்ள உக்கிரனென்னும் பூதவீரரை யிருதயத் தில் வைத்து வணங்குவோம். (அதுவல்லாமலும்) எல்லா அண்டங்களையும் எடுத்து முத்தாரமாக மார்பிலேயணியும அண்டாபரணரென்னும் பெயரை யுடைய தகுதிபெற்ற பூதவீரரது பாததாமரையைச் சிரத்திலே புனையப்பட்ட பூவாகப்புனைந்து வணங்குவோம். (எ-ம்.) இவ்விருவருமே திருப்பரங்கிரிக்குக் காவலரென்று சொல்லப்படுவார். (கங)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் துதி.

வேறு.

மறுவில்சீர்க் காழி வேந்தை மலைமகள் பாலுண் டோனைப்
பெறுகரித் தோலைப் போர்த்த பிஞ்ஞகன் பழைய சோமன்
குறைபெறு துண்டம் வேணி தரித்தவன் கொடுக்க நாலோ
டறுபது கலையை வாங்கு மையனைப் போற்றி செய்வாம.

(இ-ள்) குற்றமில்லாத சீகாழிக்குத்தலைவரும், உமாதேவியார் திருமுலைப் பாலுண்டவரும், தாருகாவனத்துருஷிகளாலனுப்பப்பட்ட யானைத்தோலையும் பழமையாகிய மூன்றாம்பிறைச் சந்திரனையும் தரித்தவராகிய சிவபெருமானிடத்தில் அறுபத்துநான்கு கலைஞானத்தையும் பெற்றவருமாகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளைத் தோத்திரஞ்செய்வோம். (எ-ம்.) (கச)

## திருநாவுக்கரசுநாயனார் துதி.

வேறு.

நீறு குளிர மேனியிலே நீறு பூசி நெடுங்கிடங்கி
லூறு கடன்மேற் கல்லிறுக வூறு படாது மிதந்தருளி
யாறு தரித்த கடவுளைநல் லாறு தருதி யெனுந்தமிழின்
வீறு பகரு நாவினுக்கு வேந்தர் பாதம் பணிவாமே.

(இ-ள்) நீற்றறை குளிர்ச்சியடையும்படி விபூதிதரித்து இடையூறில்லாமல் நெடிய பள்ளங்களிலூற்றெடுக்கும் கடலிலே கல்லில்மிதந்துவந்து, கங்கையைத்தரித்த சிவபெருமானை நன்மார்க்கத்தை யருளிச்செய்யுமென்று தேவாரம்பாடிய திருநாவுக்கரசு சுவாமிகள் திருவடிகளை வணங்குவோம். (எ-ம்.)(கரு)

## சுந்தரமூர்த்தி நாயனார் துதி.

பரவை தனக்குத் தூதுரையாய் பரமா வெனவோர் வேதியனு
மரியு மயனு மறியாத வடியு முடியும் பரவைமனை
மருவும் வாயிற் படிகாண வந்து திரும்பும் வலக்கையிற்
பரசு தரனை யெடுத்ததமிழ் பகர்சுந் தரனைப் பணிவாமே.

(இ-ள்) பிரம விஷ்ணுக்களாலறியப்படாத முடியும் அடியும் பரவைநாச்சியார் வாயிற்படிகள் காணும்படி, மழுவாயுதத்தை வலக்கையிலேதரித்த சிவபெருமானைத் தூதனுப்புதற்குத் தேவாரம் பாடியருளிய சுந்தரமூர்த்தி சுவாமிகளை வணக்கஞ்செய்வோம். (எ-ம்.) (கசு)

## மாணிக்கவாசகசுவாமிகள் துதி.

வேறு.

நீரணி கடவுள்மண் ணின்றெ டுத்திடப்
பார்முழு தாண்டருள் பாண்டி யன்கையா
லோரடி வலியவே யுதவி மற்றா
னீரடி வாங்குமோ ரிறையைப் போற்றுவாம்.

(இ-ள்) கங்காநதியைத்தரித்த சிவபெருமான் மண்சுமக்கும்படி இவ்வுலகத்தையாளும் பாண்டியராசன் கைப்பிரம்பால் ஓரடியடிக்கச்செய்து அச்சிவபெருமானது இரண்டு திருவடிகளையும் வாங்கிக்கொண்ட மாணிக்கவாசக சுவாமிகளை வணக்கஞ்செய்வோம் (எ-ம்.) (கஎ)

## அறுபத்து மூன்றுநாயன்மார் முதலிய சிவனடியார்கள் துதி.

வேறு.

திண்புவியி லறுபத்து மூவருடன் சிவனடியார் திருத்தாள் போற்றிப்
பண்புவளர் முருகவேள் பூசைபுரி சிவமறையோர் பாதம் போற்றி
யெண்புகழ்சேர் சிற்கந்த மலையிலுறை மானிடர்க ளென்றும் வாழ்க
நண்புவளர் பரங்கிரியின் புராணமென வொருகாதை நடத்துவாமால்.

(இ-ள்) அறுபத்துமூன்று நாயன்மார்களுடைய திருவடிகளையும், மற்றைச் சிவனடியார்கள் திருவடிகளையும்வணங்கிக் கிருபைக்குணமிகுந்த முருகக்கடவுளைப் பூசிக்கும் அர்ச்சகர்களுடைய பாதங்களை வணங்கிச் சிற்கந்தமலையென்னும் திருப்பரங்கிரியில் வசிக்கின்ற மானிடர்களெல்லாம் வாழ்ந்திருக்கப் பரங்கிரிப்புராணமாகியசரித்திரத்தை நாம் பாடத்தொடங்குவோம்.(எ-ம்)(கஅ)

## அவையடக்கம்.

முருகு லாவுபூங் குழலுமை முலைமுக டுழக்கிச்
செருக வேகுழி செய்திடு மேனியி லெறிந்த
வெருவு கல்லினை மலர்கள்போன் மிலைந்தவன் குமரன்
மருவு செந்தமிழ் கூட்டியென றமிழ்செவி மடுக்கும்.

(இ-ள்) வாசனை தங்கிய பூங்கூந்தலையுடைய உமாதேவியார் தனங்களாகிய மலைகளாலமுத்தித் தழும்புசெய்யப்பட்ட திருமேனியிற் (சாக்கியனு) றெறிந்த கற்களையும் மலர்கள்போலேற்றுக்கொண்ட சிவபிரான் குமாரராகிய முருகக்கடவுள் என்பாடலைத் தமிழ்மொழிகளோடு சேர்த்துத் தமது திருச்செவியிலேற்றுக்கொள்வர். (எ-ம்.) (கக)

அருங்க லைக்கட லளந்திடு மூதறி வோர்முன்
பரங்கி ரிக்கதை பகர்ந்திடத் துணிதலியா தெனினுங்
கருங்க ளத்தனார் தொண்டர்கள் கருதுவர் மற்றோ
ரிருங்க ளிப்பினை யெய்தியெ னெய்திலா தென்னே.

(இ-ள்) அருமையாகிய கல்விக்கடலை அளவுசெய்தறியும் பேரறிவுடையார் முன்னே திருப்பரங்கிரிப் புராணத்தைப் பாடத்தொடங்கினேன். என் பாடல்கள் எப்படியிருந்தாலும் நீலகண்டத்தையுடைய சிவபெருமானுடைய தொண்டர்கள் அங்கீகாரஞ் செய்துகொள்வர். மற்றவர் மகிழ்ச்சியடைந்தாலென்ன அடையாவிட்டாலென்ன. (எ-ம்) (உ0)

குடமு யர்த்திடு மகத்தியன் குடங்கையிற் கொண்ட
கடலை யானகங் கையடக் குவனெனல் போலும்
படர்ப ரங்கிரித் தகைமையைப் பகர்ந்திடுஞ் சூதன்
வடக லைப்பொரு ளிருந்திட யான்றமிழ் வகுத்தல்.

(இ-ள்) விரிவாகிய திருப்பரங்கிரியின் மான்மியத்தைச் சொல்லியருளிய சூதமுனிவரது சமஸ்கிருத நூற்பொருளை நான் தமிழ்நூற் பாடல்களாற் பாடத்தொடங்கியது அகத்தியமகாமுனிவர் உள்ளங்கையிலடக்கிய சமுத்திர சலத்தை நானும் உள்ளங்கையிலடக்குவேனென்று சொல்லுதல்போலும்.() ()

## புராண வரலாறு.

இறைவர் கூறிட நந்திவா னவன்செவி யேற்றுப்
பொறைபெ றுஞ்சனற் குமரர்பாற் புகன்றிட முனிவன்
மறைகொ ழித்தவாய் வியாதனுக் குரைக்கமற் றவனே
யறைக ழற்றொழு மாணவன் சூதனுக் கறைய.

(இ-ள்) திருக்கைலாசபதியாகிய சிவபிரான் திருநந்திதேவருக்கு உபதேசஞ்செய்ய, அவர் அவ்வுபதேசத்தைப் பொறுமையுடைய சனற்குமார முனிவருக்குச்சொல்ல, அம்முனிவர் வேதங்களை விரித்துச்சொல்லிய வியாச முனிவருக்குச்சொல்ல, அவர் தம்முடைய மாணாக்கராகிய சூதமுனிவருக்குச் சொல்லியருளினர். (எ-ம்) (உஉ)

சூதன் மாதவத் தொகுதிக ளிருசெவி புகட்டும்
போத புத்தமு தெனப்பெறும் புராணமூ வாறுட்
டிதில் சைவமுங் காந்தமுந் திருப்பரங் கிரிசேர்
காதை யைச்சுவைத் தமிழினாற் கழறுகின் றனனால்.

(இ-ள்) சூதமுனிவர் நைமிசாரணிய வாசிகளாகிய முனிவர்கள் செவிக ளுக்கு அமுதத்தை வார்த்ததுபோலுஞ் சொல்லிய பதினெண் புராணங்களுக் குள் சைவம், காந்தமென்னும் இரண்டு புராணங்களிலடங்கிய திருப்பரங்கிரி மகத்துவமாகிய சரித்திரத்தை நாம் தமிழ்ப்பாவினாலே பாடத்தொடங்கி னோம். (எ-ம்) (உ௩)

## பதிகம்.

வேறு.

குதலைமொழிக் கவுரியுடன் கைலை மீது
குருத்துமதிச் சடைக்குழக னிருந்த வாறு
மதுரமொழி யுமைவினவுங் குடிலை கூறு
மந்திரமஞ் செழுத்துபதே சித்த வாறு
முதிர்மதிசேர் குமரனுமை மடிமேல வைகி
மொய்த்தமனுத் தகைமுழுது முணர்ந்த வாறுங்
கதிர்தவழும் பரங்கிரியின் வரவைச் சூதன்
கருதியமா தவத்தொகுதிக் குரைத்த வாறும்.

(இ-ள்) மழலைச்சொற்களையுடைய உமாதேவியாருடன் இளஞ்சந்திர னைச் சடையிலே தரித்த சிவபிரான் திருக்கைலாசமலையிலெழுந்தருளி யிருந்த சரித்திரமும், இனிய வார்த்தைகளைப் பேசும் அவ்வுமாதேவியாருக் குச் சிவபெருமான் பிரணவமந்திரப் பொருளாகிய பஞ்சாக்ஷரத்தை யுபதே சித்த சரித்திரமும், அப்பிரணவமந்திரப்பொருளை உமாதேவியார் மடிமே லிருந்து குமாரக்கடவுள் கேட்டுத்தெரிந்துகொண்ட சரித்திரமும், மோக்ஷத் தைக்கொடுக்குந் திருப்பரங்கிரி வரலாற்றைச் சூதமுனிவர் நைமிசாரணிய முனிவர்களுக்குச் சொல்லிய சரித்திரமும். (எ-ம) (உ௪)

மனுக்காந்த பிழையுலகில் வழங்க வேண்டி
மருவுபரங் கிரியிறைவர் மலர்த்தாட் பூசை
புனிற்றிளைய குமரவேள் புரிந்த வாறும்
பூதானஞ் சிபிவேந்தன் பொருந்துங் காலைக்
கனத்தமறை யவனொருத்தன குறையக் கண்டு
கண்ணுதல்வந் தேதான மேற்ற வாறு
மினித்தமொழிக கலைமகளை மணந்து வேத
னெழுபிரம கூவத்தை யியற்று மாறும்.

(இ-ள்) மந்திரங்களைக் குரு உபதேசமுறையா லறிந்துகொள்ளாமல் ஒளித்திருந்து கேட்டுக்கொள்வது குற்றமென்று உலகத்தார் அறிந்துகொள் வதற்காக முருகக்கடவுள் உமாதேவியார் மடிமேலொளித்திருந்து பிரணவ மந்திரத்தைக் கேட்ட குற்றம் நீங்கும்படி பரங்குன்றீசரைப் பூசித்த சரித்திர மும், சிபிச்சக்கரவர்த்தி திருப்பரங்கிரியில் வந்து பூதானஞ்செய்யும்போது குறிக்கப்பட்ட ஐந்நூறு பிராமணரில் ஒரு பிராமணர் குறைந்தபோது சக்கர வர்த்தி வருத்தமடைய அதுகண்டு பரங்குன்றீசர் ஒரு பிராமண வடிவங் கொண்டு வந்து பூதானத்தை யேற்றுக்கொண்ட சரித்திரமும், மதுரமான சொற்களையுடைய சரசுவதியைப் பிரமதேவன் விவாகஞ்செய்து பிரமதீர்த் தத்தையுண்டாக்கிய சரித்திரமும். (எ-ம்) (உ௫)

கும்பமுனி மாணவனார் சபித்த குட்டங்
    கோவிதா ரத்துவசன் கழுவ வேண்டி
நம்பிரம கூவத்திற் குடைந்த வாறும்
    நவையில்பரங் கிரிச்சிறப்பு நவின்ற வாறும்
பம்புதிரைச் சத்தியகூ வத்திற் றோய்ந்து
    பாரிலரிச் சந்திரவேள் குமரற் கன்பா
யம்புவிமேற் றிருவிழா வியற்று மாறு
    மரசனென்றுஞ் சத்தியவாக் கணைந்த வாறும்.

(இ-ள்) அகத்தியமுனிவர் மாணாக்கராகிய பிரமிட்ட முனிவர் சாபத் தால் வந்த குட்டவியாதியைக் கோவிதாரத்துவசனென்னும் அரசன் பிரம கூவதீர்த்தத்தில் மூழ்கிப் போக்கிய சரித்திரமும், பரங்கிரித் தலவிசேடத் தைச் சொல்லிய கதையும், நெருங்கிய அலைகளையுடைய சத்தியகூவத்தில் மூழ்கி அரிச்சந்திர மகாராஜன் முருகக்கடவுளை வணங்கித் திருவிழா நடத்திய சரித்திரமும், அவ்வரசன் முருகக்கடவுள் கருணையால் சத்தியவாக்குப் பெற் றதும். (எ-ம்) (உ௬)

தீர்த்தவகைச் சிறப்பதனை யுரைத்த வாறுஞ்
    செய்யதமிழ்க் கீரனைவெஞ் சிறையி லாக்கி
யார்த்தசுவைத் தமிழ்மாலை கொண்ட வாறு
    மவுணர்கிளை தடிந்துபதி யணைந்த வாறும்
பார்த்துமக வான்மகளை மணந்த வாறும்
    பணிந்தவர்க்கு நாற்பொருளும் பாலித் தென்றுஞ்
சேர்த்தமணக் கோலமுட னிருந்த வாறுஞ்
    செந்தமிழாற் சுவையுறச் செப்பு வாமால்.

(இ-ள்) திருப்பரங்குன்றத்திலுள்ள தீர்த்தங்களின் மான்மியங்களைச் சொல்லியதும், தமிழர் பெருமானாகிய நக்கீரரைக்குகையிலேயடைத்து, அவர் வாக்கினாலே திருமுருகாற்றுப்படை யென்னும் பிரபந்தத்தைப்பாட முருகக்கடவுள் கேட்டருளியதும், அக்கடவுள் சூரசங்காரஞ்செய்துவிட்டுத் திருப்பரங்கிரியில் வந்திருந்த சரிதமும், அதன்மேல் தெய்வயானையம்மையைத் திருமணஞ்செய்த கதையும், தம்மை வந்து வணங்கினவருக்குக் குமாரக்கடவுளானவர் இட்டசித்திகளைக் கொடுத்தருளித் திருமணக்கோலத்துடனே யெப்பொழுதுமெழுந்தருளியிருந்ததும் செந்தமிழ்ப் பாடல்களால் இனிமையுண்டாகச்சொல்லுவோம். (எ-ம்) (உஎ)

இது முதல் எட்டுச் செய்யுள்கள்

நைமிசாரணியச் சிறப்பு.

வேறு.

வெளிய பாளையாம் வேணியி னிளம்பிறை சூடி
யொளிரு நீறணி மேனியி லுமையெனுங் கொடிதன்
களிகொ ளப்படர் கமுகெனு மீசன்மா முனிவர்
களிர்த வத்தினாற் றலையசை நைமிசா ரணியம்.

(இ-ள்) (ஆகாயத்தில் வருய) இளம்பிறைச் சந்திரனைத்தாங்கிய பாளையானது சடையைப்போலவும், நீறுபூத்த மேனியில் சுற்றிப்படர்கின்ற பசுங்கொடி உமாதேவியைப்போலவுந் தோன்றுதலால் கமுகமரமானது சிவபிரானைப்போலவும், அம்மரந்தலையசைப்பது அவ்விடத்தில் தவஞ்செய்கின்ற மகாமுனிவர் தவத்தைக்கண்டு மகிழ்ந்து சிவபிரான் தலையசைப்பதுபோலவுந் தோன்றப்படுவதாகிய இடம் நைமிசாரணியம். (எ-ம்) (உஅ)

மேகம் விண்ணிடத் தெழுந்தென விரிந்திடுஞ் சோலைப்
பூக மாதிய நெருங்கிடப் போதினை மறைக்கு
மாக மூடெழு மிருளுடல் கிழியமா தவர்முன்
னாக மாமணி யேந்திடு நைமிசா ரணியம்.

(இ-ள்) அந்த நைமிசாரணியத்தில் ஆகாயத்தில் நீருண்டமேகம் பரந்ததுபோலக் கமுகு முதலிய மரங்கள் நெருங்கிய சோலையானது சூரியகிரணத்தை மறைக்கும். ஆகாயத்தினூடே யெழுந்த இருளானது விலக்கும்படி மேற்சொல்லிய முனிவர்களுக்கு முன்னே பாம்புகள் தம்மிடத்துள்ள இரத்நமாகிய தீபங்களைத் தாங்கிக்கொண்டு நிற்கும். (எ-ம்) (உகூ)

வளைகொள் பங்கமுற் றலரென்று மேவிகாண் மருவிக்
களிகொள் வண்டலைத் திடக்கணீர் தூற்றியே காட்டுந்
தளைய விழ்ந்திடு கொங்கையிற் றாடன்மா தரைப்போ
லளிர்மலர்த்தடஞ் சூழ்தரு நைமிசா ரணியம்.

(இ-ள்) சங்குகளையும் சேற்றினையும் பொருந்தி விரிந்த மலர்களை யெக்காலத்துமுடையனவாகி மகிழ்ச்சியுடைய வண்டுகள் வந்தலைக்கும்படி கள்ளாகிய நீரைச்சொரிந்து குளிர்ந்த பூக்களையுடைய தடாகங்கள், தம்மை விட்டு நீங்காத குற்றத்தினையும் பழிமொழிகளையுமுடையவராய்க் கட்ட விழ்ந்த கொங்கையினையுடைய தூர்த்தப்பெண்களை யொப்பாக நைமிசாரணி யத்தைச் சூழ்ந்திருக்கும். (எ-ம்) (௯௦)

மரையெ னுங்கதிர் மூழ்கலான் வளையெனு நிலவு
நிரையெ ழூப்பலாற் செழுந்திருப் பிறக்கலா னெடிய
வரையி றுத்தலான் வரங்கிள ராறுகூடுதலா
னரலை யொத்திடும் வாவிசூழ் நைமிசா ரணியம்.

(இ-ள்) தாமரை யென்று சொல்லப்படுஞ் சூரியன் மூழ்குதலாலும், சங் குகளென்று சொல்லப்படும் சந்திரப்பிரகாசங்களைத் தோற்றுவித்தலாலும், வளர்ந்தங்கிய சிறப்பு (இலக்குமி) உண்டாதலாலும், நீண்ட(மைநாக) மலைதங்கு தலாலும், பெரிய வரம்பு தங்குதலாலும், விசேடந்தங்கிய நதிகள் வந்துசேருத லாலும் சமுத்திரத்துக்கு ஒப்பாகத தடாகங்கள் நைமிசாரணியத்தைச் சூழ்ந் திருக்கும். (எ-ம) (௯௧)

திருகு மால்கரி கோட்டினுற் றினந்தினம் பாய்ந்து
தரையின் மேலெழு கிழங்கினைத் தவஞ்செய்வோர்க் குதவும்
அருகின் மாதவர் வந்திடத் தலைகுனிந் தவரைத்
தருத ருக்கனி யுதிர்ந்திடத் தலைதுளக கிடுமே.

(இ-ள்) நைமிசாரணியத்தில் தவஞ்செய்கின்ற இருடிகளுக்குப் பெரிய யானைகள் வளைந்த கொம்புகளால் தரையினைக்குத்தி மேலெழுங் கிழங்குகளை உணவாகக்கொடுக்கும். பக்கத்திலே முனிவர்கள் வந்தால் விருக்ஷங்களெல்லாந் தலையசைத்துக் குனிந்து பழங்களை உணவாகக்கொடுக்கும். (எ-ம்) (௯௨)

பொருக்கெ னப்படர் முனிவர்முன் புயங்கமா மணியை
யிருட்பி ழம்பினைத் தகர்த்திட விளக்கமென் றெடுக்கும்
பருக்கை கானுறத் துவகெதன வழியினிற் பறவை
நெருக்கி வந்திரு சிறையினாற் றூர்த்துநின் றிடுமால்.

(இ-ள்) இரவில் விரைவாகவந்து நெருங்குகின்ற முனிவர்களுக்குமுன்னே அவ்வனத்தில் வசிக்குஞ் சர்ப்பங்கள் இருளினையோட்டுதற்குத் தம்மிடத்திலுள்ள மாணிக்கங்களாகிய இரத்நங்களை விளக்காக எடுத்துக்காட்டி நிற்கும். அம்முனிவர் பாதங்களைத் துன்புறுத்துமென்று வழியிற்கிடக்கும் பரற்கற்களைப் பறவைகள் வந்து சிறகுகளாலே யொதுக்கித்தள்ளும். (எ-ம்) (௧௩)

தண்ப ழுத்திட வந்திளங் கால்சரு கரிக்கும்
விண்பு யற்குழாந் தினமுநீர் விழவுடல் விதிர்க்கு
நண்பு றப்பெறு தத்தமக் கியன்றநா ளன்றிப்
பண்பொ டும்பொழில நாடொறுங் கனிகளைப் பழுக்கும்

(இ-ள்) குளிர்ச்சியுண்டாகும்படி காற்றுவந்து சருகுகளைத்திரட்டி யொதுக்கித்தள்ளும். மேகக்கூட்டங்கள தினந்தோறும் நீர்சொரியும்படி யுடலை யசைத்து ஆகாயத்தில் நிற்கும். தங்கள்தங்களுக்குரிய காலமல்லாத எக்காலத்திலுஞ் சோலைகள் பழம்பழுத்து நிற்கும். (எ-ம்) (௧௪)

சுவைதி ளைத்திடு மாமறைச் சும்மையுங் கடவுள்
சிவமெ னக்கிள ராகமந் தெரித்தகம் பலையும்
பவம றுத்திடு புராணநூல் பகுத்திடு மொலியு
நவைய றுங்கட லொலிதரு நைமிசா ரணியம்.

(இ-ள்) சுவையாக அனுபவிக்கப்படும் வேதங்கள் முழக்கமும், சிவபிரானே பரம்பொருளென்று விளக்குகின்ற சிவாகம முழக்கமும், சனனத்தைப் போக்குகின்ற புராணங்கள் படிக்குமுழக்கமும் குற்றமற்ற கடல் முழக்கத்தை யொத்திருக்கப்படுவது நைமிசாரணியம். (எ-ம்) (௧௫)

இவ்வ னந்தனி லிருந்துமா தவமிழைத் தருள்வோர்
செவ்வி,சேரழற் கருமங்க ளியற்றிய திறத்தர்
பவ்வ மென்றிடும் பிறவியைச் சுவற்றவே பரனைக்
கவ்வு நெஞ்சினர் கருணையூ றியகடைக் கண்ணர்.

(இ-ள்) இத்தன்மையுடைய நைமிசாரணியத்திலிருந்து தவஞ்செய்யு முனிவர்கள் யாகாக்கினி காரியங்கள் செய்யுந்திறமையுடையவர். (ஆதலால்) சனனமென்று சொல்லப்படும் சமுத்திரம் வற்றும்படி சிவபெருமானுகிய (தோணியை)ப்பற்றிய மனத்தையுடையவர். கருணை சுரக்கின்ற கடைக்கண்களையுடையவர். (எ-ம்) (௧௬)

மறைவ டித்திட விளிம்பினில் வடுச்செயு நாவர்
கறைமி டற்றனை யருச்சனை யிழைத்திடுங் கையர்
பொறைபொ ருந்திய மனத்தினர் புண்டரக் கீற்று
நிறுவு நெற்றிய ரைந்தெழுத் துழுதிடு நெஞ்சர்.

(இ-ள்) வேதங்களை யோதுதலால் நாவிளிம்புகள் தழும்புபெற்றவர். நீலகண்டத்தையுடைய சிவபிரானை யருச்சனைசெய்யுங் கையையுடையவர். பொறுமை பொருந்திய மனத்தினையுடையவர். திரிபுண்டரமாக விபூதி தரித்த நெற்றியையுடையவர். பஞ்சாக்ஷரமந்திரத்தை நெஞ்சிலழுத்தியவர்.()()

சுருண்ட பொன்னின்வீழ் வேணியர் கண்டிகை தொடையாத்
திரண்ட ழுத்திய மார்பினர் சிவன்சின கரத்தை
யுருண்டு ருண்டுதான் வலஞ்செய வுறுத்தியே காய்த்து
முரண்ட ருந்திரு மேனியர் மொய்த்துறை கின்றார்.

(இ-ள்) வளைந்த பொன்போலும் நீண்ட சடையையுடையவர். உருத்திராக்ஷமாலையாகத் திரண்டழுத்தப்பட்ட புயங்களையுடையவர். சிவன்கோயிலை அங்கப்பிரதக்ஷிணஞ்செய்தலால் கற்கள் உறுத்தப்பட்ட தழும்புபெற்ற திருமேனியுடையவராய்த்திரண்டு, (நைமிசாரணியத்தில்) வசிக்கின்றார்.(எ-ம்) ௬௮)

இத்தி றம்பெறு நைமிசா ரணியத்தில் வேதந்
தத்த டிக்கொளு நாவினர் சவுனகா தியரா
மெய்த்த போதனர் சூதனைப் பணிந்துபின் மிலைந்த
சித்த மோர்ந்துரை கேட்டியென் றினையசெப் புவரால்.

(இ-ள்) மேலேசொல்லிய உறுதியாகிய வளம்பெற்ற நைமிசாரணியத்தில் வேதங்கள் ததும்பி வசிக்கும் நாவினராகிய சவுனகர் முதலிய முனிவர்கள் (அவ்விடத்திலெழுந்தருளிய) சூதமுனிவரை வணக்கஞ்செய்து அவரது திருவுள்ளக்குறிப்பினையறிந்து சமையம் பார்த்துச் சுவாமீ எங்கள் விண்ணப்பத்தைக் கேட்பீராகவென்று சொல்லத்தொடங்கினார். (எ-ம்) (௬௯)

சுவையொ ழுக்கிய பழையநூல் சொரிந்திடுங் கலனே
சிவனை யேபொரு ளெனவுறு திப்படுந் தெளிவே
பவம டர்த்திடு மறிவமு தேக்கிய கடலே
குவைத ரச்செறிந் தோங்கிய குணப்பெருங் குன்றே.

(இ-ள்) மதுரந்தரும் பழைய வேதங்களாகிய பொருள்களைச்சொரியும் நாவாய் (கப்பல்)போன்றவரே! சிவபிரானே பரம்பொருளென்று தெளிந்திடுந்

தெளிவுள்ளவரே! சனனத்தைப்போக்கும் அறிவுநிறைந்த கடல்போன்றவரே! எல்லாக் குணங்களும் நெருங்கியுயர்ந்த மலைபோன்றவரே! (எ-ம்) (௪0)

நின்று ணைப்பதத் தேயுரை நிகழ்த்துவங் கேட்டி
யின்றெ மைத்திரு வுள்ளம திரங்கியே நோக்கித்
துன்று மன்பினே டுத்தரங் கூறுதி துகளை
வென்ற மாதவ வென்றுபின் விளம்பன்மே யினரால்.

(இ-ள்) உம்முடைய திருவடிகளினிடத்து யாங்கள் சொல்லும் விண்ணப்பத்தைக் கேட்டருளி இன்றைக்குத் திருவுளமகிழ்ந்து, எங்களைப் பார்த்து நெருங்கிய அன்பினோடு விடைசொல்லவேண்டும். எல்லாக்குற்றங்களையு நீக்கிய மகத்தாகிய தவசிரேட்டரே! யென்று சொல்லத்தொடங்கினர். (எ-ம்) (௪௧)

திரைக ளோலிட வருகடல் வயிறுதீ மடுப்ப
வொருதி ருப்பணி விடைபைவேற் குதவிய குமரன்
மருவு தொல்பதிப் பெருமையை மனமகிழ்ந் தெமக்கே
யுரைசெ யென்றுமா முனிவர்க ளுரைத்திடச் சூதன்.

(இ-ள்) அலைகளெல்லாம் பெருமுழக்கஞ்செய்யக் கடல் வயிறு தீப்பற்றி யெரியும்படி வேலாயுதத்துக்குச் சிறந்த வேலையைக் கட்டளையிட்டருளிய குமாரக்கடவுள் எழுந்தருளியிருக்கும் பழமையாகிய க்ஷேத்திரத்தின் மகிமையை மனமகிழ்ச்சியோடு சொல்லியருளவேண்டுமென்று சவுனகாதிய முனிவர் வேண்டிக்கொள்ளச் சூதமுனிவரானவர். (எ-ம்) (௪௨)

களிது ளங்கியே வருசிரக் கம்பிதம் புரிந்து
குளிரு மாமதி முகத்திலே நகைதருங் குமா
னளி பெறும்பதிக் காதையை வினவினீ ரதனை
விளையு மன்பொடு கூறவே மிகுபயன் விளைக்கும்.

(இ-ள்) சந்தோஷமிகுதியுமுண்டாகத் தலையசைத்து, குளிர்ந்த சந்திரன் போன்ற முகத்திலே புன்சிரிப்புச் செய்தருளுங் குமாரக்கடவுள் அன்புற்றெழுந்தருளியிருக்குந் தலமான்மியத்தைச் சொல்லவேண்டுமென்று கேட்டீர்கள். அந்த மகத்துவமானது மிகுந்த அன்புடனேசொல்லவே அதிகப்பிரயோசனத்தைக் கொடுக்கும். (எ-ம்) (௪௩)

கொள்ளு மாயிரங் குலமறை நாவெனு முறங்கொண்
டள்ளி யள்ளியே தெள்ளிநான் மறையென வறைந்த
வள்ளல் கூறிய காதையை வருத்திடுந் தோறு
முள்ள மொன்றிடச் செவித்துளை நிரப்புமென் றுரைப்பான்.

(இ-ள்) ஆயிரக்கணக்காகிய நல்லவேதங்களை நாக்காகிய சுளகால் வாரி வாரிப்புடைத்துத் தெள்ளியெடுத்து நான்காக வகுத்தருளிய வள்ளற்றன்மை யுடைய வேதவியாச முனிவர் சொல்லி அருளிய புராண சரித்திரத்தை விரித் துச் சொல்லுந்தோறுங் காதுகளின் துவாரத்தை நிறைக்குமென்று சூதமுனி வர் சொல்லுவாராயினர். (எ-ம்) (௪௪)

மதிக்கு ழந்தையைச் செஞ்சடைக் காட்டினில் வைத்தோ
னுதிக்கு மன்பினோ டுரைத்திடுங் காதையை யுள்ளம்
பதிக்கு நந்தியெம் மடிகளின் பாதங்கள் சூடி
விதிர்க்கு மன்பினன் சனற்குமா ரன்சில விளம்பும்.

(இ-ள்) மூன்றாம் பிறைச்சந்திரனைச் சிவந்த சடையிலேதரித்த சிவ பெருமான் ஆதிகாலத்தில் உண்டாகும் அன்பினோடு சொல்லிய கதையைக் கேட்டுத்தம்முடைய இருதயத்திற் பதித்து வைத்திருக்குந் திருநந்திதேவரது சீபாதங்களைச் சிரசிலேவைத்துவணங்கி, அன்பு ததும்பிய சனற்குமாரமுனிவர் சொல்லுவார். (எ-ம்) (௪௫)

இருளெலா துங்கியூற் றெழுந்திடுங் களத்தனா ரின்றோ
ருருவு கொண்டுளா யுனதடி மாணவ னடியேன்
முருக வேள்பதிப் பெருமையை மூண்டெழு மாசை
பெருகு சிந்தையேற் குரையென நந்தியெம் பெருமான்.

(இ-ள்) இருளெல்லாந் திரண்டுவந்திருந்தாற்போலும் நீலகண்டத்தையு டைய சிவபெருமான்இக்காலம் வேற்றுருவங்கொண் டெழுந்தருளியிருந்தாற் போன்ற குருமூர்த்தியே! உம்முடைய மாணுக்கன்ஆகிய அடியேன் (ஆதலால்) முருகக்கடவுளெழுந்தருளியிருக்குந் தலத்தின் மான்மியத்தை அன்புபெருகிய மனத்தையுடைய அடியேனுக்குச் சொல்லியருள்வேண்டுமென்று கேட்க, திருநந்திதேவரானவர். (எ-ம்) (௪௬)

ஈங்கு நம்முழை வினவியது மதியிளங் குழவி
தாங்கும் வேணியான் றனையெனப் பருத்திறு மாந்து
வீங்கு மாமுலை யுமைக்குரை மேன்மையென் றுரைக்க
வாங்கி யேசனற் குமாரனார் வியாதற்கு வகுத்தார்.

(இ-ள்) இவ்விடத்திலிருந்து நீங்கள் நம்மிடத்திற் கேட்டகதையானது இளம்பிறைச்சந்திரன் தங்குஞ்சடைமையுடைய சிவபெருமான் மனைவியாகப் பக்கத்திலிருக்கும் உமாதேவியாருக்குச் சொல்லியருளிய மேன்மையுடைய தென்று சொல்லுதலும் (திருநந்திதேவர்) அதைக்கேட்டுச் சனற்குமார முனி வருக்குச் சொல்ல, அம்முனிவர் வியாசமுனிவருக்குச் சொல்லியருளினர். ()

வகுத்த காதையை வியாதரென் செவித்துணை மாந்தப்
பகுத்து ரைத்தநீங் காதையாம் பரவையின் முகந்து
தொகுத்து ரைப்பனு னென்றுடல் துளக்கியா னந்த
முகுத்த கண்மணிச் சூதமா முனிவர னுரைப்பான்.

(இ-ள்) சனற்குமார முனிவரிடந்தெரிந்துகொண்ட வியாச முனிவர் என் காதுகள் நிரம்பப் பாகுபாடுசெய்து சொல்லிய கதையாகிய கடலினின் றெடுத்துத்தொகுத்து உங்களுக்கு நான் சொல்வேனென்று, உடல்புளகாங்கி தங்கொள்ள ஆனந்தக்கண்ணீர் பொழியச் சூதமுனிவர் நைமிசாரணிய முனி வர்களுக்குச் சொல்லத்தொடங்கினர். (எ-ம்) (௪அ)

முதலாவது பாயிரச்சருக்கம் முற்றிற்று.

---

இரண்டாவது

# குமரன் உபதேசச் சருக்கம்.

——(o)——

இதுமுதல் ஆறுசெய்யுளுந் திருக்கைலாயச் சிறப்பு.

போத மாயுரு வெழுதொணுப் புதுமையா லெவர்க்கு
மாதி தேவனை யுச்சியி லமைத்தலா லென்று
மாத வத்தினேர் கூறலான் மனுவுத விடலால்
வேத மாமென விளங்கிடும் வெள்ளிமால் வரையே.

(இ-ள்) ஞானமயமாய் உருபம் எழுதமுடியாததாயிருத்தலினாலும், சிவ பெருமானைச் சிரசில் வைத்து இருத்தலினாலும், எக்காலத்தும் முனிவர்க ளெல்லாம் புகழ்தலினாலும், மந்திரங்களை யுதவுதலினாலும், கயிலாசமலை யானது வேதத்தை யொப்பாகப் பிரகாசித்து நிற்கும். (எ-ம்.) (௧)

வெங்கொ டும்பவத் துடக்கினால் விண்ணவர் மனிதர்
பொங்கு மோர்கடற் பிறவியைப் புவியினிற் கடக்க
வெங்க ளீசன்மீ காமனா யிருந்திட வோங்கும்
வங்க மாமென வைகிடும் வெள்ளிமால் வரையே.

(இ-ள்) மிகக்கொடுமையாகிய பாவத்துடக்கினால் மிகுந்த பிறவிக்கடலைத் தேவர்கள் மனிதர்கள்பூமியிற் கடப்பதற்குச் சிவபெருமான் மீகாமன் போலிருத்தலால், கயிலாசமலையானது கப்பலுக்குச் சமானமாக இருக்கும். (எ-ம்)(உ)

களிர்பொ ருந்திய காரிசை நவின்றிடு வண்டாக்
களிகொள் வானவர் முடியடர் முடியுகுங் கனகந்
தெளிப ராகமாச் சிவாலயம் பொகுட்டதாச் சிறந்த
வெளிய தாமரை யொத்தது விளங்கிய கைலை.

(இ-ள்) குளிர்ச்சி பொருந்திய மேகங்கள் இசை பாடும் வண்டுகளைப் போலவும், அன்பு பொருந்திய தேவர்கள் முடியோடு முடிதாக்கி உதிரும் பொற்பொடிகள் பூந்தாதுக்களைப் போலவும், சிவாலயந் தாமரைப்பூங்கொட்டையைப்போலவும் இருத்தலினால் கயிலாசமலையானது வெண்டாமரைப் பூவைப்போல விளங்கி நிற்கும். (எ-ம்) (௩)

பொறிய ராமணி படிகமா அயன்வரும் போது
பறவை யாவையு மன்னமென் றெண்ணவும பால்போன்
மறுவில் யானையா இந்திரன் கரிகள்பால் வரவு
நிறைய ணங்கினர் வாணியா நிறைந்திடுங் கைலை.

(இ-ள்) கயிலாசமலையானது தன்னிடத்துள்ள புள்ளிகளையுடைய நாகரத்னங்கள் படிகமணிகள் (வெண்ணிறமணிகள்) ஆகவும், பிரமன் வரும்போது எல்லாப் பறவைகளையும் அன்னமென்றெண்ணவும், இந்திரன்-எல்லா யானைகளையும் அயிராவதமென்றெண்ணிவரவும், எல்லாத் தெய்வப்பெண்களையும் சரசுவதியென்றெண்ணும்படியாகவு மிருக்கும். (எ-ம்) (௪)

அண்ண லைத்தொழப் படியுலாய்க் கோயில்*புக கமரர்
தண்ணி ரைத்தமா முடிதடித் தாகவே யதன்மே
லெண்ணி லாதெழு நந்திகைப் பிரம்படி யிடியா
வெண்ணி றத்தவார் முகிலெனா விளங்கிடுங் கைலை.

---

* புக்க அமரர் என்பது புக்கமரர் என மரீயிற்று.

(இ-ள்) சிவபெருமானைத் தொழுவதற்குக் கோயிலுள்ளே புகுந்த தேவர்கள் பொன்முடிகள் மின்னல் போலவும், அம்முடிமேலடிக்கப்பட்ட நந்திபெருமான் பிரம்படி யிடிபோலவு மிருந்ததினால் கயிலாசம் வெள்ளை மேகத்தை யொப்பாயிருக்கும். (எ-ம்) (ரு)

ககன மாகிய மாயவன் கடவுளர் துதிசூழ்
நகைத ழைந்தபொற் கோயிலா மந்தர நாட்டி
வகிர்ம திச்சடை யானெனு மமுதினை வாங்கத்
தருப யோததி யொத்தது கைலையாஞ் சைலம்.

(இ-ள்) ஆகாயம் மகாவிஷ்ணுவைப் போலவும், தேவர்கள் துதிக்கும் சிவாலயம் மந்தரகிரியைப் போலவும் பிளவுகொண்ட சந்திரனைச் சடையிலே தரித்த சிவபெருமானாகிய அமுததத்தைக் கடைந்தெடுப்பதற்குக் கயிலாசமலை யானது திருப்பாற்கடலை யொத்திருக்கும். (எ-ம்) (சு)

வெளிய பேரொளி துளும்பிய வெள்ளியங் கிரியிற்
குளிரொ ழுந்தபொற் கோயிலிற் கொண்டபீ டிகைமே
லளின மேலயன் விண்ணவர் நாரணனேத்த
வொளிபெ றுஞ்சிவன் கோடிசூ ரியனென வுறைந்தான்.

(இ-ள்) வெண்மை பொருந்திய பெருஞ்சோதிமயமாகிய கயிலாசமலை யில் குளிர்ச்சி பொருந்திய பொன்மயமாகிய திருக்கோயிலில் சிங்காதனத்தின் மேல் அரிபிரமேந்திராதி தேவாகள் வணங்கிச் சூழ்ந்து நிற்பக் கோடிசூரிய ரொன்றுசேர்ந்து இருந்தாற்போலச் சிவபெருமான் எழுந்தருளி யிருந்தனர். (எ-ம்) (எ)

அருளொ ழுக்கிய கடைக்கணு ளம்பிகை மடிமேற்
பொருவில் சோதிகொண் டறுமுகக் குழவிபோ லிருப்ப
விருள்கி ழிந்திட விமைத்திடு மிளமதிச் சடிலன்
றிருவு ளங்களி துளங்குபல் காதைசெப் பினனால்.

(இ-ள்) கருணைவெள்ளம் பொழியுங் கண்களையுடையவளாய்ச் சோதிப் பிரகாசமுடைய குழந்தையாகிய குமரக்கடவுளை மடிமேல் வைத்துத் தமது இடப்பாகத்தில் வீற்றிருக்கும் உமாதேவியைப் பார்த்து அவள் மனங்களிகூரச் சந்திரனைத் தரித்த சடையையுடைய சிவபெருமான் அநேக புராண சாஸ்திர மாகிய கதைகளைத் திருவாய் மலர்ந்தருளினார். (எ-ம) (அ)

இரத மூறிய சொல்லுமை யிறையவ னழகைப்
பருகுங் கண்கள்போற் சங்கரன் பகர்ந்திடுங் கதையைத்
திரைபெ றுங்கட லமுதெனத் திருச்செவி சாத்தி
மருவு பின்சிவ ஞானமேன் மனம்பிடித் தெழுந்தாள்.

(இ-ள்) மதுரமாகிய சொல்லையுடைய உமாதேவி சிவபெருமானழகைக் கண்களாலருந்தியதுபோல, அவர் சொல்லும் கதைகளைத் தன் திருச்செவிக்கு அமுதமெனக் கேட்டுச் சிவஞானத்தின்மேல் மனம் பற்றுதலுடையவளாயினள். (எ-ம்) (க)

சூர ணங்கினர் கற்பக மலர்மலர் தொடுத்த
தார ணிந்திடு குழல்சிவ னடிமலர் தழுவ
வார்செ றித்திட வளர்முலைக் குடங்கள்குப் புறவே
யாரு மன்பினே டுமைடணிந் தஞ்சலி முகிழ்த்தாள்.

(இ-ள்) தெய்வப்பெண்கள் கொடுத்த கற்பகமலரைத்தரித்த கூந்தல் சிவபெருமானுடைய பாதமாகிய தாமரை மலர்களைத்தரிக்கவும், தனங்கள் குப்புறவும் கீழேவிழுந்து உள்ளன்போடு உமாதேவி பணிந்து கரங்களைக் கூப்பினள். (எ-ம்) (க0)

அஞ்ச லித்துநின் றடியனேன் கூறலைக் கேட்டி
நெஞ்ச யிர்த்திடு புராண நூல் நிகழ்த்திடு மறிவால்
வஞ்ச மாகிய பிறவியை மாற்றிட லரிது
விஞ்சை சேர்சிவ ஞானமே பரகதி விளைக்கும்.

(இ-ள்) கரங்களைக்குவித்து நின்று (சுவாமி) அடியாள் சொல்வதைக் கேட்கவேண்டும். மனத்துக்குச் சந்தேகத்தைத்தரும் புராண கதைகளாலே பிறவியை நீக்கமுடியாது. சிவஞானத்தினலேதான் பிறவியை நீக்கி மோக்ஷம் அடையலாகும். (எ-ம்) (கக)

ஆத லாற்சிவ ஞானமே யடைந்திட மாலைப்
போத விழ்ந்திட வண்டுகிண் டுஞ்சடைப் புனிதா
வேத உச்சியிற் பொருடனை விளக்குமைந் தெழுத்தைக்
கோதி லாதெழு பிரணவ மந்திரங் கூட்டி.

(இ-ள்) ஆகையால் கொன்றைப்பூமாலையில் வண்டுகள் மொய்க்குஞ்சடையையுடைய பரம்பொருளே! சிவஞானத்தை அடைதற்கு வேதசிரத்தினில்

உண்மைப்பொருளை விளக்கும் பஞ்சாட்சர மந்திரத்தைப் பிரணவமந்திரத்தோடு சேர்த்து. (எ-ம்) (கஉ)

என்செ வித்துளை குடித்திட வியப்புறி யிதனை
நின்ச ரோருகத் தாளிணை பிரிந்திலே னிணைந்தே
யுன்செ விக்கிட வறிவிலே னெவ்வகை யுடைத்தேன்
பொன்செய் வார்சடைப் புண்ணிய நின்செயல் புதுமை.

(இ-ள்) என் செவியாலருந்தும்படி சொல்லியருளவேண்டும். உம்முடைய பாததாமரைகளைப் பிரியாதவளாகிய நான் இந்த மந்திரப் பொருளை உம்முடைய காதினிடத்துச் சொல்ல அறிவில்லாதவளானேன். நான் எவ்விதத்திற் சிறந்தவன். பொன்போலும வாாந்தசடையினையுடைய கருணாநிதியே! உம்முடைய செயல்களெல்லாம் அற்புதமாகும். (எ-ம்) (கங)

மன்னு நின்னருட் பார்வையை மருவிய நாளிற்
பன்னு நல்லறி வெய்திடும் பக்குவ கால
மின்ன கேள்வியை யெடுத்தநின் செயலினை யெவரே
யுன்ன வல்லவ ரித்திற முரைத்தியென் றுரைத்தாள்.

(இ-ள்) நிலைபெற்ற உம்முடைய கிருபா நோக்கத்தைப் பொருந்திய காலத்தில் பக்குவமுதிர்ந்து ஞானமுண்டாகும். இப்படிப்பட்ட என் கேள்வியை யேற்றுக்கொண்ட உம்முடைய பெருமையை யார் நினைக்கவல்லவர். அந்த மந்திரப்பெருமையைச் சொல்லவேண்டும் என்று உமாதேவி சொல்லினாள். (எ-ம்) (கச)

என்ற காலையிற் பராபர னிளநகை யருமபித்
துன்று வார்சடை வீக்கிய மணிமுடி துளக்கி
நின்ற தேவரைப் போகவிட் டோலகக நிறுத்திக
குன்றி லேவரு கொடிமுகம பார்த்திவை கூறும்.

(இ-ள்) அதுகேட்ட சிவபெருமான் குறுநகை செய்து நெருங்கி நீண்ட சடையிலே இர்த்த கிரீடந்தரித்த தலையையசைத்து அங்கிருந்த தேவர்களை அப்புறம் போகச்செய்து சத்தத்தை நிறுத்தி மலையரசன் புதல்வியாகிய உமாதேவியாரைப் பார்த்துச் சொல்லுவாராயினர். (எ-ம்) (கடு)

மறைக ளாயிரஞ் சிலமபென வடிவெடுத் தலறி
யறைய வேமுடி தந்திடாப் புகழ்பெறு மணங்கே
குறைவில் வேதமாந் தயிரினைக் குடைந்துடைந் தெடுத்த
நறிய வெண்ணெய்போன மந்திரங் கேளென நவிலும்.

(இ-ள்) வேதங்கள் ஆயிரம் ஒலி வடிவங்களைக்கொண்டு கதறியும் சொல்லுதற்கரிய புகழைப்பெற்ற தெய்வப் பெண்ணாகிய உமையே! குறைவில்லாத வேதமாகிய தயிரைக்கடைந்தெடுத்த வாசனை பொருந்திய நல்ல வெண்ணெய் யைப்போலுள்ள மந்திரத்தைக்கேளென்று சொல்லுவாராயினர். (எ-ம்) (கசு)

வேறு.

மாநலங் கிளரு மாறெழுத் தாய
மந்திரத் தெழுபெறுங் கோடி
தானென விரியு மனுக்களு மறையுஞ்
சடங்கமு மாகம மனைத்தும்
பூநிறை பதினெண் புராணமு மெண்ணெண்
கலைகளும் புவனமுந் தோற்றுந்
தேனெழுக் கெறிந்தாற் றெழுந்ததீங் கிளவிச்
செய்யவாய் மலர்ப்பசுங் கிளியே.

(இ-ள்) தேன்போலும் தித்திப்பாகிய வார்த்தை பேசும் சிவந்தவாயினை யுடைய பச்சைக்கிளிபோலும் ஊமாதேவியே! மகத்தாகிய நன்மையெல்லாம் உண்டாகும் சடாக்ஷரத்திலிருந்து சத்தகோடி மகா மந்திரங்களென்று சொல்லப்படும் எழு ஈறுகளையுடைய எல்லா மந்திரங்களும், வேதமும், வேதாங்கம் ஆறும், எல்லா ஆகமங்களும், பதினெண் புராணங்களும், அறுபத்து நான்கு கலைகளும் எல்லாவுலகங்களும் உண்டாகும். (எ-ம்) (கஎ)

பாரெழு நட்பந் தன்னிலே நட்பம்
பருமையிற் பருமையா லெவருஞ்
சீர்பெறக் கிடையா தரிதிலே யரிதாய்ச்
சிறந்திடு மந்திரப் பெருமை
யேர்கொளெம மனையார் கோடியாண் டினிது
மெடுத்தெடுத் துரைக்கினு மரிது
வாரிறுத் திடங்கொண் டெழுந்திறு மாந்து
மலைபொரு முலைசுமந் தசைந்தோய்.

(இ-ள்) கச்சைக்கிழித்து அடிபரந்து மேலெழுந்து இறுமாப்படைந்து மலையினை மோதுந்தனங்களைச் சுமந்து அசைந்து நடக்கின்ற பார்வதியே! பூமியிலுள்ள சிறியதெல்லாவற்றினுஞ் சிறியதாயும், பெரியதெல்லாவற்றினும் பெரியதாயும் அரியதெல்லாவற்றினு மரியதாயும்விளங்கும் இந்த மந்திரத்தின் பெருமையை எம்போல்வார் கோடிவருடமெடுத்தெடுத்துச் சொல்லினுஞ் சொல்லமுடியாது. (எ-ம்) (கஅ)

இம்மனுப் பெருமை தெரிந்தறி வெய்தி
லெடுக்குமண் டலங்களில் வழங்குஞ்
செம்மையின் பொருளைக் கரதலா மலகஞ்
சிறந்தெனத் தெரிவது மன்றி
வம்மினென் றிடவே சித்திமங் கையர்போல்
வந்துகுற் றேவலை யியற்றுங்
கொம்மைவெம் முலையைக் கொண்டுதள் ளாடிக்
கொடியென நுடங்கிய விடையாய்.

(இ-ள்) இளமையும் வெப்பமுமுடைய தனங்களைத்தாங்கித் தளர்ச்சியடைந்து பூங்கொடியைப்போலசைந்து வருகின்ற பெண்ணே! இந்த மந்திரத்தின் பெருமையைத்தெரிந்து, அறிவடைந்தவர் எல்லா வுலகங்களினுமுள்ள ஒழுங்காகிய பொருள்களையெல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் அறிவதுமல்லாமல், அட்டமாசித்திகளும் அடிமைப்பெண்கள்போல வந்து தங்களுக்கு ஏவல் செய்யவும் பெறுவார்கள். (எ-ம்) (கக)

முதலெழுத் தகரம் உகரமோ டனுகு
மகரமிம் மூன்றெழுத் தடைவே
யதிர்மறை மூன்றுங் கடவுண்மும் மையரும்
பற்றிடும் விந்துநா தங்க
ளுதிசெய வுரைக்கக் குடிலையென் றைவ
ருரைத்திடு மெழுத்தியோ கத்தே
யதர்வண மருவு நம்முரு நாத
மருள்பெறு விந்துநின் னுருவம்.

(இ-ள்) எழுத்துக்களுள்ளே முதலாவதெழுத்தாகிய அகாரமும்உகாரமும் மகாரமும் நெருங்கும் அம்மூன்றெழுத்துக்களும் முறையே பிரமன் விஷ்ணு ருத்திரனென்னு மூன்றுகடவுளரைப்பற்றி நிற்கும். அம்மூன்றெழுத்தோடு விந்துவும் நாதமுஞ்சேர்ந்து ஒன்றாகச்சொல்லுமிடத்துக் குடிலை (பிரணவம்) என்று சொல்லுவர். எழுத்துக்கள் கூடிய முறையே அதர்வண வேதமாகிய மந்திரங்களைப்பொருந்தியிருக்கும் நம்முடைய வடிவம் நாதமென்று சொல்லப்படும். உன்னுடைய வடிவம் விந்துவென்று சொல்லப்படும். (எ-ம்) இவைகளின் உட்பிரிவுகளை ஞானாசாரியரிடத்திலே நன்றாக விசாரித்தறிந்து கொள்க. விந்து என்பது வட்டவடிவம். நாதமென்பது தண்டவடிவம். (௨0)

இவண்சிறி துரைத்தேம் பிரணவங் குய்ய
மெய்திடு மந்திர வித்தாம
பவந்தெறித் திடவே யஞ்செழுத் துரைக்க
முன்னிது பகர்ந்திடல் விதியா
மூவர்தூம் படிவத் தஞ்செழுத் துறைய
மிடங்களை யுணர்த்துதுங் கேட்டி
சிவந்தசெங் கனிவாய் மிழற்றிய சூதலைத்
தேனெழுக் கியபசுங் கிளியே.

(இ-ள்) சிவந்த கொவ்வைக்கனி போன்ற வாயினின்று மதுரமாகிய தேன் போன்ற வார்த்தைகளைப் பேசும் பசிய கிளி போன்ற பார்வதியே! இங்கு சுருக்கிச்சொன்னோம். இப்பிரணவ மந்திரம் எல்லா மந்திரங்களும் உண்டாவதற்கு மூலாதாரத்திலே தோன்றுகின்ற மந்திர வித்தாகும். ஆதலால் பிறவி வேரறுப்பதற்குப் பஞ்சாக்கரமந்திர செபம் செய்யும்போது முதலிலே பிரணவத்தைச் சேர்த்துச் செபம் செய்வதுவே விதியாகும். இனி நம் வடிவமாகிய ஐந்தெழுத்து இருக்குமிடங்களைச் சொல்லுகிறோம் கேட்பாயாக. (எ-ம்) (உக)

வேறு.

ஒருபானென்பானெழுத்துமிசை யுறுமவ்வெழுத்துமெண்மூன்று
மருவுமெழுத்தின்மிசையெழுத்தும வளருமிருபத்தொன்பதின்மேற்
செருகு மெழுத்தை யிகரமெனச் செப்பு மெழுத்து நாலேழ்மேற்
பொருவிலெழுத்தினெட்டெழுத்து மையைந்தின்மேற்பொருமெழுத்தும்.

(இ-ள்) வடமொழி மெய்யெழுத்துக்களுள்ளே 20-வது எழுத்தாகிய நகரமும், 25-வது எழுத்தாகிய மகரமும், 30-வது எழுத்தாகிய சகரத்தோடு இகரஞ்சேர்ந்த சி என்பதும், 29-வது எழுத்தாகிய வகர ஆகாரமும், அதாவது வா என்பது, 26-வது எழுத்தாகிய யகரமும். (எ-ம்) (உஉ)

கூட்டி யிவையைம் பானென்றிற் குளிர்முன் னீரெண் கழிந்தவிபி
மூட்டி யுரைக்கத் தாந்தமுடன பாந்தம் வாந்த முழுவாந்தங்
காட்டும் லாந்தம் நவ்வாதி கலந்த மாந்த மஞ்செழுத்து
நாட்டு நடுவிற் சேர்வருக்க மூன்று மகர நன்காண்டம்.

(இ-ள்) ஒன்றுசேர்த்து, வடமொழியெழுத்துக்கள் ஐம்பதொன்றினுள்ளே முதலிலுள்ள பதினாறெழுத்தைத் தள்ளி மற்றை யெழுத்துக்களைக் கணக்கிட்டுச் சொல்லவேண்டும். தகரத்தின் இறுதியாகிய நகரமும், பகரத்

தினிறுதியாகிய மகாரமும், வகாரத்தினிறுதியாகிய சகாரத்தோடு ஆகாரத்தினிறுதியாகிய இகாரமும் ஒன்றுசேர்ந்த (சி) என்பதும் லகாரத்தினிறுதியாகிய வகாரமும் நகாரத்தை ஆதியாகவுடைய மகாரத்தினிறுதியாகிய யகாரமும் பஞ்சாக்ஷர மந்திரமாகிய அஞ்செழுத்தாக நிலைநிறுத்தப்படும். இவ்வஞ்செழுத்துள்ளே நடுவிலேயிருக்கிற எழுத்துக்கள் மூன்றும் * வருக்க எழுத்துக்களாம். அம் மூன்றினுள்ளே முதலில் நிற்கிற மகாரம் எல்லா மந்திரப் பொருள்களையுந் தன்னுள்ளடக்கி வைத்துக்கொள்ளும் நல்ல (ஒரு) பெட்டியாகும். அஃதெப்படியென்றால்; மகாரத்தின் தெய்வமாகிய உருத்திரனிடத்தில் சருவசங்காரத்திலெல்லாச் சராசரங்களும் ஒடுங்கி மீள அவனிடத்திலே நின்று தோன்றுதல் முறைபற்றி யென்க. இதனுண்மை முழுவதும் ஞானசாரியரையடுத்துக் கேட்டுத் தெரிந்துகொள்க. (எ-ம்) (உங)

குய்யம் விளக்கு மைந்தெழுத்து நிற்கு முறைமை கூறினமா
லைய மனுகா துளந்தெரிந்து பொருளை யுணர்ந்தே யருள்பொங்க
வையம் பொலிபு மோதாமை யோதி யறிய வல்லவனே
செய்யவகிலந்தொழுஞ்சிவனாந் தெளிதேன் றளும்புஞ்சொற்குயிலே.

(இ-ள்) தெளிந்த தேன்போலு மதுரமபெருகிய சொல்லையுடைய பார்வதியே! மூலாதாரத்தினின்றுண்டாகும் பஞ்சாக்கர மந்திரம் நிற்கு மொழுங்கைச் சொன்னோம். இதனைச் சந்தேகமில்லாமல் தெளிந்து இதன் பொருளை யுணர்ந்து திருவருளுண்டாகும் வண்ணம் இந்த மந்திரத்தைப் பிறர்செவி கேளாதபடி மனத்தினுள்ளே தியானிக்க வல்லவன் எவனோ அவனே உலகமெல்லாம் வணங்குஞ் சிவபிரான் சொரூபத்தையடைவன். (எ-ம்) (உச)

இந்தத் திருமந் திரவிறு மற்றை மனுக்க ளிடத்† தடையா
சிந்தித் துவமை யிதற்கிதுவே தெரிக்க லாகு மிம்மனுவே
யந்த மருவா மந்திரத்துக் கரசாஞ் சதருத் திரத்தினிடை
யுந்தி விளங்குங் கருணைகசிந் தூறுங் கடைக்கட் பசுங்கொடியே.

(இ-ள்) கருணை கசிந்தொழுகுங் கடைக்கண்களையுடைய இளம் பூங்கொடிபோன்ற பார்வதியே! இந்த மந்திரத்தின் பெருமை மற்றைய மந்திரங்

* வருக்கம்-வகை; அஃதாவது, ம-உருத்திரன். சி-சிவம். வ-சத்தி என்று கண்டுகொள்க.

† அடையா-மூற்றிறுதி தொக்கது.

களிடத்தினில்லை. இம்மந்திரம் தனக்குத்தானே சமத்துவமுடையது. முடிவில்லாத எல்லாமந்திரங்களுக்குந் தலைமையாயுள்ளது. ஸ்ரீ ருத்திரமந்திரத்தின் நடுவாயுள்ள உயிர்த்தானத்திலே விளங்கி நிற்கும். (எ-ம) (உ௩)

ஈட்டுங் கொடிய பிறவியுட னிறக்குந் தொழிலை மாற்றுகதி
கூட்டு முண்மை தனில்வடித்துக் கொண்ட சார மிம்மனுவே
வேட்ட சதுரர் வடநீழல் விமல னனையார் விளம்பநலங்
காட்டு மற்றை யவர்க்கிலையெங் கருத்திற் றெவிட்டாப் புத்தமுதே.

(இ-ள்) எம்முடைய மனத்திலே தெவிட்டாத புதிய அமுதம்போன்ற பெண்ணே! சனன மரணத்தை மாற்றி மோக்ஷத்திற் சேர்ப்பிக்கும் உண்மைப்பொருள் பலவற்றினுந் தெளிந்து எடுத்துக்கொண்ட சாரமாகும். இந்தப் பஞ்சாக்கர மந்திரத்தை விரும்பிய அறிவுடையோர்கள் கல்லால விருக்ஷத்தடியிலெழுந்தருளியிருந்த தட்சிணாமூர்த்தியைப் போன்ற ஞானாசாரியரால் உபதேசிக்கப் பெற்றுக்கொள்ளக் கடவர். ஞானாசாரியரல்லாத ஆசிரியர் உபதேசிப்பதற்கு அருகரல்லர். (எ-ம்) (உ௪)

குருவே தினமு மெய்வருந்திக் கொணரு மழியாப் பெருநிதியங்
குருவே யிரவு பகல்பயிற்றிக் கூற வடையும் பெருங்கல்வி
குருவே பரமா னந்தத்தைக் கூட்டு மழியாத் திருவீடு
குருவே மனவா சகங்கடந்து கூற வரிதாம் பரப்பிரமம்.

(இ-ள்) குருவே ஒப்பற்ற செல்வப்பொருளும், அதனினுஞ் சிறந்த கல்விப்பொருளும், பரமானந்தத்தை விளைவிக்கும் மோட்சவீடும் மனம் வாக்குக் கெடாததாகிய பரப்பிரமமுமாவர். (எ-ம்) (உ௫)

இதனைப் பீசாக் கரமபொருத்தி யிசைக்க வலிதாம் வேறுபட்டால்
முதிர்மந் திரங்கள் வலியின்று முளையா வித்து முளைத்தாலும்
பொதியும் பைங்கூழ் விளையாதா மதுபோற் புவியிற் பயனிலையா
மதுர மொழுகி யுவட்டெடுகரு மழலைச் செழுஞ்சொற் பசுங்கிளியே.

(இ-ள்) தித்திப்பு மிகுந்து பெருக்கெடுத்தோடு மழலைச் சொற்களையுடைய கிளிபோன்ற பார்வதியே! இந்த மந்திரத்தைப் பீஜாக்ஷர மந்திரத்தோடு சேர்த்து உச்சரித்தலே வலிமையுடையதாம். இம்மந்திரத்தை வேறு பிரித்து உச்சரித்தால் யாதொரு வலிமையுமில்லை. முளையாவித்து முளைத்துப் பயிர் வளர்ந்தாலும் விளையமாட்டாது, அதுபோலவே யாதொரு பயனுமில்லை. (எ-ம்) (உ௬)

பொருவில் வளர்மந் திரத்தையுரு வியற்றுங் காலைப் புனிதமுற்று
மருவு மவுனி யாகியென்றுந் தனிமை பெறவே வைகியுளத்
தொருமை பொருந்தி யுருவேற்ற வேண்டுந் தனியே யிருந்துரைக்குந்
திருமந் திரமெய் யினைவிளைக்குஞ் சிலம்போ லிடத்தாள் பெயர்த்திடுவோய்.

(இ-ள்) சிலம்பொலி முழங்க நடந்துவரும் பெண்ணே! ஒப்பில்லாத இந்த மந்திரத்தைச் செபிக்கும்போது பரிசுத்தம் பொருந்தி மௌனியாகித் தனியேயிருந்து மனம் ஒருப்பாடெய்தி உருவேற்றவேண்டும். தனியேயிருந்து செபிக்கப்படும் மந்திரம் சீக்கிரம் பயனை விளைவிக்கும். (எ-ம்)(உக)

தொல்லைக் கடவுட் பழம்பாடற் சுருதி வகுத்த முறைவழுவா
ரெல்லைக் களவில் பிறவியெடுத் தெச்ச முயன்றோ ரிமமனுவே
யொல்லைப் பயனை யுதவுமென வுறுதி பெறுவ ருயர்ந்தெழுந்து
வல்லைப் பொருது வட்டமிட்டு வளர்ந்து திரண்ட குவிமுலையாய்.

(இ-ள்) விரைந்தெழுந்து சூதாடுகருவியை மோதிவட்டமாகித்திரண்ட தனங்களையுடைய பார்வதியே! பழமையாகிய தெய்வத்தன்மை பொருந்திய வேதங்களிலே கூறிய ஒழுங்குதவறாதவரும் அளவில்லாத சன்மங்களையெடுத்து யாகஞ்செய்ய முயல்பவரும் இம்மந்திரமே சீக்கிரம் பயனைத்தருமென்று திடமாகக்கொள்வர். (எ-ம்) (கூ0)

புனிதம் புரிவா ரேனுமது புரியா ரேனு மெவ்வளவி
னினிது பிறந்த சுத்திகள்செய் திசையாக் கால மெனவெண்ணார்
மனதில விழைந்த விருப்பெய்தி யுருவேற் றிடுவோர் வடியாத
சனனக் கடலைக் கடந்துகதி சார்வார் மறைகூ விடுகுயிலே.

(இ-ள்) வேதங்கள் தேடியழைக்குங் குயில்போன்ற உமாதேவியே! விதிப்படி பரிசுத்தஞ்செய்து கொண்டவராயினும், பரிசுத்தஞ் செய்துகொள்ளாதவராயினும், கூடியமட்டில் பரிசுத்தஞ்செய்து மனவொருப்பாடெய்தி காலத்தைக்குறிக்காது மனத்திலே ஆசைதோன்றியவப்பொழுதே இந்த மந்திரத்தை உருவேற்றிடுவோர்கள் வற்றாத சனனமாகிய கடலைக்கடந்து மோட்சமடைவார்கள். (எ-ம்) (கூக)

நாத மெனது பேருருவ நலஞ்சேர் விந்து நினதுருவ
மாதி மனுவை யையைந்து பகுதி யாக்கி யெண்கருமம
போத விசைப்பர் புல்லறிவோர் பொன்னங் கொழுவாற் றினைவிதைத்துக்
கோது படுஞ்சோ றுண்பர்நல்லோர் கதிவேட் டிடுவர் கோகிலமே.

(இ-ள்) குயில்போன்ற பெண்ணே! நம்மிருவருடைய உருவமாகியஇந்த மூலமந்திரத்தை நான்கு பக்கமும் ஐந்தைந்தாக எண்ணும்படி இருபத்தைந்து அறையாக ஒரு சக்கரங்கீறி எழுத்துக்களை மாறிமாறியடைத்து அட்டகருமஞ் சித்தியாகும் பொருட்டுச் செபஞ்செய்வார்கள் அற்ப அறிவுடையோர், இவர்கள் தந்தக்கொழுவினாலுழுது தினையைவிதைத்து விளையச்செய்து சோறுண்பவர்களுக்கு ஒப்பாவர். இவர்களுக்குமோட்சங்கிடையாது. நல்லோர்கள் இதை விரும்பாது முறையாகச் செபித்து மோட்சத்தை விரும்புவார்கள். (எ-ம்)(௫௨)

செறித்த மூலையிற் பால்சொரிந்து நிறையும் பசுவிற் கபிலைநன்று
கறித்த தசையூண் விலங்கினத்திற் பேழ்வாய்க் கடுங்கோ ளரியதிகந்
தெறித்த திவலை யருவிபொழி சிலம்பின் மேரு வரையுயர்ச்சி
பொறித்த நறிய சுவையதனிற் பொலியு மமுத மிகமேன்மை.

(இ-ள்) மதுரமான பால்கொடுக்கும் பசுக்கூட்டங்களுள்ளே காமதேனுவும், விலங்குகளுள்ளே சிங்கமும், மலைகளுள்ளே மகாமேருவும், சுவைப்பொருள்களுள்ளே அமுதமும் உயர்ந்தனவாகும். (எ-ம்) (௫௩)

இருளைக் கிழிக்க நகைத்தவொளி யதனிற் பசுமான் றேர்ப்பரிதி
தரையி னூர்தி தனிலியானை தாதுக் களின்மாற் றிருந்தசெம்பொன்
வருண மதனிற் கடவுண்மறை வடித்துத் தெளிந்த நாவுடையோர்
விரியுஞ் சோதி மணியதனுள் விளங்குங் கருட மணியதிகம்.

(இ-ள்) ஒளிப்பொருள்களுள்ளே சூரியனும், வாகனங்களுள்ளே யானையும், தாதுக்களுள்ளே செந்தாதாகிய பொன்னும், வருணங்களுள்ளே வேதங்களை ஓதியுணர்ந்த பிராமணர்களும், இரத்தினங்களுள்ளே கருடமணியும் உயர்ந்தனவாகும். (எ-ம்) (௫௪)

திரைக ளுதித்து நடனமிடுந் தெண்ணீ ராற்றிற் பகீரதியே
சுருதி முறையிட் டேத்தியிடுந் தொன்னூற் பொருள்கா யத்திரியே
பொருவிறனபாத்திரத்துண் மறையின்குடுமிப்பொருளுணர்ந்தோர்
மருவும பலகோ டிப்பாரப்பின் மனுக்க டனிலஞ் செழுத்ததிகம்.

(இ-ள்) நதிகளுள்ளே கங்காநதியும், வேதங்கள் முறையிடும் பழைய நூல்களுள்ளே சிவகாயத்திரி மந்திரத்தைச் சொல்லும் நூலும், தான பாத்திரங்களுள்ளே சிவனடியார்களும் உயர்ந்தன. அதுபோல, அநேக கோடி மந்திரங்களுள்ளே பஞ்சாக்கர மந்திரம் உயர்ந்ததாகும். (எ-ம்) (௫௫)

கடவு ளுருவா மைந்தெழுத்தின் பெருமை சுருக்கிக் கழறினமாற்
படருஞ் சுவையு ரமுதெனவே செவியிற் பருகிப் பதித்து நெஞ்சி
லிடையூ றின்றி யாயிரத்தோ டிருநான் குருவை யியற்றுதிபூந்
தொடரின் வரிவண் டடைகிடந்து விளரி தொகுத்த நறுங்குழலாய்.

(இ-ள்) பூமாலையில் வண்டுகளடைகிடந்து விளரிஎன்னும் இராகத்தை மிகுதியாகப்பாடும் நல்லகூந்தலையுடைய பெண்ணே! சிவவடிவமாகியஐந்தெழுத்தின் பெருமையைச் சுருக்கிச்சொன்னோம். இனிய வமுதமாகிய தேனைப் போல் உன் செவியாற்கேட்டு மனத்திற்பதித்து, யாதொரு விக்கினமுமில்லாம லாயிரத்தெட்டுருச்செபம் செய்வாயாக. (எ-ம்) (௫௯)

பெறுதற் கரிய மந்திரத்தைப் போரா தரவால் விதித்தபடி
நிறுவி யுருவேற் றிடுஞ்சதுரர் நிறையுங் கோடி குலங்களுடன்
மறுவில் சோதிக் கைலைதனில வாழ்வா ரோதா தோதியிதை
யறைவ ரழியா வருளடைவா ரன்னம வெருவ நடைபெயர்வோய்.

(இ-ள்) அன்னப்பறவை பயப்படும்படி நடக்கின்ற நடையினையுடைய பார்வதியே! பெறுதற்கரிய இந்த மந்திரத்தை மிகுந்த பேரன்போடு முறையாகச்செபம் செய்வோர், தங்கள் சுற்றத்தாருடன் கோடிகாலந்திருக்கயிலாய மலையிலே வீற்றிருப்பார்கள். இதனை ஓதாமல செபம் செய்வோர்கள் திருவருளைப்பெறுவார்கள். (எ-ம்) ஓதாமற்செய்தலாவது பிறர் செவிகேளாமல் மனத்திலே செபஞ்செய்தலாம். (௬௦)

அருளைந் தெழுத்தே பரப்பிரம மைந்து லிபியே சிவமெழிலைத்
தருமைந் தெழுத்தே பரமானந் தத்தை விளைத்த நிலம்புனிதம
வருமைந் தெழுத்தே கதியடைய வகுத்த சூட்சி கடவுண்மயம்
பொருளைந் தெழுத்தே யானந்த வுருவை விளக்கும் புகழ்த்தீபம்.

(இ-ள்) கருணைசொரூபம் ஆகிய இவ்வைந்தெழுத்தே பரப்பிரமமும், சிவமும், பரமானந்தத்தை விளைவித்த நிலமும், மோட்சசாதனமாகிய நுட்ப சூட்சியும், சிவமயமும், சச்சிதானந்த சொரூபத்தைக்காட்டும் ஒப்பற்ற விளக்கொளியுமாம். (எ-ம்) (௬௧)

வேறு.

இம்மனு வதற்குத் தெய்வ மிருடிநாஞ் செகத்திற் சந்தஞ்
செம்மைசேர் தழியா வீடு திகழ்வினி யோக மாக்கும
கொம்மைவெம் முலையா யென்று குளிர்கிடந் திறைக்குங் கங்கை
சும்மைசெய் திலகும் வேணித் தூயவன் கிளத்தி னானே.

(இ-ள்) இந்த மந்திரத்துக்குத் தெய்வமும் இருடியும் நாமே. சந்தசு மோக்ஷ வீட்டை வினியோகஞ்செய்யும் சத்தி நீயே. எட்டாகிய தனங்களையுடைய பார்வதியே! என்று கங்காநதியைத்தரித்த சடையை யுடைய சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளினர். (எ-ம்) (௬௧)

கிளத்திய மாற்றங் கேட்டுக் கிஞ்சுகக் கனிவாய்க் கிள்ளை
யுளத்தினி லுவகை பொங்க மந்திரத் தொருப்பா டுற்றாள்
வளர்த்திய மடிமேல் வைகு மழலைவாய்க் குழவிச் செவ்வேள்
குளத்தெரிவைத்தோன்சொற்றபொருளெலாங்கொள்ளைகொண்டான்

(இ-ள்) அதுகேட்ட உமாதேவி திருவுள்ளத்திலே சந்தோஷமதிகரிக்க அவ்வினிய மந்திரப்பொருளை தியானிக்குங் கருத்துடையவளாயினள். உமா தேவியின் மடிமேலிருந்த இளமை வார்த்தை பேசும் பிள்ளையாகிய முருகக் கடவுள் நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் அருளிய முறைப்படியே பஞ்சாக்கரமந்திரப்பொருள் முழுதுந்தெரிந்துகொண்டார். (எ-ம்) (௭0)

உரைகொள்மா ணாக்க ரென்ன *வுற்றுமைக் கறைந்த கேள்வி
மருவிய வித்திற் போது வளாதழை கிளைபோ லெள்ளிற்
புரைதரு தயிலம் போலப் புந்திமான் கல்வி போலத்
தரணியிற் பொதிந்த நீர்போற் றழைந்தது குமரன் கேள்வி.

(இ-ள்) அம்முருகக் கடவுளின் கேள்வியானது நண்ணிய வித்தி லிருந்து கிளை வளார் கொம்பு கவர் முதலியவையுடைய விருட்சந்தோன்று வதுபோலவும், எள்ளில் தயிலம் போலவும், கூரிய அறிவுடையோன் கல்வி போலவும், ஊற்றுநீர்போலவும் மேலும் மேலும் ஒன்றுபத்து நூறு ஆயிரமாக விருத்தியாயிற்று. (எ-ம்) (௭௧)

ஆய்க்குழை கேள்வி நெஞ்சி லமுந்திட வுணர்ந்து கொண்ட
சேய்க்கிளம் பருவ மைந்து வயதுபோற் றிகழ நோக்கி
வேய்கவிணை யிருதோள் கொண்ட விமலையுஞ் சிவனு நேசம்
வாய்க்கவே யிருவர் கண்கள் விருந்துண வாழு நாளில்

* உற்றுமை யென்பதிற் பெயரெச்ச ஈறுகெட்டது.

(இ-ள்) தாயாகிய உமாதேவி கேள்விப்பட்ட உபதேசமந்திரப்பொருள் நெஞ்சிலே பதியும்படி தெரிந்துகொண்ட குமாரக்கடவுளுக்கு ஐந்தாவது வயது வர மூங்கில்போலுந் தோள்களையுடைய உமாதேவியும் சிவபெருமானும் அன்பு நிறைய நோக்கிக் கண்கள் களிகூர்ந்திருக்குங்காலத்தில். (எ-ம்) (சஉ)

காரொளி பெருகி யூறக் கடுவிடங் கிடக்குங் கண்டன்
சீரொளோ லக்கஞ் சேருந் தேவரை விழியா னீக்கி
யேர்கெழு பனுவ லாட்டி யிருமுலை முகடு பாயு
மார்பனை நோக்குங் காலை மனமெழுங் குறிப்பைக் கண்டான்.

(இ-ள்) நீலகண்டத்தையுடைய சிவபெருமான் தரிசிக்கவந்த தேவர்களையெல்லாம் திருக்கண்ணாற் பார்த்துக் குறிப்பினாற் போகச்செய்து, சரசுவதி நாயகனாகிய பிரமதேவனை நோக்கினார். அவனும் சிவபெருமான் திருவுள்ளக்குறிப்பை அறிந்தான். (எ-ம்) (சங)

வண்டுழு முறுக்கு விட்டு மலர்ந்தமா லிகையான் வேணித்
துண்டவெண் பிறையி னானைத் தொழுதுவாய் புதைத்து நிற்கக்
கண்டுசெவ் வேளைத் தூய கலைகளை யறிவி யென்று
னெண்டிசை கதைக ளாக வியம்பிடும் பொருட்டி தன்றே.

(இ-ள்) வண்டுகள் கிண்டுதலால் முறுக்குவிட்டு மலருந்தாமரை மாலையணிந்த பிரமதேவன் மூன்றாம் பிறைச்சந்திரனைச் சடையிலே தரித்த சிவபெருமானை வணங்கி வாய்புதைத்து நிற்க, சிவபெருமான் அவனைப்பார்த்து நமது குமாரனாகிய முருகனுக்குப் பரிசுத்தமாகிய கலைகளையெல்லாம் உபதேசிப்பாயாகவெனத் திருவாய் மலர்ந்தருளினார். இது எல்லா எட்டுத்திக்கிலுள்ளாரும் கதைகளாகச்சொல்லும் பொருளையுடையது. (எ-ம்) (சச)

செப்பிய மாற்றம வேதன் சிரம்பெறச் சூடி மேனித்
துப்பெழுங் கோடி பானுச் சோதிகொண் டசைந்து நிற்கு
மொப்பகல் சேயை வாவென் றுரைத்திட வயனபின் போந்து
கொப்பென வொருபாற் கோயில் குறுகியே யிருந்தார் மன்னோ.

(இ-ள்) சிவபெருமானிட்ட கட்டளையைப் பிரமதேவன் சிரத்தின்மேற்றாங்கிக்கொண்டு சிவந்த கோடிசூரியப் பிரகாசரா யசைந்து நிற்கும் ஒப்பில்லாத முருகக்கடவுளை என்பின்னே வருகவென்றழைக்க, அவரும் அவன் பின்னே விரைவாக வந்து திருக்கோயிலினொருபக்கத்திலிருந்தார். (எ-ம்) (சரு)

கோள்படு கணித நூலின் குலவிய வோரை பார்த்து
வேள்பட விழித்த செந்தீ விழிப்பிரான் மூத்த பிள்ளை
தாள்பட வணங்கி வேதன் றருபிர ணவத்தைச் சாற்றத்
தோள்படு கடப்பந் தாரான் கையமைத் திதனைச் சொல்வான்.

(இ-ள்) சோதிட சாத்திரத்தின்படி நல்ல சுபமுகூர்த்தம் பார்த்து மன் மதனையெரித்த நெற்றிக்கண்ணையுடைய சிவபிரான் மூத்த குமாரராகிய விநாயகக்கடவுளை வணங்கிப் பிரமதேவன் பிரணவமந்திரத்தை உபதேசிக்க, அதனைக்கேட்ட கடப்பமாலையணிந்த முருகக்கடவுள் கையமைத்துத்தடுத்து பிரமதேவனைப் பார்த்துச்சொல்லுவார். (எ-ம்) (௬௬)

நான்முகத் தொருவ கேட்டி நவின்மொழிப் பொருளைச் சாற்றில்
யான்முதற் பொருளைக் காண வாசையிங் குடையே னீயுந்
தேன்முகந் தூற்றும் வாய்மை தெரிந்திடுங் குருவா மென்ன
வான்முக டளந்த சோதி வள்ளலுக் கயன்சொல் வானால்.

(இ-ள்) பிரமதேவனே! நீயுபதேசித்த பிரணவமந்திரத்தில் முதலாவது பொருளைக்கேட்க ஆசை எனக்கதிகமாயிருக்கிறது. அதைச்சொன்னால்உன்னை உண்மையுடைய குருவாகக்கொள்ளலாமென்றார். அதுகேட்ட பிரமதேவன் சோதிசொரூபராகிய முருகக்கடவுளைப் பார்த்துச்சொல்லுவான். (எ-ம்) (௬௭)

குளறிய மழலை வாய்மைக் குமரவேள் கேட்டி சால
வளமைசேர் கருவி நூலின் வகைகளை யறிந்த பின்ன
ருளமனுப் பொருளைக் காண வுறுதிவாய்த் திடுவ தன்றித்
தளர்தரு சிந்தை யேற்குச் சாற்றரி தென்று சொற்றான்.

(இ-ள்) இளமைப்பிராயத்தையுடைய குமாரக்கடவுளே! மிகுதியாகக் கருவிநூல்கள் பலவற்றையுந்தெரிந்த பின்னர், மந்திரப்பொருளைக் காணலாகும். அதுவுமல்லாமல் தளர்ந்த சிந்தையையுடைய எனக்குச்சொல்லச் சாத்தியப்படாதென்று சொன்னான். (எ-ம்) கருவிநூல்-இலக்கணநூல். (௬௮)

என்றுசொற் கூற ஞானத் திளங்களி றனையான் கேட்டு
நன்றுநன் றெனச்செவ் வாய்வெண் ணகைநிலாக் கற்றை தூண்ட
வொன்றுநீ யறிகி லாதா யோதிய வேத மென்கொல்
பொன்றிக ழண்ட மெல்லாம் பூத்தது மென்கொ லென்றான்.

(இ-ள்) பிரமதேவனவ்வாறுசொல்ல, அதுகேட்ட ஞானமயமாகிய யானைக்கன்றுபோன்ற குமாரக்கடவுள் பிரமதேவனைப்பார்த்து, உன் வார்த்தை

னன்றாயிருக்கின்றதென்று புன்சிரிப்புச்செய்து யாதொன்றுந் தெரியாதவனு கிய நீ வேதங்களை எவ்வாறு படித்தாய். எல்லா அண்டங்களையும் எப்படிச் சிருட்டித்தாயென்றார். (எ-ம்) (சகூ)

இன்னணம் புருவ நெற்றி யேறிடச் சிவந்து பார்த்துப்
பன்னிரு விழியான் செய்ய பவளவாய் மலர்ந்து கூறப்
பொன்னவிர் கமலச் சேக்கை பொலிந்தவன் றுளுறக்க மிட்டுத்
தன்னுடல் நடுங்கி நாணந் தாங்கியே வெருண்டெ ழுந்தான்.

(இ-ள்) இவ்விதம் முருகக்கடவுள் கண்கள் சிவக்கக் கோபித்துப்பார்த்துச்சொல்ல, தாமரையில் வசிக்கும் பிரமதேவன் மனநடுங்கிச் சரீரமும்நடுங்கி வெட்கத்தைத்தாங்கித் தன் இருப்பிடத்தைவிட்டுப் பயந்தெழுந்திருந்தான்.()()

எழுந்துடன் விரைந்து வந்தே யிரைந்துநீர் துளும்பத் திங்கட்
கொழுந்தொதுங் கியதோர் வேணிக குழகனைக் கண்டு தாளில்
விழுந்தெழுந் திருகை கட்டி விழியினீ ரருவி போல
வழிந்திட நின்ற வேதன் மனக்குறிப் பதனைக் கண்டான்.

(இ-ள்) அப்படி யெழுந்திருந்த பிரமன் விரைவாகவந்து இளஞ்சந்திரனைத்தரித்த சடையையுடைய சிவபெருமானைக்கண்டு திருவடிக்கீழ்விழுந்து வணங்கிக்கைகட்டிக் கண்ணீர் அருவிபோலச் சொரிய நின்றான். அப்படி நின்ற பிரமனுடைய மனக்குறிப்பைச் சிவபெருமான் அறிந்துகொண்டனர். (எ-ம்) (ருக)

இருள்பழுத் தொழுகுங் கண்ட னின்றதோர் மகன்மே லாசை
பெருகிடச் சினந்தான் போலப் பேசியே யயனை நோக்கி
யருகிலஞ் சலித்து நிற்குங் கணங்களை யழைத்து நீர்போய்
முருகனை யழையு மென்ற மொழிப்படி யழைத்து வந்தார்.

(இ-ள்) அதன்மேல் இருள்நிறம்போன்ற நீலகண்டத்தையுடைய சிவபெருமான் தம்முடைய மகனாகிய குமரகடவுள்மேலாசை யுள்ளே யதிகரிக்க வெளியே கோபித்தவரைப்போலப் பேசிப் பிரமனைப்பார்த்துப் பக்கத்தில் வணங்கிநிற்குஞ் சிவகணங்களை யழைத்து நீங்கள் போய் நமது குமாரனாகிய முருகனை அழைத்துவாருங்களென்றார். அவர் கட்டளைப்படி கணங்கள்போய் முருகக்கடவுளை அழைத்து வந்தார்கள். (எ-ம்) (ருஉ)

வந்ததாட் சதங்கை கோடி மறைகள்போல் முறையிட் டார்ப்பச்
சிந்தையி லுவகை பொங்கத் திருவடி பெயரா நிற்குங்
கந்தனை வெகுண்டான் போலக் கழறியே கலைக டேருங்
கொந்தவிழ் கமலன் றன்பாற் கொண்டதோர் குறைகூ றென்றான்.

(இ-ள்) பாதத்திலணிந்த சதங்கைகள் வேதங்களொலிப்பதுபோல முழங்கவந்து தம் முன்னே நிற்கும் முருகக்கடவுளைக் கோபித்தவரைப்போற் பார்த்து, ஐயா! உனக்கு உபதேசிக்கவந்த கலைகளெல்லாமுணர்ந்த பிரமனிடத் திலென்ன குறைகண்டாய் சொல்லென்றார். (எ-ம்) (௫௩)

என்றபோ தமுதங் கைக்க வினித்திடுங் குதலைச் செந்தேன்
மன்றலம பவளச் செவ்வாய் வழங்குவ தெனவே யையா
நன்றிகொள் கலைகள் கூறும பிரமனே நவின்ற வாய்மைக்
கொன்றிய பொருள்கூ றென்ன வூமர்போ லின்பால் வந்தான்.

(இ-ள்) இவ்விதங்கேட்டபோது முருகக்கடவுள் மழலைவார்த்தையாகிய தேனைச்சிவந்தவாய் அமுதமுங்கைப்பச் சொரிவதுபோலக் கூறுவார். ஐயனே! பிரமதேவன் சொல்லிய பிரணவ மந்திரத்தின் உண்மைப்பொருளைச்சொல் லும்படி கேட்டேன். அது சொல்லத்தெரியாமல் ஊமையைப்போல் தங்க ளிடத்திற்கு வந்தான். (எ-ம) (௫௪)

நிகழ்ந்ததிச் செய்தி யென்ன நிறைவிட மொழுகும் வாய்ப்பன்
னகஞ்சடைக் காட்டில் விட்டோ னலங்கெழு மகவை நோக்கி
யுகந்தபின் கூறும் வேத மோதியே பயிற்ற வல்லா
னகந்தனி லுதித்த வண்ண மியற்றுவ தறனோ சொல்லாய்.

(இ-ள்) இதுதான் நடந்த காரியமென்று சொல்ல, விடமொழுகுகின்ற வாயையுடைய பாம்பைச் சடைக்காட்டில் விட்டுவைத்த சிவபெருமான் முரு கக்கடவுளைப்பார்த்து மகிழ்ச்சியடைந்தபின் கூறுவார். வேதங்களையெல்லாம் நீ ஆராய்ந்த பின்னர்ச்சொல்லக்கூடிய பிரணவமந்திரப்பொருளை உன்னிஷ் டப்படி முன்னர்ச்சொல்லுவது முறையாகுமோ? நீ சொல்லுவாய். (எ-ம்) (௫௫)

ஆங்கது வன்றி யன்னோ னருளிய மொழியைத் தட்டித்
தீங்குற வெதிரே செப்ப லாகுமோ வதுவு மன்றி
யோங்கிடு மவற்குத் தானே மடமபகர்ந் திடுத லுண்டோ
தாங்கிய மதியம் போலத் தழைத்தசன் முகனே யென்றார்.

(இ-ள்) அதுவுமல்லாமல் அவனுடைய வார்த்தையைத் தள்ளியெதிர்த்துப்பேசலாகுமா? அதுவுமல்லாமல் அவனையுந் தெரியாதவனென்று நிந்தனை சொல்லத்தகுமோ? இளஞ்சந்திரனைப்போல வளரும் சிறு பிராயத்தையுடைய குமரனே என்றார். (எ-ம்) (௫௬)

எனுமுரை கூற வைவே லிமைத்திடுங் கரத்தோன் சொல்வான்
பனிமதிக் குழந்தை தோற்றும் பவளவே ணியவே தாவை
வினவிய குடிலைக் கொத்த மந்திர மிலை யீதிற்
புனைசரா சரங்க ளியாவும பொலிந்திடுங் கேட்டி யென்றான்.

(இ-ள்) சிவபெருமான் இப்படி உலகநியாயங்களைக்கூற,கூரிய வேலேந்தும் முருகக்கடவுள் குளிர்ச்சியும்இளமையுமுடைய பிறைச்சந்திரனைக்காட்டும் பவளம்போன்ற சடையையுடைய ஐயா! நான் பிரமதேவனைக்கேட்ட பிரணவ மந்திரத்துக்குச் சமமான மந்திரமில்லையாது. இந்த மந்திரத்திலிருந்து சகல சராசரங்களும் தோன்றும். நீர்கேட்டால் அவ்வுண்மையைச் சொல்லுகிறேன் என்று சொன்னார். (எ-ம்) (௫௭)

அப்பொழு திளைய மூர லரும்பிவெண் ணிலவு காலச்
செப்பிய குடிலை மைந்த தெரிந்ததெவ் வண்ணங் கூறென்
றொப்பிலான் சென்னி தாழ்ந்தே யுவந்துதன் செவியைக காட்ட
இப்படி வினவச் சொலல வெளியதோ வென்று கூறி.

(இ-ள்) அப்போது ஒப்பில்லாதவராகிய சிவபெருமான் குறுநகைசெய்து முருகக்கடவுளைப்பார்த்து,ஐயா!நீ இந்தப்பிரணவ மந்திரத்தின்பொருளையெவ்வாறு தெரிந்துகொண்டாய்? அதனை நமக்குச்சொல்லென்று செவிசாய்த்துக் கேட்க, முருகக்கடவுள் இவ்விதங்கேட்டாலெப்படிச் சொல்லக்கூடும் அது சொல்லுதற்கு இலேசானதோவென்று சொல்லி. (எ-ம்) (௫௮)

எழின்மணி திரண்டு சோதி யெடுத்தெடுத் திறைக்கும் பீடந்
தழைதர நாமே வைகத் தாழ்ந்துநின் றெம்மை நோக்கி
வழிபடுங் கரங்கள் கூப்பில வருககலா மெனமால் காணாக்
குழகனு மிழிந்து செவ்வாய் குறுநகை யரும்பி நின்றான்.

(இ-ள்) இரத்தினங்கள் பிரகாசிக்கின்ற சோதிமயமாகிய பீடத்தின் மீதுநாமிருக்க எம்மை நீர் தாழ்ந்து நின்று வணங்கிக் கரங்களைக்குவித்துக் கேட்டாற் சொல்லலா மென்றார். அதுகேட்ட சிவபெருமானுந்தாழ்ந்து குறுஞ்சிரிப்புக்கொண்டு நின்றார். (எ-ம்) (௫௯)

இளங்கதி ரனைய சேயை யெழின்மணிப் பீடத் தேற்றித்
தளஞ்சத முடுத்த கஞ்சத் தடக்கையைக் கூப்பி யையா
வளங்கெழு பொருள்கூ றென்ன மாதுமைக் கிசைத்த வாறு
விளங்கிய வகங்கை நெல்லிக் கனியென விரிக்க லுற்றான்.

(இ-ள்) அதன்பின் இளஞ்சூரியனைப்போன்ற முருகக்கடவுளைச் சிவபெருமான் இரத்னங்களிழைத்த ஆசனத்திலே யெழுந்தருளப்பண்ணித் தாமரை மலர்போலுங் கரங்களைக்கூப்பி, ஐயா! பிரணவமந்திரத்தின் பொருளைச் சொல்லென்று கேட்க, தாம், முன்னர் உமாதேவிக்குபதேசித்த முறைப்படியே உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கப் பிரணவப்பொருளை எடுத்து முருகக்கடவுள் கூறத்தொடங்கினார். (எ-ம்) (௬0)

துறக்கமா நகரில் வாழுஞ் சுரர்பெறு மாண்டி லொன்று
நிறைத்துமூச் செழுப்ப லின்றி நிகழ்த்தியுங் குடிலைக் கிற்று
மறைப்பொருண் முடிவு காட்டா வகைதெரிந் தமரர்க் காகக்
கறுத்திடுங் களத்த னோக்கிக காரிகைக் குரைத்த நாளில்.

(இ-ள்) தேவவருடத்தில் ஒருவருடம் மூச்சுவிடாது உபதேசித்துங் குடிலையாகிய பிரணவமந்திரப்பொருளின் எல்லை தெரியவில்லையாக, அது கண்ட நீலகண்டத்தையுடைய சிவபெருமான் இம்மந்திரப்பொருளை நாம் பார்வதிக்குபதேசம் செய்யும்போதில். (எ-ம்) (௬க)

அன்னவள் மடிமேல் வைகி யறிந்தமை யாரு மென்று
முன்னிய குருவைப் பார்த்து முறையுப தேசஞ் செய்யாப்
பன்னுமந் திரங்க ணாசம் படுமன்றி யுலகோர் கொள்வர்
பின்னது வேண்டி நம்மைப் பிடிகை யுழைநில் லென்றான்.

(இ-ள்) பார்வதியின் மடியிலிருந்து இவன்தெரிந்துகொண்டானென்று நினைத்து, குருவை வணங்கி, உபதேசமுறையாகப் பெற்றுக்கொள்ளாத மந்திரம் பிரயோசனப்படாது. அதுவுமலலாமல் உலகத்தாரு மிவ்வாறே உபதேசமில்லாமலே மந்திரசெபஞ்செய்வர். அதுகூடாது. உபதேச முறையாக மந்திரங்களைக் கேட்கவேண்டுமென்று கருதி நம்மை ஆசனத்தின் கீழ் நின்று முறைப்படி கேட்கச்சொல்லினன். (எ-ம்) (௬உ)

எனுமவை நிற்க வென்றே யிருவிழிக் கருணைப் பார்வை
தனையளித் திலகுஞ் செவ்வாய்த் தண்ணிள மூரல் செய்து
கனைகடல் வயிறு தீயக் கதமெறி வைவேல் பாய்ச்சும்
புனிதனைத் தழுவி யுச்சி மோந்திது புகல்வ தானான்.

(இ-ள்) என்று சொல்லப்படும் *அவ்விரண்டும் நிலைநிற்கவேண்டுமென்று சிவபெருமான் கிருபாநோக்கஞ்செய்து மனமகிழ்ச்சியடைந்துகுறுநகைசெய்து கடல்நீர் வற்றும்படி வேலாயுதத்தைவிட்ட பரிசுத்தராகிய முருகக்கடவுளைக் கட்டித்தழுவி உச்சிமோந்து சொல்லுகின்றார். (எ-ம்) (சுக)

நின்னுரு நமது விம்ப மெனினு முலக நீதி
யுன்னிய குருவா லன்றி யுரைமனுச் சித்தி யாகா
தென்னவே யிணங்கிச் செவ்வே யெழுந்துதாள் சிரத்திற் சூடி
முன்னமே நிற்கச் செங்கை முண்டக முடிமேற் சேர்த்து.

(இ-ள்) நின் வடிவம் நமது வடிவத்தின் பிரதிபிம்பமாயிருந்தாலும் உலகவழக்குப்படி குருமூலமாகப்பெறாத மந்திரஞ்சித்தியடையாது. ஆகையால் நீயும் இதனை நம்மிடத்தில் முறைப்படி உபதேச மூலமாய்ப்பெற்றுக் கொள்ளநில்லென்று சிவபெருமான திருவாய் மலர்ந்தருளினார். முருகக்கடவுளுமதற்குச் சம்மதித்து, எழுந்துநின்று சிவபெருமான் திருவடியைத்தமது தலையிலே தாங்கி நிற்க அவருடைய தலையில் சிவபிரான் தம்முடைய திருக்கரத்தைவைத்து, (எ-ம்) (சுச)

சுவைபழுத் தொழுகுந் தெய்வச் சுருதியா றங்க மாதி
நவையறு கலைக ளெல்லா நவினறு செவ் வேண்முன் னன்கு
செவியினு ளமுத மென்னத் தெவிட்ட வுபதே சித்தான்
கவைதரு நாப்பன் னாக கங்கண மமைத்த கையான்.

(இ-ள்) தெய்வீகம் வாய்ந்த வேதவேதாங்கங்களாமுதலிய கலைகளை யெல்லாம், முறைப்படி முருகக்கடவுள் பன்னிரண்டு செவிகளிலும் அமுதத்தைச் சொரிந்தாற்போலப் பாம்பாகிய கங்கணத்தையணிந்த கையையுடைய சிவ பெருமான் உபதேசித்தருளினார். (எ-ம்) (சுஙி)

பின்னருங் கூறுஞ் செந்தேன் பெருகிய கடப்ப மார்ப
தொன்மைநூ லெமக்குக கூறுந் தொடர்பினாற் சுவாமி நாத
னென்னவே பெறுவாய் நாமே யிருவுரு வெனக்கொண் டாலும்
பன்னிய வநீதி யாமே பரிகரித் திடுதல் வேண்டும்.

(இ-ள்) கடப்பமாலையணிந்த மார்பையுடைய கந்தா! நீயெனக்குப்பழைய நூற்பொருளை உபதேசித்தமையால சுவாமிநாதனெனனும் நாமம பெறுவாயாக. நாமிருவரும ஒருவராக விருந்தாலும் உலகநீதிக்கு விபரீதமான காரியத்தைச்செய்ததால அதற்கு நாமே பரிகாரஞ்செய்தலவேண்டும். (எ-ம)()

* அவ்விரண்டாவது-குரு உபதேசமில்லாத மந்திரம் பயன்படாதென்பதும், உபதேசமுறைப்படி மந்திரங் கேட்கவேணடுமென்பதும்.

நீதிமை யியற்ற வேண்டி நீதவஞ் செய்தல் வேண்டுந்
தீதறு சோதி மேருத் தெற்குநா வலவந் தீவி
லேதமில் பரத கண்டத் தெய்துகா வேரித் தென்பாற்
கோதிகழ் பாண்டி நாட்டிற் குளிர்மணி சிதறும் வையை.

(இ-ள்) நாம் உமாதேவிக்குபதேசித்த மந்திரத்தை மறைந்திருந்து கேட்டு வெளிப்படுத்தின குற்றந்தீர நீ தவஞ்செய்யவேண்டும். அதற்குத் தக்க இடம், மேருமலைக்குத்தெற்கே நாவலந்தீவில் குற்றமற்ற பாதகண்டத்தில் காவேரிக்குத்தெற்கேபாண்டிநாட்டில் வையைநதியிருக்கிறது.(எ-ம்)(௬எ)

இன்னதி யுடுத்த கூடற் கெழில்பெறு நிருதி திக்காய்
மன்னும்யோ சனையிற் பாக மருவிடு நாக வெற்பி
னுன்னுகாற் காதந் தென்பா லுற்றிடு மதன்பேர் கேட்பிற்
றன்னுயர் ஞான மாகுஞ் சத்திய கிரியா மன்னோ.

(இ-ள்) வையைநதி சூழ்ந்துள்ள மதுரை நகரத்திற்குத் தென் மேற்கிலே பாதி யோசனை தூரத்தில் நாகமலை யிருக்கிறது. அந்த நாகமலைக்குக் கால் யோசனை தூரத்தில தன் பெயர் கேட்டவர்க்குச் சிவஞானத்தை உண்டாக்கும் *சத்தியகிரி என்ற ஒரு மலை இருக்கிறது. (எ-ம்) (௬அ)

தக்கதோர் பிறவி யாழி தணந்திட வோட மாகு
மக்கிரி வடபால் மெய்வாக் கருளுஞ்சத் தியகூ வத்திற்
புக்கமேல் பாலில வைகும் புத்திர கூவ மூழ்கில்
மிக்கசேய் பெறுவர் பாவ வெம்பிணி மிடியைத் தீர்ப்பார்.

(இ-ள்) அந்தச் சத்தியகிரியானது பிறவிக்கடலைக் கடப்பதற்குத் தோணியாகும். அம்மலையின் வடபக்கத்திலுள்ள சத்தியகூவத்தில் மூழ்கினால் சத்தியவாக்குண்டாகும். மேல் பக்கத்திலுள்ள புத்திரகூவத்தில் மூழ்கினால் புத்திரோற்பத்தி யுண்டாவதுமல்லாமல் பாவமும், நோயும், தரித்திரமும் நீங்கும். (எ-ம்) (௬௯)

சிட்டர்சூழ் வரைக்கீ சானத் திக்கிலோ ரம்பி னெல்லை
மட்டவிழ் கமல வோடை வளருநின் னாம தீர்த்தங்
கட்டுனை கொண்டு கண்டோர் காத்திறற் றொட்டோர் சிந்தை
யெட்டிய விருப்ப மீயுந் தீர்த்தம தெய்தி மூழ்கி.

(இ-ள்) ஞானிகள் சூழும் அந்தமலைக்கு ஈசான திக்கிலே ஒரு பாணஞ் செல்லும் தூரத்திலேயுள்ள தாமரைத்தடாகம் உன்னுடைய பெயரால் விளங்

---

* சத்தியகிரி-திருப்பரங்குன்றம்.

கும், அந்தத் தீர்த்தத்தைக் கையால் தீண்டினாலும் கண்டாலும் மனத்தில் நினைத்த எல்லாப்பொருளுங்கிட்டும். நீ அந்தத் தீர்த்தத்திற்குப் போய் ஸ்நானஞ்செய்து. (எ-ம்) (௭0)

தொல்லைநீர்த் தருப்ப ணாதி சுருதிமந் திரத்தாற் செய்து
மல்கிய வேத தானம் வழங்கிநம் முருவாம் வெற்பை
வில்லெழு மலர்கொண் டேத்தி வேலினாற் கீண்டு ஞாலத்
தொல்லையி லெழுப்ப நாளு முன்பெயர் மருவுந் தீர்த்தம்.

(இ-ள்) வேத மந்திரத்தினாலே தருப்பண முதலானவைகள் செய்து வேதியர்க்கு வேதவிதிப்படி தானங்கொடுத்து நமது ரூபமாகிய திருப்பரங்கிரியைப் பிரகாசம் பொருந்திய மலர்களாலே யருச்சனைசெய்து அந்தத் தடாகத்தை வேலினாற்கிழித்தால் கிழித்த இடத்திலே தீர்த்தம் பெருகி மேலெழுந்துவரும். பின்னர் அந்தத்தீர்த்தமானது எந்தக்காலத்தும் சரவணப் பொய்கையென வழங்கப்படும். (எ-ம்) (௭௧)

சிறிதுசேர் வாயு கோணத் திசைபெற லிலிங்கஞ் சேர்த்து
மறைமனுப் படியீ ரெட்டு வரிசையி னியற்றிய பூசை
குறைவற முடித்து நோன்பு கொண்டிரு வென்று கூறி
நிறைதர வழுத்து வாய்த்த நின்றகண் மணியே யென்றான்.

(இ-ள்) நிறைந்த அழகுபொருந்திநின்ற என் கண்மணியாகிய கந்தனே! மேற்கூறிய அத் தீர்த்தத்திற்கு வாயு திசையிலே ஒரு சிவலிங்கம் தாபித்து மந்திர விதிப்படி சோடசோபசாரத்தாற் பூசைசெய்து தவஞ் செய்துகொண்டிருவென்று மனமகிழ்ச்சியடைந்து சிவபெருமானருளிச் செய்தார். () (௭௨)

இருளுடல் கிழிக்குஞ் சோதி யிறைவர்பன் னிருவர் நாப்பண்
பொருமதி யாறென் றோதப் பொலன்குழை வதனங் கொண்டோன்
மருவிய துணைவர் வீர வாகுவா மொன்ப தான
தருமிளங் குமா ரோடுந் தனதெனுங் கணங்க ளோடும்.

(இ-ள்) பிரகாசமிருந்த பன்னிரண்டு சூரியர்கள்மத்தியில் ஆறு சந்திரர்கள் இருந்ததுபோலப் பொன்மயமாகிய பன்னிரண்டு காதுகளுக்கு நடுவே ஆறு திரு முகங்களைக்கொண்ட முருகக்கடவுள் நவ வீரராகிய வீரவாகு முதலிய தம்பிமார்களுடனுந் தம்மதாகிய இரண்டாயிரம் பூதசேனைகளுடனும்.()()

பார்கொளுக் கிரனே டண்டா பரணனெ னையருஞ் சூழக்
கார்கொள்வின் முகடு நீண்ட கைலையைத் தணந்து சோதி
யேர்கெழு கதிர்கள் கோடி யெழுந்தெனத் தேர்க டாவிச்
சீர்கொள்வின் படர்ந்தான் வேதச் சிலம்பலம் பியதாட் செவ்வேள்.

(இ-ள்) உக்கிரன், அண்டாபரணன் முதலிய கணநாதர்களும் பிறருந் தம்மைச் சூழ்ந்துவரக் கயிலாச மலையைவிட்டுப்பிரிந்து சோதிமயமானதேரின் மேல் எழுந்தருளி ஆகாயமார்க்கமாகத் தென்றிசையைநோக்கி வந்தனர். (எச)

இரண்டாவது குமரன் உபதேசச்சருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் உ-க்குச் செய்யுள் கஉஈ.

---

## மூன்றாவது
## குமரன் தவசுச்சருக்கம்.

——(o)——

தன்ன தாகிய வன்னை கேள்வி
  தனைப்பு கன்றிடு தூகளறப்
பொன்னின் வார்சடை யண்ணல் சொற்படி
  புரிய வெள்ளி யெனுந்திருத்
தொன்ன கத்தை யகன்று சண்முகன்
  மேவு காதை தொகுத்தனம
பின்னர் சத்திய கிரிய ணைந்து
  தவஞ்செ யுங்கதை பேசுவாம்.

(இ-ள்) சிவபெருமான் உமாதேவிக்குபதேசித்த மந்திரப்பொருளைத் தெரிந்து வெளிப்படுத்திய குற்றந் தீரும்பொருட்டுப் பொன்போலும் வார்ந்த சடையினையுடைய சிவபெருமான் அருளிச்செய்த கட்டளைப்படி முருகக்கடவுள் கயிலாச மலையைவிட்டு நீங்கிய விஷயத்தைச் சொன்னோம். இனி, சத்தியகிரியென்னுந் திருப்பரங்குன்றத்தை யடைந்து அம்முருகக் கடவுள் தவஞ்செய்திருந்த கதையைச் சொல்லுவோம். (எ-ம்) (க)

தொன்மை நூல்பொதி யுங்க ளஞ்சிய
  மென்ற ரூதனை யேத்தியே
பொன்ம லிந்திடு சவுன கன்சில
  புகலும் விண்முடி தடவியே

மின்னு சத்திய கிரியெ னும்பெயர்
மேவு காரண மேதுமுன்
மன்னு ஞால மணைந்த தேதென
மாத வன்சொல்வ குப்பனுள்.

(இ-ள்) எல்லா நூற்பொருளுக்கும் இருப்பிடமாகிய சூதமகாமுனிவரைச் சவுனக முனிவர் வணங்கிச் சுவாமீ! திருப்பரங்குன்றமானது பூலோகத்தில் வந்த காரணமென்ன? அதற்குச் சத்தியகிரி என்று பெயர் வந்த காரணமென்ன? வென்று கேட்கச் சூதமகாமுனிவர் சொல்லுகின்றார். (எ-ம்) (௨)

முன்ன மோர்பக னஞ்சொழுக்கிடு முள்ளெ யிற்றை நிரைத்தவாய்ப்
பன்ன கத்தொடு வாயு வேபகை கொண்டு தோள்வலி பாரினி
யென்ன வேயிரு வோர்கள் போரை யிழைத்த காலையில் வாயுவு
மன்னு பல்லுயி ரீறு சேரு முகாந்த மாருத மானதே.

(இ-ள்) முற்காலத்தில் ஆதிசேடனும் வாயுதேவனும் விரோதங்கொண்டு புயவலியைப்பாரென்று ஒருவர்க்கொருவர்வாக்குவாதம் செய்து யுத்தம் செய்யும்பொழுது வாயுதேவன் எல்லா உயிரும் நாசமாகும் ஊழிக்காற்று வடிவமானான். (எ-ம்) (௩)

ஒளிது ளும்பி வளர்ந்து வான்முடி யுடைய நீடிய மேருவின்
கிளரு மெய்யி லறைந்து வேர து கெட்ட சைந்திட வீசியே
வளர்மு டித்திரள் பிட்டெ றிந்திட வரைம ருங்கிடை கல்லதாய்
முளைத ரப்பெறு கந்த மாதன முடியி லெண்சிக ரம்பெறும்.

(இ-ள்) பிரகாசமிகுந்து வளர்ந்து ஆகாயத்தினுச்சியை யளாவிய மகாமேரு மலையிலே அதன் ஆணிவேர் கெட்டு அசையும்படி மோதி அதன் சிகரங்களைப்பிளந்தெறிந்திட அச்சிகரங்கள் அதன் பக்கத்தேயுள்ள கந்தமாதன மலைமேல் எட்டுச் சிகரங்களாயிருந்தன. (எ-ம்) (௪)

அந்த நற்கொடு முடிக ளுப மருஞ்சு ளுபம் விளங்குசீர்
தந்த கந்திரு வஞ்சு கேது தலைத்தி டுங்கதி மந்தர
முந்து சத்யசி ருங்கம் வைனிய மெய்த்த சித்திர நாமமாய்
வந்த வெட்டி னு ளாற தாகி வளர்ந்த சத்ய சிருங்கமே.

(இ-ள்) அந்தச் சிகரங்கள்—களுபம், சுளுபம், கந்திருவம், சுகேது, மந்தரம், சத்தியசிருங்கம், வைனியம், சித்திரம் என்ற பெயர்கள்பெற்ற எட்டினுள் ஆறாவதாகிய சத்தியசிருங்கமென்னும் முடி வளர்ந்தோங்கியது.(எ-ம்)(௫)

வேறு

செஞ்சொன்மறை கிடந்தலறி முறையிட் டேத்துஞ்
செங்கமலத் தாண்முருகன் செய்கை தன்னான்
மஞ்சுவதழ் கந்தகிரி சிதறத் தாக்கி
வாயுமிக வெகுண்டுபுய வலியி னாலே
விஞ்சியசத் தியசிமையம் பறித்து வீச
மேதினிசெய் தவப்பயனால் விளரி பாடிக்
கொஞ்சியளி முரன்றபொழிற் பாண்டி நாட்டிற்
குலவிவிழுந் ததுநிலைமை கொண்ட தம்மா.

(இ-ள்) நேரான வாககியங்களையுடைய வேதங்கள் கதறித் துதிக்கும் செந்தாமரை மலர்போன்ற பாதங்களையுடைய முருகக்கடவுள் திருவருளினால் வாயுதேவன் கோபித்துப் பறித்தெறிய சத்தியசிருங்கமென்னும் அம் முடியானது நிலவுலகஞ்செய்த தவப்பயனால் வண்டுகள் இராகம்பாடி வசிக்குஞ் சோலைகள் சூழ்ந்த பாண்டி நாட்டில் விழுந்து நிலை பெற்றிருக்கிறது.(எ-ம்)(சு)

அப்பொழுது வான்வழிக்கொண் டகன்ற காலை
யமரர்வெருண் டேயரம்பை மாரைத் தேடிக்
கைப்பதுமங் கொண்டிறுகத் தழுவி யீது
கருத்தறிந்தே பரமிதென்று கரங்கள் கூப்பத்
துப்பருவி சிதறியமா மணியைக் கண்டு
சூர்மகளிர் கையேந்திச் சூழ்ந்து வாங்க
மைப்புயல்கள் துயிலொழிந்து சிதறி வானில்
வளர்பெறுகற் பகத்தருவின் மருவ மாதோ.

(இ-ள்) வாயுதேவன் பறித்தெறிந்த சிகரம் ஆகாயவழி வரும்போது தேவர்கள் பயந்து அரம்பையரைத் தேடித் தழுவி; உண்மை தெரிந்த பின் இது பரமாகிய சிவ சொரூபமென்று கைகளைக் கூப்பவும், தெய்வப்பெண்கள் சூழ்ந்து அருவியிலே சிதறுகிற மணிகளைக் கையேந்தி வாங்கவும், மேகங்கள் நித்திரை நீங்கி யெழுந்து நீர்த்துளியைச் சிந்தி அம் மலையைவிட்டுப் போய்க் கற்பக விருட்சத்தில் மருவவும். (எ-ம்) (எ)

கடவருவி சளசளெனச் சிதற வூற்றிக்
கரும்புயலைப் பாய்ந்துளக்கிக் களித்த யானை
படர்பெறுகற் பகத்தளிர்க்குத் துதிக்கை நீட்டப்
பார்த்துவரும் வெள்ளானைப் பரிய கோட்டி

விடையொடியக் கிரிவீறுப் பாயுங் காலே
யெண்டிசைவெங் கரிபிளிறி யிரைக்கச் சூழும்
புடவிமுது கறநெளிந்து கம்பஞ் சேரப்
பொருப்பெட்டுந் தலைதுளக்கம் புனைய மன்னோ.

(இ-ள்) மதமாகிய அருவியைப் பொழிந்து நின்ற யானைகள் கற்பக விருட்சத்திலுள்ள தளிர்களுக்குத் துதிக்கையை நீட்டவும், அதைப்பார்த்து வருகிற வெள்ளானையானது தன் கொம்பு ஒடியும்படி மலை வரும் வேகத்தில் தாக்குங்காலத்தில் அட்ட திக்கிலுள்ள எட்டு யானைகளு மிகுதியாகச் சப்திக்கவும் உலக முழுவதும் பூமி அசையவும், அட்டகுல பருவதங்களுங் குலுங்கவும். (எ-ம்) (அ)

கூன்றிரைகள் குதித்துலவுங் கடல்க ளேழுங்
கொதித்துவாய் விட்டாரற்றக் குன்றின் மீதே
வான்றடவுங் குடுமிபெறு மூங்கி லீன்ற
மணிமுத்த முடுப்போல வயங்கிச் சூழத்
தேன்றதும்புஞ் செண்பகப்பூத் தேவர் தூவுந்
திருமலர்போ லேசிதறத் தேன்கள் பாட
கான்றமலர்ச் சோலைதலை துளக்கிக் கார்போ
னறவெங்கும் வீசுகுளிர் நணுக மாதோ.

(இ-ள்) எழு கடல்களும் கொதித்துச் சப்திக்கவும், அந்தச் சத்திய சிருங்கமென்னு மலையின் மேலே மூங்கிலிலிருந்து உண்டான முத்துக்கள் நட்சத்திரங்கள் போலப் பிரகாசிக்கவும் தேவர்கள் தூவு மலர்போலச் செண்பக மலர்கள் சிதறவும், வண்டுகள் பாடவும், சோலைகள் தலையசைத்து மேகம் போலத் தேன்களைச் சொரியுங் குளிர்ச்சி பொருந்தவும். (எ-ம்) (கூ)

பையாவின் சுடிகையின்மேற் கிடந்த ஞாலப்
பல்லுயிர்சேர் தவப்பயனாற் பரமன் வெற்பா
மையமற வருவதெனக் குயில்கள் கூவி
யண்டர்களை யழைப்பதுபோ லாக நீடுந்
துய்யவிசைக் கின்னரர்போல் வண்டு பாடத்
தோகையர்போல் மயிலாடிச் சூழப் பக்கம்
பெய்யருவி சாமரைபோ லசையப் புள்வாய்
பிறங்ககலா வியமெனவே பேசி யார்ப்பு.

(இ-ள்) அம்மலையிலுள்ள குயில்கள் பரமசிவனே மலையாய்வருகின்ருன். தேவர்களே வாருங்களென்றழைப்பது போலக் கூவவும் பரிசுத்தமாகிய இசை பாடுகின்ற கின்னரர்களைப்போல வண்டுகள் பாடவும், தெய்வப்பெண்கள் போல் மயில்களாடவும், அருவிகள் சாமரைபோலசையவும் பறவைகளெல்லாம் வாத்தியங்கள்போல ஒலிக்கவும். (எ-ம்) (௧0)

அண்டகடா கத்துச்சி வெடித்தாற் போல
வவனிகிடு கிடுகிடென வனந்தன் பாரங்
கொண்டதலை நெருக்கெனவே யுழக்கிச் சோரக்
குவலையத்தில் வீழ்ந்தமிழ்ந்திக் குலவுங் காற்று
மண்டுமனுக் காணவொலி யெதிரோ வாங்க
மற்றவரை யொருசாம மறுக ஞானத்
தெண்டகைவிண் ணோர்களுளத் தளவு காணு
மெழிற்சிருங்கஞ் சத்தியவெற் பென்னு மன்றே.

(இ-ள்) அண்டப் பரப்பினுச்சி வெடித்ததுபோல, உலகங் கிடுகி டென்றதிரவும், ஆதிசேடன் பூமிபாரந் தாஙகமுடியாது தலைகளோடு நெருங்கி வருந்தவும், எல்லாருமறிய உலகமெல்லாம் எதிரொலி உண்டாகவும், மற்றை மலைகளெல்லாம் ஒரு சாமநேரம் வருந்திப் புரளவும், பூமியில் விழுந்த அந்தச் சிகரமானது தகுதியுடைய தேவர்களாலளக்கக்கூடிய அழகு வாய்ந்த சத்திய கிரியென்று சொல்லப்படும். (எ-ம்) (௧௧)

இவ்வகைச்சத் தியகிரியின் வரவு கூறு
மெழிற்சூதன் பதம்பரவி யிரண்டு காதிற்
செவ்வியமு தமபொழிந்த தெனவே கொண்டு
தெரிந்தசவு னகமுனிவன் செப்புஞ் செவ்வேள்
கொவ்வையித ழுமைபாகன் பூசை செய்யக்
குலவுபரங் கிரியதனிற் குறுகி நெஞ்சி
லவ்வியமின் ஞென்புசெய்த கதைகூ றென்ன
வருட்சூதன் சுவைதுளிக்க வறைகின் ருனே.

(இ-ள்) இந்தப்படி சூதமுனிவர் சத்தியகிரியின் வரலாற்றைச்சொல்ல, சவுனக முனிவர் இரண்டு செவிகளுக்கும் அமுதமெனக்கேட்டு வணங்கி முருகக்கடவுள் சிவபெருமானைப் பூசை செய்தற்காகத் திருப்பரங்குன்றத்துக்கு வந்து தவஞ்செய்த கதையைச் சொல்லவேண்டுமென்று கேட்க, சூதமுனிவர் சொல்லுகின்ருர். (எ-ம்) (௧௨)

இருட்பிழம்பைத் திரட்டிபெடுத் தருந்துஞ் சோதி
யிளம்பரிதி தெற்கணைந்த தென்னப் பூத
நெருக்கமெழுந் தேர்கடவி நடந்து செவ்வே
ணிறைந்துகரை பொருங்கங்கை நீள்கா ளிந்தி
விரித்ததிரை நருமதைவாள் சிந்து கோதா
விரிதுங்க பத்திரிநீள் கண்ண வேணி
யருட்பொலிந்த பொன்னிமுதற் புனித நன்னீ
ராடியபின் சிவதலங்க ளடைவி னேத்தி.

(இ-ள்) இளஞ் சூரியனொன்று வடக்கேயிருந்து தெற்கே புறப் பட்டது போல முருகக்கடவுள் திருக்கைலாச மலையினின்றும் எழுந்தருளி வந்து கங்கை, காளிந்தி, நருமதை, கோதாவரி, துங்கபத்திரி, கண்ணவேணி, காவேரி முதலிய புண்ணிய தீர்த்தங்களிலே ஸ்நாநஞ்செய்து அங்கங்கேயுள்ள சிவஸ்தலங்களையும் முறையே வணங்கி. (எ-ம்) (கரு)

வட்டமதிப் பிளவெயிற்றுக் கொடிய காலன்
மார்பெலும்பு படச்சிவந்த மலர்த்தாள் வள்ளல்
கட்டுளிக்கு மலர்க்குழலா ளுடன்சேர் தானங்
கருதியுறை முனிவோர்கள் காணுந் தோறு
மிட்டசிலம் பரற்றிடுதாட் டுணையைப் பூசித்
தேத்தவிழிக் கடைக்கருணை யிந்து செவ்வேள்
முட்டிகழுங் காடுமலை தணந்து வாய்மை
முதிர்ந்தசுவைத் தமிழ்நாட்டின் மொய்த்தான் மன்னோ.

(இ-ள்) முருகக்கடவுளானவர் சிவபிரான் உமாதேவியுட னெழுந்தருளி யிருக்கும் அநேக சிவ ஸ்தலங்களிற் சென்று, அங்கங்கே தம்மை யெதிர் கொண்டுவந்து பணியும் முனிவர்களுக்கு, இட்டசித்திகளெல்லா மெய்தும்படி திருவருள் செய்து, மலைகளையும், வனங்களையுங்கடந்து, சத்தியவாக்குமிகுந்த இனிமையாகிய தமிழ்நாடு வந்து சேர்ந்தார். (எ-ம்) (கசு)

வேறு.

வெளிய நீற்றுமெய் யிடத்தினின் மாலைவைத் திடுவோ
னளிசெ யும்படி மாலென வுருவுகொண் டதுபோற்
குளிர்கெ ழும்புயல் விண்ணெழுந் தலைகடல் குடித்து
களிர்ப முத்தருள் பொழிவதாய் நன்மழை பிலிற்ற.

(இ-ள்) வெண்ணிறமுள்ள திருமேனியில் உமாதேவியாரை வைத்தருளிய சிவபெருமான் உலகத்தைக் காக்கும்பொருட்டு விஷ்ணு வடிவத்தைக் கொண்டதுபோல வெண்ணிறமுள்ள மேகங்கள் சமுத்திர சலத்தையுண்டு சூல்கொண்டு அருள் பொழிவதுபோல நல்ல மழை பெய்ய. (எ-ம்) (௧௫)

குணப்பெ ருங்கிரி யன்னவர் கொற்றமா னிடரை
யணைப்ப தென்னவான் றடவிய குன்றமீ தணுகிப்
பணைப்பெ ரும்பணி ஞாலத்திற் பல்லுயுர் பசியா
துணைக்கல் சேர்ந்திடா தளித்திட வுவட்டெழும் வையை.

(இ-ள்) உயர்ந்த உத்தம குணத்தையுடைய அரசாது அரசியல் எல்லா மனிதர்களையும் ஆதரிப்பதுபோல, படத்தையுடைய ஆதிசேடனாலே தாங்கப்பெற்ற உலகத்திலுள்ள எல்லா உயிர்களும் பசியால் வருந்தாதவண்ணம் காக்க வையைநீர் பெருக்கெடுத்து வரும். (எ-ம்) (௧௬)

குறிஞ்சி யிற்புகுந் தேமகன் காட்சியாற் குறவ
ருறுங்க ளிப்பெழுஞ் சம்பந்த மெனக்கலந் துலவி
வறந்த பாலையின் மாற்றவ ளுருவுகொள் காளி
யுறைந்த வேட்டுவச் சேரியைச் சிறியங் குலைத்து.

(இ-ள்) வையை வெள்ளமாகிய கங்காதேவியானவள் குறிஞ்சி நிலத்திலே புகுந்து தன் மகனாகிய முருகக்கடவுள் சம்பந்திகளான குறவரிருப்பிடமானதால், கலந்து உலாவி பாலைநிலத்திலே புகுந்து மாற்றாளாகிய உமாதேவியின் கூறான காளியிருப்பிடமானதால் அங்குள்ள வேடர் சேரிகளை யெல்லாம் கோபங்கொண்டு அழித்து. (எ-ம்) (௧௭)

முல்லையா யர்தம் பாடியைக் கலைத்திடை மொய்த்துப்
புல்லு மாநிலத் திழிந்துமால் பொன்னடி போற்றிச்
செல்லை யேசிறை கூட்டிய தென்னவ னெதிர்க்க
வல்ல மாமக வான்பெரு மருதமே பதைக்க.

(இ-ள்) முல்லை நிலத்திலே புகுந்து ஆயர் பாடியைக் கலைத்து இடையிலே உள்ள நிலங்களின் வழியாய்ப்போய் விஷ்ணுவை வணங்கி மேகத்தைச் சிறைச்சாலையிற் சேர்த்த தனதரசனாகிய பாண்டியன் பகைவனாகிய தேவேந்திரனுக்குரிய மருதநிலம் நடுங்கும்படி. (எ-ம்) (௧௮)

உற்று மாமணச் சோலையைப் பிடுங்கியே யுதறி
முற்று செய்தலுள் மூண்டபின் புன்னைகே தகையைப்
பற்றி நித்திலம் பொற்றக டனைத்திரை பரப்பி
மற்ற வாழிக்குக் காணிக்கை யிட்டுலாம் வையை.

(இ-ள்) மருத நிலத்திலேயுள்ள சோலைகளை வேரோடு சாய்த்துத்தள்ளி நெய்தனிலத்திலே புகுந்து புன்னை மரங்களிலும், தாழைமரங்களிலும் பறித்து அவற்றிலுள்ள அரும்புகளையும், மலர்களையும், மகரந்தங்களையும் அலைகளிலே முத்தும் பொன்னுமாகப்பரப்பி வையையானது சமுத்திரத்துக்குக்காணிக்கை செலுத்தும். (எ-ம்) (௰௯)

கமல மேவியுங் கலைத்திரு மடந்தையைப் பரித்து
மமையு மாமணி யேந்தியும் நான்முக மடைந்தும்
விமல மாயபொன் னிறம்படைத் தும்மறை விளக்கித்
தமா வண்டுறை பங்கயன் றனைப்பொரும வையை.

(இ-ள்) தாமரை மலரைப்பொருந்தியும் சரசுவதியையும் முத்துக்களையுந் தாங்கியும், நாலுபக்கமுஞ் சென்றும், சுத்தமான பொன்னிறம் பொருந்தியும், வையைநதியானது பிரமதேவனை யொப்பாயிருக்கும். (எ-ம்) வையை சரசுவதியைத் தாங்குதலாவது-திருஞானசம்பந்தசுவாமிகள் விடுத்த தேவாரப் பதிகத்தைத் தாங்குதல். (௨0)

வளைபொ ருந்திய திகிரியை யேந்தியும் வளர்பொன்
விளை நருங்கலை தரித்துமா மணியுர மிலங்குங்
களிகூர வங்கிடப் பல்லுயி ரோமபியுங் கண்ணிற்
குளிர்பொ ழிந்தருள் கொழித்தமால் நிகர்த்திடும் வையை.

(இ-ள்) சங்கோடுகூடிய மூங்கிலைத் தாங்கியும், அழகு நிறைந்த கலைமான்களைத் தாங்கியும், (பீதாம்பரத்தைத் தரித்தும்) இரதங்களைத் தரித்தும், பலவுயிர்களைக் காப்பாற்றியும், வையை நதியானது குளிர்ந்த கருணையைச் செய்யும் விஷ்ணுவை யொப்பாயிருக்கும். (எ-ம்) (௨௧)

மாளை யேந்திய மரவமே புனைந்துவால் வளையாம்
பானி லாவணிந் தும்புலிப் பரப்பினுற் பாசு
தான ணிந்துவெண் படிகமா மொளிபெறத் தரித்துந்
தேன லம்புகொன் றையையணி சிவன்பொரும் வையை.

(இ-ள்) மானையும், பாம்பையும், வெள்ளிய சங்காகிய சந்திரனையும் தாங்குதலாலும் விரிந்த உலகத்திலுள்ளாராற் றுதிக்கப்பெற்றுப் படிக நிறமா யிருத்தலினாலும் வையை நதியானது வண்டுகள் முழங்குகின்ற கொன்றை மாலையணிந்த சிவபெருமானை யொத்திருக்கும். (எ-ம) (உஉ)

துங்க வெற்பினிற் பிறந்துவே கங்கொளத் தொடர்ந்து
சங்க வெண்பிறைக் கோட்டினாற் றடங்கரை முருக்கிப்
பொங்கர் சாய்த்தெழு புடவிமேற் றுதிக்கைபெற் றாற்றி
வெங்க டம்பொழி கரிபொரும் விளங்கிய வையை.

(இ-ள்) உயர்ந்த மலையிலே பிறந்து வேகமாக வருதலினாலும், சங்கமாகிய வளைந்த கொம்பினாலே விசாலமாகிய கரைகளைச் சாய்த்தலினாலும், மரங்களைச் சாய்த்தலினாலும், பூமியினிடத்துத் தோத்திரஞ் செய்யப்பெற்றிருத்தலினாலும் வையை நதியானது மதங்கொண்ட யானையை யொப்பாயிருக்கும். (எ-ம்) (உ௩)

இத்த கைத்தமா வியாறுசூழ் கிடந்தமா மதுரை
முத்த வாணகை முதல்விசேர் பாகனைப் பரவி
யத்த லத்தெழு நிருதியிற் குமரவே ளணையக்
கொத்தெ ழுந்திடு வேதங்கள் பசுங்கிளி கூறும்.

(இ-ள்) இப்படிப்பட்ட வையைநதி சூழ்ந்த மதுரைக்கு முருகக்கடவுள் வந்து மீனாக்ஷியம்மையையுஞ் சோமசுந்தரக் கடவுளையுந் தரிசித்து மதுரைக்கு மேற்றிசையிற் செல்லும்போது கூட்டமாயெழுகின்ற கிளிகள் வேதங்களைச் சொல்லித் தோத்திரஞ் செய்யும். (எ-ம்) (உ௪)

வெளிய வாணிலா விளங்கிய பூதிசேர் மெய்யர்
களிது ளங்குதீக் கனற்றிய தூபமுங் கமுகுங்
குளிரு மேகமே யொத்தநிற் குலவுவெண் பாளை
நளிரி ளம்பிறை போலிரு நாற்றிசை விளங்கும்.

(இ-ள்) மிகுந்த வெண்ணிறமுள்ள விபூதியணிந்த மெய்யினையுடைய பிராமணர்கள் யாகத்தீயிலெழுந்த புகையும், கமுகமரமும் மேகத்தையொப்பாகவும், அக் கமுகமரத்திலுள்ளபாளை சந்திரனை யொப்பாகவும் எட்டுத்திசையினும் விளங்கும். (எ-ம்) (உ௫)

சூலு ளைந்திடு சங்குகள் சொரிமணி நிலவுங்
கால நீடிய சேல்படுங் காலைமா மதியின்
பால்வ ளைந்தபாம் பெனுந்தடம் பங்கய மெனுந்தீச்
சால வுட்புக மலர்சொரி தாழைகம் மியனும்.

(இ-ள்) சூல்கொண்ட சங்கினங்கள் வயிறுகொர்ந்து பெற்ற முத்துக்கள் சந்திரனைப்போலப் பிரகாசிக்க, அதிற்செல்லும் கெண்டைமீன்கள் அச் சந்திரனை வளைந்த பாம்புபோலத் தோன்றப்படுந் தடாகத்தில் செந்தாமரை மலர்கள் தீயைப்போல் விளங்க, அம்மலரில் மகரந்தத்தைச் சொரிகின்ற தாழையானது பொற் கொல்லனைப்போலத் தோன்றும். (எ-ம்) (உ௬)

சிமைய மார்பொழில் சென்னியில் வேணியா மதன்மேற்
றமா வெண்சுனை கங்கையாந் தழைத்தவெண் பாறை
யிமைத ரும்பிறை புயல்பொடி யெழுந்தமின் புரிநூ
லமையும் வெள்ளநீ ருத்தரீ யங்கிரி யரனும்.

(இ-ள்) மலையுச்சியிலிருக்கும் சோலை சடையாகவும், சுனை கங்கையாகவும், வெண்பாறை சந்திரனாகவும், வெண்மேகம் விபூதியாகவும், அதிலுண்டாகும் மின்னல் முப்புரி நூலாகவும், மலையருவி உத்தரீயமாகவும், திருப்பரங்கிரி சிவபெருமானாகவும் விளங்கும். (எ-ம்) (உ௭)

கண்ணா றுமகிழ் காட்சிசெய் துளங்களி துளங்கித்
தண்ணா றுவரி தேக்கிய தடவயற் சாலி
விண்ணு லாங்கதிர் கவரிபோல் விரிபரங் கிரியைத்
தண்ணு லாவிய மழலைவாய்க் குமரவேள் சார்ந்தான்.

(இ-ள்) கண்ணுக்கடங்காத காட்சியாக மகிழ்ச்சியைச் செய்து, வண்டுகள் தேனை நிறைக்கப்பட்ட வயல்களிடத்து ஆகாயத்தை யளாவிய நெற்கதிர்கள் சாமரம்போல விரிந்து வளையப்பட்ட (சிவசொரூபமாகிய) திருப்பரங்கிரியினிடத்துக் குளிர்ந்த இளஞ்சொற்கள் பேசும் வாயினையுடைய முருகக்கடவுள் வந்துசேர்ந்தார். (எ-ம்) (உ௮)

வேறு.

இருளுடல் கிழிக்கு மகரகுண் டலங்க
ளொழுங்கதிர் பான்மதி முகஞ்சேர்
முருகவே ளழகை விழிவிருந் தருந்த
முனிவர்கள் காண்டல்செய் திருக்கத்
திருவுளம் பற்றுஞ் சதங்கைகொஞ் சியசெஞ்
சீரடிப் பூசனை செலுத்தி
மருவெழும் பதத்தைத் தலையின்மேற் சூடி
வலம்புரிந் தாடினர் துதிப்பார்.

(இ-ள்) மிகுதியாகப் பிரகாசிக்கும் பன்னிரண்டு மகரகுண்டலங்களும் பூரண சந்திரன்போன்ற ஆறு திருமுகங்களுமுடைய முருகக்கடவுள் அழகை அங்குள்ள முனிவர்கள் கண்டு கண்களால் தரிசிக்க மனமானது பற்றித்தொடரும். அதன்மேற் பாதபூசைசெய்து பாதங்களைச் சிரசின்மேற் சூடிப் பிரதக்ஷணஞ்செய்து தோத்திரஞ்செய்வாராயினர். (எ-ம்) (உக)

வெங்கொடுஞ் சூரன் காலனே சரண
மேவுபூங் காலனே சரணந்
துங்கரு ளுணரு மெய்யனே சரணஞ்
சோதிசேர் மெய்யனே சரணஞ்
சங்கரி தரும்வாய்ப் பாலனே சரணஞ்
சங்கரன் பாலனே சரணம்
பைங்கடம பொழுகு முருகனே சரணம்
பரங்கிரி முருகனே சரணம.

(இ-ள்) மிகுந்த கொடுமையுடைய சூரனுக்கு யமன்போன்றவரே! தாமரைமலர்போலுந் திருவடியுடையவரே! உயர்ந்த உமதருளாலுணரப்படு மெய்யான கடவுளே! சுயஞ்சோதிமயமாகிய திருமேனியுடையவரே! உமாதேவியார் கொடுத்த பாலருந்திய வாயையுடையவரே! சிவபிரானுடைய புத்திரரே! பசிய தேனையுடைய கடப்பமாலையணிந்த இளமையுடையவரே! பரங்கிரியின்மேலெழுந் தருளிய முருகக்கடவுளே! யாங்களெல்லாரும் உமக்கு அடைக்கலப்பொருள். (எ-ம்) (௩௦)

அங்கையில் வெண்ணெய்க் கண்ணனே புகழு
மாறிரு கண்ணனே சரணம
பொங்கிய நறைசே ரம்புயா சனனும
புகழ்திரு வம்புயா சரணந்
தங்கிய மணிப்பூண் களத்தனே சூரைச்
சயங்கொளுங் களத்தனே சரணம்
பைங்கறை யெழும்வேற் காங்கையா சரணம்
பரங்கிரிக் காங்கையா சரணம்.

(இ-ள்) உள்ளங்கையில் வெண்ணெயை வைத்திருக்கும் கண்ணபிரான் புகழப்பட்ட பன்னிரண்டு கண்களையுடையவரே! மிகுந்ததேனிறைந்த தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமாவும் புகழப்பட்ட அழகிய புயங்களையுடையவரே! இரத்நாபரணங்களையணிந்த கண்டத்தையுடையவரே! அசுரரை வெற்றிகொள்

ளும் யுத்தகளத்தையுடையவரே! சிவந்த இரத்தமொழுகும் வேலாயுதத்துக்கு ஆகுங் கையையுடையவரே! பரங்கிரியிலெழுந்தருளிய காங்கேயரென்னும் திருநாமத்தையுடையவரே! யாங்களெல்லாரும் உமக்கு அடைக்கலப்பொருளாம். (எ-ம்) (௩௧)

எனமுறை துதித்துப் பணிந்தெழு முனிவர்க்
கெழிலருள் வழங்கியெங் குமரன்
புனிதமால் வரையின் பரங்கிரவந் திறைஞ்சிப்
பொங்குநீர்ச் சத்திய கூவந்
தனையடைந் தெழுதாப் பழமறைப் பொருளாய்த்
தழைந்திடு மந்திர மோதிக்
கனைதரு நீரின் மூழ்கிவே தியர்செங்
கரத்தினிற் பொன்மழை பொழிந்து.

(இ-ள்) இப்படித் துதித்து வணங்கிய முனிவர்களுக்குத் திருவருள் சுரந்து, எங்கள் குமாரக்கடவுள் திருப்பரங்கிரியை வணங்கி, சத்தியகூவ தீர்த்தத்தையடைந்து பழைமையாகிய வேதப்பொருளாயுள்ள பஞ்சாக்ஷர செபஞ் செய்து ஸ்நானஞ்செய்து பிராமணர்களுக்குத் தானங்கள் கொடுத்தது. () (௩௨)

மதிவிளிம் பிடற வழுதகுத் துருண்டு
வழிபடீஇப் பரங்கிரிக் கடவு
ளதிர்கழற் பாத பூசனை நினைக்க
வாண்டெழு நிறைபெறுந் திறலோர்
முதிர்கறை யூறுங் குடுமிவா ளேந்து
முனைவராம் வீரவா குமுதற்
கொதிசெயுந் திறத்த புயத்தரை நோக்கிக்
குளிர்ததும் பியசெவ்வாய் மலரும.

(இ-ள்) முகமெல்லா நிறைய ஆனந்தக்கண்ணீர் சொரிந்து வழிபட்டு முருகக்கடவுளானவர் திருப்பரங்கிரியாகிய சிவபிரானைப் பூசனைசெய்ய நினைத்து அவ்விடத் தெழுந்துநின்ற பூரண வலிமை யுடையவராகிய இரத்தந் தோய்ந்த வாளாயுதத்தைத்தாங்கிய வீரவாகுதேவர்முதலியவெற்றிபொருந்திய புயத்தையுடைய கணத்தலைவர்களைப் பார்த்துச் சொல்லுகின்றார். (எம்) (௩௩)

எந்தைதாட் பூசைக் கேற்றது தருமி
னென்றிட வாங்கவர் விரைந்து
கொந்தவிழ் கடுக்கை குளிரும்வண் டிரைக்குங்
கூவிளை மாதவி நீலம்
பைந்துணர் பூத்த சண்பகம் வெளிய
பங்கய நறியசெங் குவளை
நந்துறு தளவ மல்லிகை துளவ
நாறிடும் போதுகொய் ததன்மேல்.

(இ-ள்) எமது பிதாவாகிய சிவபெருமானைப் பூசைசெய்யப் பூசைக்கு வேண்டும் திரவியங்களைக் கொண்டுவாருங்களென்று சொன்னார். அவர்கள் சீக்கிரம் போய்க் கொன்றை, வில்வம், குருக்கத்தி, கருங்குவளை, சண்பகம், வெண்டாமரை, செங்குவளை, முல்லை, மல்லிகை, துளவம் முதலான புஷ்பங்களைக் கொய்து. (எ-ம்) (கூச)

நறுந்திர வியஞ்சேர் மஞ்சனந் தயில
நலம்பெறு பாலளை நறுநெய்
வெறுந்தவத் தூசு தனில்வடித் தருளி
விளங்கிய கதலிமாங் கனிநீர்
குறும்பல வீன்ற முட்புறக் கனிதண்
குறடுறுஞ் சியநறுஞ் சாந்தங்
கறந்தநீங் கன்ன லின்னன பொருள்கள்
காமலர் நீட்டிட வுதவி.

(இ-ள்) திருமஞ்சனத்திரவியம், திருமஞ்சனம், தயிலம், பால், தயிர், நெய் சுத்த வஸ்திரத்தில் வடித்தெடுத்த வாழைக்கனிரசம், மாங்கனிரசம், பலாக்கனி, சந்தனம், கருப்பஞ்சாறு ஆகிய இவைகள் முதலான பூசைக்கு வேண்டும் திரவியங்களைக் கொண்டுவந்து கொடுத்து. (எ-ம்) (கூரு)

கடுவையுண் டருள்வோர்க் குணவென வருக்கை
கதலியு மனிச்சமாம் பூவிற்
படுநறுங் கலையும் பணிகளு மமைத்துப்
பரிமளப் புகையொடு தீப
மிடுமெழிற் பசும்பொன் பாத்திர மாதி
யேந்திட வானவர் மகுடந்
தடவிடச் சிவந்த தெனச்சிலம் பாற்றத்
தத்தடி பயின்றதாட் குமரன்.

(இ-ள்) விடத்தையுண்ட சிவபிரானுக்கு நல்லுணவாகப் பலாப்பழம், வாழைப்பழம், அனிச்சமலர்போலு மெல்லிய ஆடை, ஆபரணம், தூபம், தீபம் இவைம் பொற்பாத்திரங்கள் முதலானவைகளைத் தாங்கிக்கொண்டு நிற்க தேவர்கள் கிரீடம் பட்டுச் சிவந்த திருவடிகளையுடைய முருகக்கடவுளானவர். (எ-ம்) (௧௬)

செழுந்திரு வேத மனுவினாற் கிரியாஞ்
　　சிவன்பத பூசனை செலுத்தி
யெழுந்துதி யோம்பி யியற்றியா யிரமா
　　யெழுந்தமா மந்திர மோதித்
தழைந்திடும் பசிய கூவிளை நீலந்
　　தருமல ரிறைத்தடி போற்றி
யெழுந்தெழுந் தன்போ டிறைஞ்சிமூ வலங்கொண்
　　டேத்தியே புவனையிற் குளித்தான்.

(இ-ள்) வேதமந்திரங்களாலே திருப்பரங்கிரியாகிய சிவபெருமானைப் பூசித்து வேதாகம மந்திர விதிப்படி வணங்கித் துதித்து ஆயிரம் நாமமந்திரங்களைச் சொல்லித் திரும்பவும் வில்வ முதலியவைகளால் அருச்சனைசெய்து எழுந்தெழுந்து வணங்கி மும்முறை வலமாகப் பிரதக்ஷணஞ்செய்து போனந்தத்தில் மூழ்கினர். (எ-ம்) (௧௭)

வேறு.

மன்பெரு கிரிக்கு நேரே வடகிழக் கணைந்த பாலிற்
றன்பெய ரிட்ட வோடை வேலினாற் றந்து மூழ்கிப்
பின்பதன் சிறிய வாயுப் பெருந்திசை யிலிங்கஞ் சேர்த்தி
யன்பொடு கண்டோர் வேட்ட லருளுகென் றுவா கித்து.

(இ-ள்) நிலைபெற்ற திருப்பரங்கிரிக்கு நேரே வடகிழக்குப் பக்கத்தில் வேலாயுதத்தாற் பூமியைக் கிழித்துச் சரவணப்பொய்கை யென்னுந் தீர்த்தத்தை யுண்டாக்கி அதிலே ஸ்நாநஞ்செய்து, அதற்குச் சிறிதுதூர வாயு திசையிலே சிவலிங்கந்தாபித்துத் தன்னைத் தரிசித்தவர்கள் இச்சித்த பலனை யருளவேண்டுமெனச் சிவபெருமானை யாவாகனம் செய்து. (எ-ம்) (௧௮)

மறைமநுக் கொண்டெட்டாம் வரிசையா லருச்சித் தேத்தி
யிறையவர் திருக்கை மீது யானிழைத் தருளும் பூசைக்
குறைவிலாப் பயன்கொ ளென்று குளிர்ந்தநீர் பெய்து செவ்வேள்
மறுவறு வருட மூன்று மாதவ மிழைத்த காலை.

(இ-ள்) வேதமந்திரங்களால் சோடசோபசாரத்துடன் பூசித்து அப்பூசையின் பயனை ஏற்றுக்கொள்ளுமென்று சிவபெருமான் திருக்கரத்திலே சலத்தை வார்த்துக்கொடுத்து இவ்விதமாக மூன்று வருடம் பெரிய தவஞ் செய்துகொண்டிருக்குங் காலத்தில், (எ-ம்) (கக)

கரும்புயல் சிவந்த கஞ்சக் காடுபூத் தனைய மாய
னரும்பவிழ் கமலச் சேக்கை யண்ணலா தியருஞ் சூழத்
தரும்பனி மதிபிட் டென்னத் தவளவா லெயிற்றுப் பேழ்வாய்
வருங்கணம் வளையத் தாதை மகிழ்ந்துமால் விடைமேல் வந்தான்.

(இ-ள்) விஷ்ணு, பிரமா, இந்திரன் முதலாகிய தேவர்களுங் குளிர்ந்த சந்திரனைப்போல பிரகாசிக்குந் தந்தபந்திகளும் பிளந்த வாயினையுமுடைய, சிவகணங்களும் தம்மைச் சூழ்ந்துவரப் பார்வதி சமேதராய்ச் சிவபெருமான் இடபவாகனத்திற்றோன்றி முருகக்கடவுளுக்குக் காட்சிகொடுத்தருளினர். (எ-ம்) (சo)

வீறுசேர் பானு கோடி விளங்கருஞ் சோதி தன்னை
யாறிரட் டித்த கண்ணா லருந்தியே பரவிச் செவ்வேள்
சீறடி நோவச் சூழ்ந்து செய்யவாய் மழலைச் செந்தே
னூறிடக் கனிச்சி தாங்கு முத்தமற் பழிச்சு வானால்.

(இ-ள்) கோடிசூரியப் பிரகாசமாகச் சிவபெருமான் எழுந்தருளியதைக் கண்டு முருகக்கடவுள் பன்னிரு கண்களுங் கண்டுகளிக்கப் பன்னிரு கரங்களையுங் குவித்து வணங்கிப் பிரதக்ஷணஞ் செய்து மழலை வார்த்தை தேன்போ லொழுகத் தோத்திரஞ் செய்வாராயினர். (எ-ம்) (சக)

வேறு

முகைய விழ்ந்திட விளரி வண்டு முரன்ற பைங்கணை சிந்துவே
டகைய விழ்ந்திட நுதன் மலர்ந்தவ தருப ழம்பொரு டத்துவ
பகுற லைப்பணி கக்கு நஞ்சு பதித்தி டுங்கள வெண்பொடி
நகுமெ ழிற்பெற வருப ரங்கிரி நாத சேவடி போற்றுவாம்.

(இ-ள்) வண்டுகளொலிக்கும் புட்பபாணத்தை யேவிய மன்மதன் வலிக்குணங்கெடும்படி நெற்றிக்கண்ணைத் திறந்தவரே, தத்துவப் பழம்பொருளாயுள்ளவரே, ஆயிரந்தலைகளையுடைய ஆதிசேடன் கக்கிய விஷத்தையுண்டு கரிய நிறமடைந்த கண்டத்தையுடையவரே, திருமேனியிலே விபூதி அழகு பெறும்படி திருப்பரங்கிரியிலெழுந்தருளியநாதரே! உமது சிவந்த திருவடிகளை வணங்குவோம். (எ-ம்) (சஉ)

அளிமு ரன்றிடு மிதழி யந்தொடை யணித ரும்புய விமலவான்
குளிரி டுந்திரை நதியு டன்பிறை குலவி டுஞ்சடை முடியமா
முளரி யண்ணலொ டரிபு ரந்தரர் முடித ழும்பிடு பதமுளாய்
நளிர்பொ தும்பொழில் வளர்ப ரங்கிரி நாத சேவடி போற்றுவாம்

(இ-ள்) வண்டுகள் முழங்குகின்ற கொன்றைமாலையணிந்த புயங்களை யுடையவரே, நிர்மலராயுள்ளவரே, ஆகாயகங்கையுடன் பிறைச்சந்திரன் பிரகாசிக்கின்ற சடைமுடியுடையவரே, பிரமா விஷ்ணு தேவேந்திரன் முதலியவர் கிரீடங்கள் அழுந்தித் தழும்புபட்ட திருவடியுடையவரே, குளிர்ந்த சோலை சூழ்ந்த திருப்பரங்கிரியி லெழுந்தருளியிருக்கும் நாதரே! உமது சிவந்த திருவடிகளை வணங்குவோம். (எ-ம்) (௪௩)

உலக முந்திய வறுவி தமபெற வொழிவி லாதெழ விரிசெய்தே
யலகி லம்புவி பிறவி கொண்டிட வருள ருந்துணை வினைசமன்
மலிவி டும்பொழு தருள்பொ ருந்தினர் மலம கன்றிடு பிறவிதீர்
நலமெ ழும்பொருள் வளர்ப ரங்கிரி நாத சேவடி போற்றுவாம்.

(இ-ள்) உலகத்தில் முற்பட்ட ஆறுவித சமயங்கள் ஒழிந்துபோகாமல் விரிவாக விளங்கும்படிசெய்து, ஆன்மாக்கள் சனனமெடுத்துச் செய்யும் நல்வினை தீவினை யென்னும் இரண்டுஞ் சமமாக விளங்கும்போது, அருள் பொருந்தினவராய் ஆணவ மலத்தைப்போக்கிப் பிறவியை யொழிக்கின்ற நன்மை மிகும் பொருளாகி வளர்கின்ற திருப்பரங்கிரியி லெழுந்தருளிய நாதரே! உமது சிவந்த திருவடிகளை வணங்குவோம். (எ-ம்) (௪௪)

தானு மேசத சத்தெ னும்படி சத்த றிந்திட வரியதா
மூன மேயிரு ளாகி மூடிட வுற்ற பானு மறைத்தகண்
மேனெ டும்பட லந்து டைக்க விளம்பு சற்குரு வுணருமோர்
ஞான மேவடி வமர்ப ரங்கிரி நாத சேவடி போற்றுவாம்.

(இ-ள்) ஆன்மா, சத்துப்பொருளைச் சார்ந்து சத்தாயும், அசத்துப் பொருளைச்சார்ந்து அசத்தாயும் இருக்குமென்று சொல்லும்படி சத்துப்பொருளாகிய மதியை யறியவொட்டாமல் குற்றமாகிய ஆணவமலமானது மறைத்தலும், சூரியனைக் காணவொட்டாமல் மறைக்குங் கண்ணின் படலத்தை நீக்குதல் போல அவ்வாணவமலத்தை நீக்க ஞானமாகிய பிரகாசத்தை உபதேசிக்குஞ் சற்குருவை யறியும் ஓர் அறிவே திருவடியாகக் கொண்டருளிய திருப்பரங்கிரியிலிருக்கும் நாதரே! உமது சிவந்த திருவடிகளைப் பொன்போலப் போற்றி வணக்கஞ்செய்வோம். (எ-ம்) (௪௫)

வேறு.

இன்னன பழிச்சி யிருபதந் தடவி
யெழின்முடி புவிதொடப் பரவுந்
தன்னிளங் குமான் றனையெடுத் திறுகத்
தழுவியே யுச்சிமோந் திருத்திப்
பொன்விழு தனைய கற்றையஞ் சடிலன்
புகன்றிடுங் கருணையூற் றெழுந்த
பன்னிரு விழியா யுன்செய லதனாற்
பரவைபி னுவகைமூழ் கினமால்.

(இ-ள்) இவ்விதமாகத் தோத்திரம் செய்து இரண்டு பாதங்களையுந் தீண்டி அழகுபொருந்திய சிரசு பூமியிலே படும்படி வணங்கிய தமது இளைய குமாரனாகிய முருகக்கடவுளை யெடுத்து மார்போடணைத்துத் தழுவி உச்சி மோந்து தம் பக்கத்திலிருத்திக் குமரனே! உன்தவத்துக்கு மகிழ்ந்தோமென்று பொன் விழுதுபோன்ற சிவந்த சடையினையுடைய சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளிச் சொல்லுவார். (எ-ம்) (சசு)

தேன்றுளும் பியதோர் தெய்வநூல் வடித்த
தெளிவெனு மந்திரம பலிகக
மாந்தர்கள் வெருவிக் குருமுகத் துணரு
மாறுனைத் தவம்புரிந் திடவே
பாந்தண்மேற் கிடந்த பூமியி னிழிந்து
பரங்கிரி மருவுவா யென்றே
மேந்திளங் கலசக் கொங்கையாள் பயக்க
விளமைபொங் கியவடி வெடுத்தோய்.

(இ-ள்) தெய்வத்தன்மை பொருந்திய நூல்களின் பொருள்களை யெல்லாம் வடித்தெடுத்த சாரமாகிய பஞ்சாட்சர மந்திரத்தைக் குருமுகமாகவே பெறவேண்டுமென்பதை உலகத்தார் அறியும்படி முருகனே! உன்னைத் திருப் பரங்கிரியினிடத்துத் தவஞ்செய்யச் சொன்னோம். (எ-ம்) (சஎ)

இம்மனு மட்டோ வன்றெழு கோடி
யிசைத்திடு மந்திர மனைத்து
நம்மையுந் தனையுந் தெரிந்ததோர் குரவ
னன்றிட வவன்செவி புகட்டித்

தம்மனத் தெழுகி யியற்றிடப் பயனைத்
தந்திடுங் கூன்றினை தவழ்ந்து
சும்மைசெய் பரவை வயிறுதீக் கொளுத்தச்
சோதிவேற் பணிவிடை கொடுத்தோய்.

(இ-ள்) இந்த மந்திரத்தை மாத்திரமல்ல, சத்தகோடி மகா மந்திரங்களென்று சொல்லப்பட்ட ஏழு கறுகளையுடைய எல்லா மந்திரங்களையுமே தன்னையுந் தலைவனையுமுணர்ந்த சற்குருவாலேயே உபதேசிக்கத் தெரிந்து கொண்டாற்றான் அம்மந்திரங்கள் பயன் கொடுக்கும். (எ-ம்) (சஅ)

எழுதொணு வேத மெடுத்தெடுத் தறைவோ
ரேனைய நால்வகை வருணம
பழுதறு நான்கி னாச்சிர மத்தோர்
பார்புக ழிலிங்கிக ளுடனே
முழுதுணர் தூய தந்திரத் தோர்க்கு
மொழிந்திடு மைந்தெழுத் துரித்தாம்
விழுதுவிட் டெழுந்து திசையொளி புதைக்க
விளங்குசந் திரோதய முகத்தோய்.

(இ-ள்) இந்தப் பஞ்சாக்ஷர மந்திரம் வைதிக சைவர்களுக்கும் மற்றைய நால்வகை வருணத்திலுமுள்ள நான்கு ஆச்சிரமத்தோர்களுக்கும் இலிங்க தாரண முடையவர்களுக்கும், மற்றச் சிவாகமவழி வந்த எல்லாருக்கும் உரித்தாகும். பிரகாசிக்கின்ற சந்திரன் போன்ற முகத்தையுடைய முருகனே (எ-ம்)()

கற்றையங் கிரண மகுடகோ டரக்
கடவுளர் முனிவரே னையர்க்கும்
பற்றிய நெஞ்சம் விளைத்திடு மிந்தப்
பரங்கிரிக் கந்தமா தனத்தின்
முற்றிய தெய்வக் கொடுமுடி யதனின்
முயலுதி யென்றது வழாமை
யுற்றிடு தவத்தான் மகிழ்ந்தனங் கறையூற்
றொழுக்கிய சோதிவேற் கரத்தோய்.

(இ-ள்) தேவர்கள், திரண்டசடையையுடைய முனிவர்கள், மற்றையர்கள் எல்லாருக்கும் இன்பத்தையே விளைகின்ற இந்தத் திருப்பரங்கிரியாகிய கந்தமாதன மலையின் கொடுமுடியினிடத்துத் தவஞ்செய்வாயென்று நாம் சொன்னபடி தவறாமல் நீ செய்த தவத்திற்கு மகிழ்ச்சியடைந்தோம். (எ-ம்) ()

இன்னன கூறி யிருளொடுத் துண்ணு
மிளம்பிறைக் குருத்தினைச் செருகும்
பொன்னவிர் சடையான் வேண்டிய வரத்தைப்
புகலெனத் தந்தையைப் பரவிப்
பன்னிரு விழியுங் குளிர்ந்திடப் பார்த்துப்
பார்த்துநின் றிடுமிளங் குமரன்
றன்னமு தொழுகத் துளும்புதீங் கிளவி
தொகுத்தவாய் மலர்ந்திது கூறும்.

(இ-ள்) இளம் பிறைச்சந்திரனைத் தரித்த பொன்போலப் பிரகாசிக்கின்ற சடையையுடைய சிவபெருமான் இந்தப்படிசொல்லி உனக்கு வேண்டும் வரங்களைக் கேளென்றருள்செய்ய,பிதாவாகிய அவரை வணங்கிப் பன்னிரண்டு கண்களுங் களிகூரப் பார்த்துப்பார்த்து நிற்கின்ற முருகக்கடவுள் அமுதொழுகும்படியான இனிய வார்த்தைகளைச் சொல்லுகின்றார். (எ-ம்) (நிக)

திருவுளத் தேறுச் செய்கையை யடியேன்
செலுத்திய பிழைபொறுத் திடுதி
மருவுளத் தோகை மலர்ந்திடப் பெறுதி
மழலையுந் தெளிந்திடாச் சிறியேற்
கருள்விழிப் பார்வை தினந்தினந் தருதி
யன்பர்கள் விரும்பிய பொருளைத்
தாவிளம் பசுவின் கன்றினைத் தொடருந்
தாயென விரங்கிய வுளத்தோய்.

(இ-ள்) மெய்யன்பர்கள் இச்சித்தபொருளை யருளிச்செய்வதற்கு,இளங் கன்றினைத் தொடர்ந்துசெல்லுந் தாய்ப்பசுவைப்போல மனங் கசிந்துருகும் கருணாநிதியே! உம்முடைய திருவுளத்துக்குப் பொருந்தாத செய்கையைச் செய்த மழலைச்சொல் திருந்தாத அடியேன்குற்றத்தைப் பொறுத்துக்கொண்டு சந்தோஷிக்கவேண்டும். தினந்தோறு மடியேனைக் கடைக்கண்ணாற் பார்த்துத் திருவருள் செய்யவேண்டும். (எ-ம்) (நிஉ)

தாரணி தன்னிற் றழுவிடா தவரைத்
தழுவிய கொடுமையும் வயிற்றி
லாவல்வெம் பசியா லருந்திடா தவர்பா
லருந்திய வினைமுதற் பவமுந்

தீரவே பரங்குன் றடைந்திருந் திடுவோர்
சிவகதி யடைந்திட வேண்டுஞ்
சூரர மகளிர் கழுத்தணி தாலி
துலங்கிட நஞ்சுவாய் மடுத்தோய்.

(இ-ள்) தெய்வப்பெண்கள் திருமங்கல்யம் நிலைபெற்றிருக்க ஆலகால விடத்தையுண்டருளியவரே! சேராத பெண்களைச் சேர்ந்த பாவமும், பசியினது ஆவலினால் அருந்தாத இடத்தில் அருந்திய பாவமுதலிய தோஷமும் தீரும் பொருட்டு இந்தத் திருப்பரங்கிரியில் வந்து வசிப்பவர்கள் அந்தப்பாவங்களை நீங்கிச் சிவகதி அடையவும் வேண்டும். (எ-ம்) (௫௩)

அய்யநின் னுருவம் விளங்கிடத் தாபித்
தருச்சனை செய்திடு மிலிங்கந்
துய்யகண் குளிரக் கண்டவர் தந்தை
தூயதாய் குரவர்வே தியருக்
கையமுற் றிழைத்த பவந்துடைத் தியற்று
மருஞ்செயல் முடித்துவீ டருள்வை
பையர விணங்கி யுறவுகொண் டாடப்
பனிமதி சூடுசெஞ் சடையோய்.

(இ-ள்) சர்ப் முஞ் சந்திரனுமுறவுகொண்டு விளையாடும்படி சடையிலே தரித்தருளிய ஐயா! நான் தாபித்தருச்சனைசெய்த இந்தச் சிவலிங்கத்தைத் தரிசித்தவர்களுக்கு தந்தை, தாய், குரு, பெரியோர்கள், பிராமணர், சைவர்களுக்குச் செய்த பாவங்களை நீக்கி அவர்கள் செய்த அருமையாகிய தவங்களை முற்றுவித்துக் கதி அடையவும் செய்தருளவேண்டும். (எ-ம்) (௫௪)

என்றியம் பியதோர் குருதியூற் றெழுந்தே
யிலகிய கடுமிவே லவற்கு
வென்றிவே ளுடலம பொடிபட விழித்த
விமலனு மவ்வர முதவிப்
பின்றன துவகை பெருகிய விருப்பாற்
பிதிர்பட நமனுடல் மிதித்தோ
னன்றென வதிக வரந்தரும பொருட்டு
நவிற்றுவ துளதெனக கிளத்தும.

(இ-ள்) பிரகாசிக்கின்ற கூர்மையுடைய வேலாயுதத்தைத் தாங்கிய முருகக்கடவுள் இவ்விதம் வரங்கேட்க, மன்மதனை யெரித்தருளிய சிவபெருமான்

அந்த வரங்களைக் கொடுத்து, இன்னும் உனக்கு அதிகவரங் கொடுக்கவேண் டியதிருக்கிறது, கேட்பாயாகவென்று சொல்லுகின்றார். (கூ)

சரவணப் பொய்கை கண்டவர் தருமஞ்
சாருவர் தொட்டவர் பொருளை
மருவுவ ருள்ளே கொண்டவர் காம
மன்னுவர் மூழ்குவோ ரவரும்
பரகதி யடைவர் புத்திர கூவம்
படிந்தவர் மைந்தரைப் பெறுவர்
திருவரை முளைக்கும் பசுங்கொடி பழுக்கத்
தினந்தினஞ் சுவைதருங் கனியே.

(இ-ள்) சிறப்புத்தங்கிய மலையிலே முளைத்த பசிய வள்ளியாகியகொடி மனமகிழ நாடோறு மின்பத்தைத்தரு முருகனே! சரவணப்பொய்கையைக் கண்டவர்கள் தருமத்தை அடைவார்கள், தொட்டவர்கள் செல்வத்தை அடைவார்கள். ஆசமனம் செய்தவர்கள் இன்பத்தை அடைவார்கள். ஸ்நாநம் செய்தவர்கள் மோக்ஷத்தை அடைவார்கள். புத்திரகூவத்தில் ஸ்நாநம் செய்தவர்கள் புத்திரப்பேற்றை அடைவார்கள். (எ-ம்) (கசு)

சத்திய கிரியைச் சேர்ந்தபின் மயிடன்
றலைதனி லிருபதஞ் சேப்ப
வைத்தவள் முன்னுந் தேன்குதித் திடவே
மதுகர மிடறிய துளவம
பொத்திய புயத்து நாரணன் முன்னும்
புனிதராய் வைகியஞ் செழுத்தைச்
சித்திதந் தருள வியற்றுவோர் பிறவி
தீருவர் வேலணி கரத்தோய்.

(இ-ள்) சத்தியகிரியென்று சொல்லப்படுந் திருப்பரங்குன்றத்துக்கு வந்து சேர்ந்ததின் பின் மயிடாசுரனுடைய கழுத்தை மிதித்து அவனைச் சங் கரித்தவளாகிய துர்க்கை சந்நிதானத்திலும், துளசி மாலையணிந்த விஷ்ணு சந்நிதானத்திலும் பரிசுத்தர்களாக இருந்து பஞ்சாக்ஷரத்தைச் செபம் செய் தோர்கள் பிறவிவேரை யறுப்பார்கள். (எ-ம்) (கள)

என்றின வுரைத்துக் குமரனைக் கையா
லெடுத்தணைத் திருத்திமால் விடைமேற்
குன்றினின் முளைத்த கொடியுடன் மகிழ்ந்து
கொண்டல்வண் ணத்தனு தியாக

ணன்றென முனிவர் கணங்கள்சே விப்ப
நலங்கிளர் கைலையிற் புக்கான்
மன்றலங் கனக மலர்மழை பொழிந்து
வானவர் களிதுளங் கினரால்.

(இ-ள்) சிவபெருமான் இவ்விதமருளிச்செய்து முருகக்கடவுளைத் தமது திருக்கரங்களாலெடுத்து மார்போடணைத்துத் தழுவி உட்காரச்செய்து உமாதேவியுடன் மகிழ்ந்து அரிபிரமாதி தேவர்களும், முனிவர்களும், சிவகணங்களும் நல்லதென்று துதிக்கக் கயிலாசமலைக கெழுந்தருளினர். தேவர்கள் மலர்மழை பொழிந்து மகிழ்ச்சி யடைந்தார்கள். (எ-ம்) (இஅ)

இன்னன புகழ்சேர் பரங்கிரித் தகைமை
யியலறி விண்ணவர் முனிவர்
மன்னிய விருப்பு வளர்ந்திட வருவார்
வந்தபின் பிரிந்திடா திருப்பர்
மின்னிய வடிவேற் குமரன்வாய் மலர்ந்து
விமலனை யேத்திய பனுவல்
பன்னுவோர் செவிகொண் டமுதமே போலப்
பருகுவோர் பெறும்பயன் கேண்மின்.

(இ-ள்) இந்தத் திருப்பரங்கிரியின் பெருமையையுணர்ந்த தேவர்களும் முனிவர்களும் ஆசையுடனே தரிசிக்கவருவார்கள். அங்கு வந்தவர்கள் அதை விட்டுப் பிரியாமல் அங்கேயிருப்பார்கள். முருகக்கடவுள் சிவபெருமானைத் துதித்த பாடல்களைச் சொன்னவர்களுங் கேட்டவர்களும் அடையும் பயனைக் கேளுங்கள். (எ-ம்) (இக)

அழலைமொண் டிறைத்துப் புழுங்கிய காட்டி
லடுவிலங் குற்றதோர் துணுக்கம்
வழுவுறு கொடுங்கோன் மருவிய பொல்லா
மன்னவர் வருத்தகண் கலக்கம்
பழுதுற வயிற்றி லெரியிடத் தரத்திப்
பறித்திடுங் கள்வர்செய் நடுக்கம்
விழுமிய தேனூற் றெழுந்துதித் திக்கு
மெய்த்துதி பழிச்சிட வாழ்வார்.

(இ-ள்) சிவபெருமானை முருகக்கடவுள் பூசித்து இனிமையாகத் துதித்த பாடல்களைப் படித்துவணங்குவோர்கள் வெப்பமிகுந்த காட்டில் கொடியமிருகங்களால் உண்டாகும் பயமும், கொடுங்கோலரசர் கொடுமைகளால் வருந் துன்பமும், கள்ளர்களாலுண்டாகும் நடுக்கமும் நீங்கி வாழ்ந்திருப்பார்கள். (எ-ம்) ()

மெய்க்கறை சுவறி நைந்துநைந் துருகி
விளைந்தநோய் கொண்டிடும பொழுதிற்
றுய்க்கவு மின்றி வறுமைவந் தடையிற்
சூன்மழை பிலிற்றிடாக் கொடுமை
மொய்க்கும்வற் கடத்திற் கையிற்படை வீசி
மூண்டெழு பூசலி லிருண்ட
மைக்கறை கிடந்த களத்தனார் துதியை
வழுத்துவோர் மனந்துணுக கடையார்

(இ-ள்) சரீரத்திலுள்ள இரத்தம்வற்றி நோயால் மெலிந்தகாலத்திலும், உணவின்றி வறுமை வந்த காலத்திலும், மழையில்லாத கொடுமையாலுண்டாகும் பஞ்சகாலத்திலும், போர்க்களத்து உயிரிழக்கவரு மனத்துணுக்கம் வந்த காலத்திலும், சிவபெருமானை முருகக்கடவுள் துதித்த பாடலைப் பாடித் துதிப்பவர்கள் துன்பமடையமாட்டார்கள். (எ-ம்) (சுக)

புணர்ந்திடா மாதர் குடமுலை நெருங்கப்
புல்லினும் பசியயிற் றெரியக்
கொணர்ந்திடா வுணவை யருந்தினுங் கொடுமை
கொண்டபா தங்களை யறுக்கு
மணந்தபொற் றகட்டில் வெள்ளியந் தகட்டில்
வளர்பனந் தகட்டினி லெழுதி
யுணர்ந்தகுஞ் சியினி லணிந்தவர் நெஞ்ச
முளுகரும்வஞ் சகங்களைந் திடுவார்.

(இ-ள்) தங்கத்தகட்டிலாயினும், வெள்ளித்தகட்டிலாயினும், பனையோலையிலாயினும் அந்தக் கவிகளை எழுதிச் சிரசிலே யணிந்துகொள்பவர்கள் கூடாத மாதரைக் கூடிய பாவமும், உண்ணாத இடத்திலுண்ட பாவமும், மனம் பொறுக்கமாட்டாத வஞ்சகமும் போகச்செய்து தூயமனமுடையவர் களாவார்கள். (எ-ம்) (சுஉ)

மும்மையி னிரட்டி கொண்டமா தத்தின்
முறைபெறு தத்தமக் கேற்ற
செம்மைசேர் நியம முடித்துப்பின் புனிதச்
செல்வரா யித்துதி விரிப்போ
ரம்மகப் பெறுவர் பிணியினாற் றுன்ப
மடைகில ரொருமதி கூறத்
தம்மன மகிழ்வார் செய்யவாய் மலர்ந்த
சண்முகக் குரிசில்சொல் லெளிதோ.

(இ-ள்) ஆறுமாதம் வரை தங்கள் நித்தியகடன்களை யொழுங்காகச் செய்து ஆசாரமுடையவராய் மேலே கூறிய பாடல்களைப்பாடித் துதிப்பவர்கள் புத்திரப்பேறடைவார்கள். பிணியால் வருந்தார்கள். ஒரு மாதம்வரை பாடித்துதித்தவர்கள் துன்பங்களெல்லாம் நீங்கி மகிழ்ச்சியடைவார்கள். ஆறுமுகம் படைத்த முருகக்கடவுள் திருவாக்கா லருளிச்செய்த பாடல்கள் சாமானியமாகுமோ. (எ-ம்) (௬௬)

அரியநோன் பிழைத்துங் காண்டக வரிதா
மறுமுக வேலவற் கருளு
முரியதோர் தானத் திருவுருக் காட்சி
யுதவுதைப் பூசமாந் தினத்தில்
வரியளி யிடற மலர்முறுக் குடைந்து
மதுவொழுக் கியநறுங் கடுசகைத்
தெரியலான் செவ்வேள் சிறப்பியற் றிடுவோர்
சிந்தையில் விருப்பமெய் திடுவார்.

(இ-ள்) அருமையான தவஞ்செய்தாலுங் காணுதற்கு எட்டாதவராகிய ஆறுமுகக் கடவுளுக்குச் சிவபெருமான் திருவுருக்காட்டிய நாளென்று சொல்லப்படும் தைப்பூச நாளில் முருகக்கடவுளுக்கும் கொன்றைமாலையணிந்த சிவபெருமானுக்கும் அபிடேக நைவேத்தியஞ் செய்தோர் இட்டகாமிய சித்திகளைப் பெறுவார்கள். (எ-ம்) (௬௭)

சிறந்ததைப் பூசத் தினத்துவா னுச்சி
தினகரன் மருவிய காலை
யறந்தெழு புனிதச் சத்திய கூவ
மணிகெழு புத்திர கூவ

நறுந்தொடைக் கடம்பன் சரவணத் தடத்து
நலம்பெறு மைந்துபச் சறுகு
பெறுந்தலை மிசைவைத் தாடியஞ் செழுத்தும்
பேசினர் பெருமையா ருரைப்பார்.

(இ-ள்) தைப்பூசத்தினத்தில் சூரியன் ஆகாயத்தில் உச்சியில் வருங் காலத்தில் சத்தியகூவத்திலும், புத்திரகூவத்திலும். சரவணப்பொய்கையிலும் ஐந்து பசிய அறுகம்புல்லைத் தலைமேலே வைத்துக்கொண்டு நீராடிப் பஞ்சாக்ஷர செபம் செய்வோரது பெருமையை எவராலுஞ் சொல்லமுடியாது. (எ-ம)

மற்றைய தலத்திற் கோடிகன் னியரை
மறைகொடு விளிமபினில் வடுவைப்
பெற்றநா வினருக் களித்தபே றதனைப்
பெறுகுவார் கிடைத்திட லரிதா
யுற்றதைப் பூசத் திருவிழாக் காண்போ
ரும்பரும் புகழுமிப் பதியிற்
பற்றிவாழ்ந் திடுவோர் பாசவேர் களைந்து
பரகதி யெளிதினிற் படைப்பார்.

(இ-ள்) தைப்பூச நாளிலே திருவிழாச் சேவை செய்பவர்கள் வேறு தலங்களில் வேதங்களை நாத்தழும்புற ஓதிய வேதியருக்குச் செய்வித்த கோடி கன்னிகாதானப் பலனை யடைவார்கள். தேவர்கள் துதிக்கும் இந்தத் திருப் பரங்கிரியில் வாசஞ்செய்பவர்கள் பாசத்தை முற்றுங் களைந்து மோக்ஷமடைவார்கள். (எ-ம்) பாசம்-ஆணவமலம். (சுசு)

கங்கைசூழ் கிடந்த காசியா தியதாங்
கருதிய தலங்களிற் புனிதம்
பொங்கிய தலமே பரங்கிரி யுண்மை
புகன்றது சவுனக கேட்டி
மங்குல்சூழ் சிமையப் பரங்கிரித் தலத்தில்
வந்தரைக் கணமிருந் தேகுந்
துங்கரைத் தொடர்ந்து புரப்பனே குருதி
தூற்றிய குடுமிவேற் கரத்தான்.

(இ-ள்) காங்காநதி சூழ்ந்த காசி முதலாகிய சிவ ஸ்தலங்களிலெல்லாம் இந்தத்திருப்பரங்கிரியே பரிசுத்தமிகுந்த தலமாகும். இந்தத்தலத்தில் அரைக் கணம்தங்கிப்போகும் பெருமையுள்ளவர்களை வேலாயுதத்தையுடைய முருகக்

கடவுள் விடாது அவர்கள் பின்சென்று அவர்களுக்குண்டாகும் துன்பங்களை யெல்லாம் நீக்கிக் காத்தருளுவார். (எ-ம்) (௬௭)

ககனமா முகடு பாய்ந்திடுங் குடுமிக்
கதிர்ப்பரங் கிரிககதை யினவிப்
புகுசெவி யமுத மருந்தல்போற் களிக்கும்
புனிதமாந் தவமபெறு முனிவீர்
தகைமைசே ருமது பயனுரைப் பார்யார்
சாற்றலா லெமக்குமப் பயனே
வகைபல விளத்தி யென்கொலோ வதனில்
வைகிட வாசைமிக் கெமக்கே.

(இ-ள்) ஆகாயத்தை யளாவிய சிகரத்தையுடைய இந்தத்திருப்பரங்கிரியின் கதையாகிய அமுதத்தைக்கேட்கும் பரிசுத்தமாகிய தவஞ்செய்த பெரியீர் நீங்களிதனாலடையும் பிரயோசனத்தை யெடுத்துச் சொல்லுவார் யாவர். இந்தக்கதையை உங்களுக்குச்சொல்லுதலால் எனக்கும் உங்களுக்குக்கிடைத்த பயன்கிடைக்கும். விரிவாக எடுத்துப்பேசுவானேன். எனக்கும் இந்தத் தலத்தில் வசிக்கப்பிரியம் அதிகமாயிருக்கிறது. (எ-ம்) (௬அ)

தரணியிற் கிரேதா யுகத்தின்மெய்த் தகைமைச்
சத்திய கிரியதா நீதி
மருவிய திரேதா யுகத்தினிற் சுமந்த
வனமதாந் துவாபர மதனி
னிலகிய பிரம விட்டுணுத் துருவ
மெனப்பெறுங் கலியுகந் தன்னி
லருள்வளர் குமரா புரியெனு நாம
மடைந்திடும் பரங்கிரி யாதோ.

(இ-ள்) பூலோகத்தில் இந்தத்திருப்பரங்கிரியானது கிரேதாயுகத்தில் சத்தியகிரியெனவும், திரேதாயுகத்தில் சுமந்தவனமெனவும், துவாபரயுகத்தில் விட்டுணுத்துருவமெனவும், கலியுகத்தில் குமராபுரி யெனவும் பெயர்பெற்று விளங்கும். (எ-ம்) (௬௯)

முத்திசேர் பதியை யடைந்திடுஞ் சிபிக்கோன்
முயன்றபூ தானத்தி லுய்யு
மித்தகைப் பதியின் கதையிவச் சருக்க
மிசைத்துளோர் கேட்டுளோர் கந்தை

வைத்தபுத் தமுத மிறைத்திளங் குழவி
மதிவிளை யாடுசெஞ் சடையோன்
மெய்த்தகு குமரன் கருணையை யடைந்தே
மேதினி யுலகின்வாழ்ந் திடுவார்.

(இ-ள்) மோக்ஷம் பொருந்திய பதிப்பொருளை யடைந்த சிபியென்னும் அரசன் பூமியைத்தானஞ்செய்து பயனடைந்த கதையை இந்தத்திருப்பரங் கிரிச்சரித்திரத்தில் சொன்னவர்களுங் கேட்டவர்களுங் கங்கையையுஞ் சந்திரனையுந்தரித்த சிவபெருமான் திருக்குமாரராகிய முருகக்கடவுளின் அருள் பெற்றுப்பூலோகத்திற் பெருவாழ்வு பெற்றிருப்பார்கள். (எ-ம்) (எ0)

மூன்றவது குமரன் தவகச்சருக்கம் முற்றிற்று.
ஆகச்சருக்கம் ௩-க்கு செய்யுள் கஃ௩.

---

நான்காவது

# சிபிவேந்தன் பூதானச்சருக்கம்.

—(o)—

சுவைகசிந் தூறுஞ் செய்யுட் சூதனை வணங்கி நன்னூ
லிவர்தரும் பொருளை யாய்ந்த சவுனக னியம்புஞ் செங்கோற்
புவிகெழு சிபிக்கோன் விண்ணோர் புகழ்பரங் கிரியிற் போந்து
நவைதவிர் வீடு பெற்ற தெங்ஙனோ நவிறி யென்றான்.

(இ-ள்) நல்லநூற் பொருள்களை யாராய்ந்த சவுனகமுனிவர் மதுரங் கசிந்தூறும் செய்யுள்களைத் தெரிந்த சூதமுனிவரை வணங்கிச் சுவாமீ செங் கோலைத்தரித்த சிபிவேந்தன் தேவர்களாலே புகழப்படுந் திருப்பரங்கிரியிலே வந்து பூதானஞ்செய்து மோக்ஷமடைந்த விவரத்தைச் சொல்வேண்டுமென்று கேட்டனர். (எ-ம்) (க)

என்றமா தவனை நோக்கி யிமையவர் மகுடந் தாக்கித்
துன்றியே சிவந்து காட்டும் துணைப்பதம படைத்த நந்தி
தன்றிரு வுளத்தி லோகை தருஞ்சனற் குமரற் கோதி
நன்றிசெய் கதையீ தென்று நலம்பெறு சூதன் சொல்வான்.

(இ-ள்) சூதமுனிவர் தமது மாணாக்கராகிய சவுனகரைப்பார்த்துத் தேவர்கள் வணங்கும்போது, அவர்கள் மகுடந்தாக்குதலினாலே சிவந்த பாதங் களையுடைய நந்திபெருமான் சனற்குமார முனிவருக்குச்சொல்லியகதை யிது வென்று சொல்லுவாராயினர். (எ-ம்) (உ)

இருட்பிழம் புடைத்துக் கையா லெடுத்தெடுத் தருந்தும் பானுத்
திருக்குலம் பொலியத் தோன்றித் திரைகடற் றுனை விக்கும்
குருக்கிளர் ஞால முற்றுங் குளிர்பொருந் திடவே நீதி
பெருக்கவோர் குடையி னீழற் பிறங்கவே யரசு செய்வோன்.

(இ-ள்) இருளைப்போக்குகின்ற சூரியனுடைய வம்மிசத்திலே பிறந்து கடல்சூழ்ந்த உலகத்தை யெல்லாம் நீதி அதிகரிக்க ஒரு குடை நிழலிலே வைத்து அரசாட்சி செய்பவன். (எ-ம) (௩)

மன்னிருட் பிழம்பை நக்கு மணிச்சுடர் மகுடம் வேய்ந்தோ
னின்னமு தெழுந்த நூலி னெல்லையி னளவு கண்டோன்
றன்னுயர் களிற்றால் மன்னர் தடமுடி யிடறி மற்றை
யொன்னலர் துணியச் சோரி யுதறிடுங் குருதி வேலோன்.

(இ-ள்) இருட்கூட்டங்களைத் தூரத்துகின்ற பிரகாசம் பொருந்திய ரத்தினங்கள் பதித்த கிரீடத்தை யணிந்தவன். அமுதம் போன்ற நூல்களை யெல்லாம் வரம்புகண்டவன். எதிர்த்த அரசர்களுடைய முடிகளைத் தன்னுடைய பட்டத்து யானையால் துணித்தவன். யுத்தஞ்செய்து இரத்தஞ்சிந்தும் வேலாயுதத்தை யுடையவன். (எ-ம) (௪)

பொன்னனார் முலைப்பொற் கும்பம் பொலிந்துருண் டெதிரே பாயத்
துன்னிய களபச் சேறு துளும்பிய மார்பு கொண்டோன்
பன்னகம் பரித்த ஞாலப் பல்லுயிர் களிப்பின் மூழ்கத்
தன்னிள மகவுபோ லோம்பித் தழைத்தகாம் பீலி வாழ்வோன்.

(இ-ள்) இலக்குமி போன்ற இளம்பெண்கள் குடம்போன்ற கொங்கைகள் பாய்தலாலே கூட்டுவர்க்கச் சாதனம் நிறைந்து துளும்பிய மார்புடையவன். ஆதிசேடனாலே தாங்கப்பெற்ற உலகத்திலுள்ள உயிர்களெல்லாம் யாதொரு இடையூறுமில்லாமல் மனங்களித்து வாழத் தன்னுடைய இளங்குழந்தையைப்போலப் பாதுகாக்கப்பட்டவன். காம்பீலி தேசத்தை இராசதானியாகக்கொண்டு வாழ்பவன். (எ-ம்) (௫)

இன்னன தகைமை கொண்ட வெழிற்சிபி வேந்தன் ஞாலந்
தன்னதாக் கொண்டு நீதி தழையநீ டூழி வாழ்ந்தான்
பின்னொரு தினத்து ணீதி பெருகுபுண் ணியநீ தோய
முன்னியாத் திரைகொண் டேக முயற்சியி னிருந்த காலை.

(இ-ள்) இப்படிப்பட்ட பெருந்தகைமை பொருந்திய சிபி யென்னும் அரசன் உலகத்தை யெல்லாம் நெடுநாள் அரசு செய்துவந்தான். அப்படி

அரசு செய்யுங்காலத்தில் ஒருநாள் புண்ணிய தீர்த்தங்களிலே ஸ்நானஞ்செய்வதற்காக யாத்திரைபோக எண்ணி யோசித்துக்கொண்டிருக்குஞ் சமையத்தில் (எ-ம்) (சு)

வெண்ணிலா வெள்ளங் கால வெண்பொடி துளும்பு மெய்யும்
பண்மறை யோதிச் செப்பும் பதிந்தொளி பொருந்து நாவும்
வண்மைசேர் கருணை வெள்ள மடைதிறந் தொழுகுங் கண்ணுங்
கண்ணனி னழகு சேருங் கவுதம முனிவன் வந்தான்.

(இ-ள்) தேகமெல்லாம் விபூதிப்பொலிவும், இசைபொருந்திய வேதங்களை யெல்லாம் ஓதியுணர்ந்த நாவும், கருணை வெள்ளம் பொழிகின்ற கண்களும், கண்ணபிரானைப்போல் அழகுமுள்ள கவுதமமுனிவர் வந்தனர். (எ-ம்)

போந்தமா தவத்து ஞானப் புராதன முனியைக் காண்பான்
வேந்தனு மெதிரே வந்து விளரிபாண் மிழற்றும் வண்டு
தேன்றுளும் பிடக்கால் பாயுந் திருமலர் பதத்திற் பெய்து
சாந்தருக் கியநீர் தூபத் தகைமைகொண் டிறைஞ்சிப் போற்றி.

(இ-ள்) மகத்தவத்தையுடைய ஆதிமுனிவராகிய கவுதம முனிவரை அரசன் எதிர்கொண்டுசென்று வரவேற்று அவருடையதிருவடிகளிலே வண்டுகளிசைபாடுந் தேனொழுகுகின்ற சுகந்த மலர்களைச்சொரிந்து அர்க்கிய பாத்திய முதலிய உபசாரங்கள்செய்து பூசித்து வணங்கித்துதித்து. (எ-ம்) (அ)

மகக்குழா மொருங்கு சூழ மனங்களி வடமீன் கற்பின்
முகைககுறு மூரற் செவ்வாய் முலைக்குடஞ் சுமந்து வாடித்
திகைத்தநுண் மருங்குற் றேவி சிலம்புகல் லெனவோ விட்டுத்
தகைத்தகால் பெயர்த்து மேவத் தராபதி வலஞ்செய் தானல்.

(இ-ள்) கூசி யொதுங்கி சிலம்புகள் முழங்கக் கால்பெயர்த்து வைக்கும் அருந்ததி போன்ற கற்பினையுடைய மனைவியும், புத்திரர்களும், தானும் கவுதமுனிவரை வலமாகப் பிரதக்ஷணம் செய்தார்கள். (எ-ம்) (கூ)

இருளைநக் கியசெஞ் சோதி யெழின்மணிப் பீடத் தேற்றிக்
கரமலர் தூக்கி நிற்குங் காவலன் றன்னை நோக்கித்
தரணியி லொருகோ லோச்சித் தழைந்துவா ழியரோ வென்று
பரமனை யுளத்தில் வைத்துப் பதித்திடு முனிவன் கூறும்.

(இ-ள்) அதன்மேல் இரத்னமணி பதித்த ஆசனத்திற் கவுதம முனிவரைப் போந்தருளச்செய்து இரண்டுகரங்களையும் சிரசிலே குவித்துத் துதித்து

நிற்கின்ற அரசனைப்பார்த்து அரசனே! நீ இந்த உலகமெல்லாம் செங்கோல் செலுத்தி அரசாட்சிசெய்து விருத்தியாகி நீடூழிகாலம் வாழக்கடவாயென்று ஆசீர்வதித்துச் சிவபெருமானை மனத்திலே பதித்த கவுதமுனிவர் சொல்லு வார். (எ-ம்) (௯0)

வருதிசீ பிறந்த நாளின் வலியகோ ளிரவி பாம்பு
தரைமகன் வளைந்தார் நீதித் தருமஞ கையிஞ னீயு
மிரவடர் கதிர்போ லெண்ணு திருந்தனை தெவ்வர்க் கேற்பக்
கருவெடுத் துண்டு வாயிற் கறைதுளித் துதறும் வேலோய்.

(இ-ள்) பகையரசரைக் கருவறுத்து இரத்தந்தோய்ந்து பிரகாசிக்கும் வேலாயுதத்தைத்தாங்கிய அரசனேவாராய். நீ பிறந்ததினத்திலே சனி, சூரியன், ராகு, கேது,செவ்வாய் ஆகிய கிரகங்கள் ஒழுங்காயிராமல் நிலைதப்பி இருந்தன. அப்படியிருந்தும் நீ நீதியான தருமங்களையேகைக்கொண்டொழுதும் மேலான உத்தமனானதால் இருளைப்போக்குகின்ற சூரியனைப்போல் அப்பகைகளை மதியாது வாழ்ந்திருந்தாய். (எ-ம்) (௯௧)

தருமமே தனித்த ஞான்று தக்கதோர் துணைய தாகுந்
தருமமே பொருள்க ளுனுந் தந்திடும் வருண நாலுந்
தருமமெய் யாகச் செய்யுஞ் சமயமா றுடனே மற்றுந்
தருமமே காக்கும வேந்தா தடமுடி யிடறுந் தாளாய்.

(இ-ள்) பகையரசர் கிரீடங்களைத்தாக்கும் காலையுடைய அரசனே! தருமமே தனித்தகாலத்தில் ஒப்பற்றதுணையாகும். தருமம் ஒன்றே புருடார்த்தங்கள் நான்கினையும் கொடுக்கும். நீதியான தருமமே நான்கு வருணத்தவர்களுடைய சாதியாசாரங்களையும் நிலைநிறுத்தும். ஆறுசமயங்களையும், மற்றவற்றையும் அழியாது காக்கும். (எ-ம்) (௯௨)

இளமையர் காளை யாஞெ ரெழிலறு விருத்த ரேனும்
வளர்தரு மங்கள் வேண்டு மருவுகண் ணுடி தன்னுள்
விளையுளுந் தருளும் போது மேனிமெய் யன்று காலன்
வளைவது மறியா ரந்தோ மட்டெடுத் திரைக்குந் தாராய்.

(இ-ள்) பூமாலையணிந்த அரசனே! இளமைப்பருவத்தை யுடையவனு யிருந்தாலும், காளைப் பருவத்தையுடையவனுயிருந்தாலும், வயோதிகப்பருவத்தை யுடையவனுயிருந்தாலும் மேலும்மேலும் தருமம் வளரச்செய்யவேண்டும். சரீரமோ நிலையற்றது. கண்ணாடியில் உளூர்தருளும் காலத்துக்குள்ளே

இந்தச்சரீரந் தோன்றியழிவது. (இதையுலகத்தாரறியமாட்டார்) யமன் வந்து தம்மை விளைந்துகொள்வதையும் அறியமாட்டார். (எ-ம்) (௧௩)

காமமே முதலா றுருங் கள்ளர்பின் வழியே போவார்
தாமன மெலியா ரந்தோ தருமமே நினையா ரந்தத்
தீமையி லகப்ப டாத திறத்தினர் தருமஞ் செய்வார்
மாமகத் தவியூண் வானோர் வாய்மடுத் திடப்பா லித்தோய்.

(இ-ள்) பெரிய யாகங்களிலுண்டாகிய அவியுணவைத் தேவர்களுக்குக் கொடுத்த அரசனே! காம முதலாகிய ஆறு தீக்குணங்களின் வழியே பின்செல்பவர்கள் பாவச்செய்கைகளுக்கு மனம் அஞ்சமாட்டார்கள். தருமத்தை நினைக்கவே மாட்டார்கள். அந்தத் தீக்குணங்களிலே செல்லாத வல்லவர்கள் தருமஞ்செய்வார்கள். (எ-ம்) (௧௪)

சொற்றிடுந் தருமந் தூலஞ் சூக்கும மெனவி ரண்டாம்
பெற்றிமுன் னுரைத்த செய்கை தன்னினும் பின்னர்க் கூறன்
முற்றிட வேண்டு மேற்றோர் நிரையத்தின் மூட்டுந் தூல
மற்றைய நன்று சோதி மணிமுடி சுமந்து நின்றோய்.

(இ-ள்) பிரகாசம் பொருந்திய இரதனகிரீடத்தையணிந்த அரசனே! தருமமாவது, தூலம், சூக்குமம் என இருவகைப்படும். தூலதருமத்திலும் சூக்குமதருமமே சிறந்ததாகும். தூலதருமம் வாங்குவோரை நரகத்தில வீழ்த்திவிடும் ஆகையால் சூக்குமதருமமே செய்யவேண்டும். (எ-ம்) தூலதருமமாவது புண்ணியத்தை யுத்தேசியாமற் புகழையேயுத்தேசித்துச் செய்யுந்தானம். (௧௫)

தங்கையிற் பொருளில் லோர்கள் செல்வரைத் தண்டித் தேனும்
பொங்கிய தருமந் தன்னைப் புகன்றுசெய் விக்க வேண்டு
மிங்குநம் மனையார் கூற வெய்திடுந் தருமந் தெவ்வைக
கங்குபேய் விருந்துண் டாடிக் களித்திட வகிர்ந்த வேலோய்.

(இ-ள்) கழுகும் பேயும் விருந்தாகவுண்ணப்பகைவரைப் பிளந்தெறியும் வேலேந்திய அரசனே! தருமஞ்செய்வதற்குப் பொருளில்லாதவர்கள் பொருளுடையாரை வருத்தப்படுத்திப்பேசியேனும், தருமத்தின் சூக்ஷமங்களை அவர்களுக்குச் சொல்லித் தருமஞ்செய்யும்படி தூண்டவேண்டும். நம்மைப்போலொத்த முனிவர்கள் சொன்னாற்றான் தருமத்தின் நுட்பந்தெரியும். (எ-ம்) ()

சொற்றது நுட்ப மாகு மிருவருந் தூய நன்மை
பற்றிடுந் தானத் துள்ளே பயன்மிகுங் கன்னி தானங்
குற்றமில் கல்வித் தானங் குலவிய பூமி தானங்
கற்றைபஞ் சடையார்க் குள்ளக் கமலத்தை யுதவுந் தூயோய்.

(இ-ள்) சிவபெருமானுக்கு இருதய கமலத்தைக்கொடுத்த பரிசுத்தனாகிய அரசனே! கொடுப்போனுங் கொள்வோனும் நன்மையடையும் தானங்களுள்ளே கன்னிகாதானம், வித்தியாதானம், பூதானம் ஆகிய இம்மூன்றுஞ் சிறந்ததாகும். (எ-ம்) (கஎ)

சுடரெழு பணியைப் பூட்டித் தோகையைத் தானஞ் செய்தோர்
படருமா சையினா லேற்றோ ரிருவரும் பதுமன் வாழுந்
தடவுல கதிலோர் கற்பந் தங்கிநற் சாதி யாகிப்
புடவியில் வாழ்வ ரென்றும் புகழ்திசை யெழுத வல்லோய்.

(இ-ள்) எட்டுத்திசைகளிலும் புகழை நிலைநிறுத்த வல்லமையுடைய அரசனே! கன்னிகாதானம் செய்தோரும் அதனை யேற்றுக்கொண்டோரும் பிரமலோகத்தில் ஒரு கற்பகாலம் வாழ்ந்திருந்து பூலோகத்திலே உத்தம குலத்தில் வந்து பிறந்து வாழ்வார்கள். (எ-ம்) இதனால் நல்ல குலத்திற் பிறப்பதற்கு உயர்ந்த புண்ணியம் வேண்டுமென்பது கண்டுகொள்க. (கஅ)

கல்வியி னியன்றான் முன்னங் கழறிய தொக்கும் பின்னர்ச்
சொல்விளங் கியபூ தானந் தூயநற் கால நோக்கி
வில்வமா குனித்தோ னன்பர் வேதியர்க் குதவ வேண்டு
மல்வினைக் குதவு திண்டோண் மலையெனப் பொரும நின்றோய்.

(இ-ள்) போர்செய்தற்குப் பூரித்து நிற்கும் புயத்தையுடைய அரசனே! கல்வியைத் தானம் செய்தோரும், அதை யேற்றுக்கொண்டோரும், மேற்சொல்லியபேற்றையே பெறுவார். பூதானம் நல்லகாலம் பார்த்துச் சிவபெருமானிடத்தன்புள்ள பிராமணர்களுக்குக் கொடுக்கவேண்டும். (எ-ம்) (கக)

ஒன்றிய நூற்றுப் பத்தோ டெண்மர்தா ளொருநூற் றெண்மர்
நன்றிசே ரெண்ம ராத னலம்பெறு குடும்பி யாகத்
துன்றுயர் கத்தோ ராற்றுந் தோயமார் பூதா னத்தால்
நன்றிரு கதிர்சூழ் நாளு நற்புகழ் நிற்கும் வேந்தே.

(இ-ள்) அரசனே! ஆயிரத்தெட்டுப்பிராமணர் அல்லது, நூற்றெட்டுப் பிராமணர் அல்லது எட்டுப்பிராமணர்களுக்காவது பூதானங்கொடுக்கவேண் டும். இருகத்தாச்சிரமத்திலுள்ளவர்களாகவும், யாகஞ் செய்தவர்களாகவும் உள்ள பிராமணர்களுக்குப்பூதானங்கொடுத்தால் சூரியசந்திரர்களுள்ள மட்டும் புகழ்நிலைத்து நிற்கும். (எ-ம்) (உ0)

பாந்தண்மீக் கிடந்த ஞாலப் பரப்பினிற் பூமி தானந்
தேர்ந்திடின் மேன்மை யந்தச் செய்விளை நெல்வி லொன்றற்
கோர்ந்திடு தேவ ராண்டி லொவ்வொராண் டேறி யீச
ஞூர்ந்திடுங் கயிலை சேர்வ ரழகினல் மதனை வென்றோய்.

(இ-ள்) அழகினல் மன்மதனைவென்ற அரசனே! ஆதிசேடனல் தாங் கப்பெற்ற உலகத்திலுள்ள தருமங்களிலெல்லாம் பூதானம் மேலானதாகும். தானஞ்செய்யப்பட்ட அந்த நிலத்திலே விளைந்த ஒவ்வொரு நெல்லுக்கு ஒவ் வொரு தேவவருடம் ஏற்றமாகத் தானஞ் செய்தவர் கைலாசத்திலே வாழ்ந் திருப்பார்கள். (எ-ம்) (உக)

என்றிவை நியம்ப ஞாலத் திறையவ னுவகை மேவி
வென்றிசேர் தவக்கோ னுக்கு வேண்டுப கொடுத்துப் போற்றி
நன்றென முனிவர்ப் போக்கி நயந்தசுற் றத்தார் மைந்தர்
தன்றிருக் குறிப்பைச் செய்யுந் தகைமையி னமைச்சர் சூழ.

(இ-ள்) இந்தப்படி பூதானத்தின் மகத்துவத்தைக் கவுதமுனிவர் எடுத் துச்சொல்லச் சிபியரசன் கேட்டு மிக்க சந்தோஷம் அடைந்து கவுதமரை வணங்கி அவருக்கு வேண்டுவனகொடுத்து அனுப்பிவிட்டு மனைவி, மைந்தர் கள், சுற்றத்தார்கள், மந்திரிகள் முதலானவர்கள் சூழ்ந்துவர. (எ-ம்) (உஉ)

வான்கெழு பசும்பொற் காசு வருத்தசா ளிகைகள் மற்றுங்
கூன்களக் கரட்டு வெண்சே ஒட்டகங் கொணர்ந்து போற்றத்
தேன்கிளர் வேத மோதுஞ் செழுந்தவ ராசி கூறக்
கான்கிரி பலவுந் தள்ளக் கனகமா விரத மூர்ந்தான்.

(இ-ள்) பெருமை பொருந்திய பொற்காசுப்பைகளையும், மற்றைப் பொருள்களையும், வளைந்த கழுத்தையும் முரட்டுமுதுகையுமுடைய ஒட்டகை களின் முதுகுகளிலே யேற்றிக்கொண்டு வேதியர் மங்கல ஆசிகூற மலைகளை யும், வனங்களையுங்கடந்து பொன்னாற்செய்த ரதத்தைச் செலுத்தி அரசன் ஊர்ந்தான். (எ-ம்) (உக)

வெண்ணிலாக் கற்றை தூண்ட வெளியசீ றணிந்த மெய்யுங்
கண்ணாகண் டிகைத்தார் பொன்னூல் கலந்துகம் பித்த மார்பும்
பண்ணெழு குதலைச் செவ்வாய்ப் பசுங்கிளி யிருந்த பாகத்
தண்ணலைப் பழிச்சு நாவு மாகிவந் தேருங் காலை.

(இ-ள்) சிபியாசன் ரதத்தைச் செலுத்தி வரும்போது, வெண்மையாகிய சந்திரப்பிரகாசம்போல விபூதியணிந்த மெய்யும், பொன்னோடு கலந்த உருத்திராக்ஷமணிந்த மார்பும், உமாதேவி பாகராகிய சிவபெருமானைத் துதித்துக்கொண்டு வரும் நாவுமாக வருங்காலத்தில், (எ-ம்) (உச)

வேறு.

கங்கைசூழ் கிடந்த காசிவான் புகழுங்
கயைபிர யாகைதண் சோணை
பொங்குநீர்ச் சிந்து வாகினி வேணி
பொலிந்தகோ தாவிரி புனிதந்
தங்குகோ தமைது நருமதை துங்க
பத்திரி தழைதரு குலிங்க
நங்கரு மாற்று நைமிசா ரணியம்
வாநதி சத்தம சங்கம்.

(இ-ள்) கங்காநதி சூழ்ந்த காசி, கயா, பிரயாகை, சோணாநதி, சிந்துவாகினி, கண்ணவேணி, கோதாவிரி, கோதமை, நருமதை, துங்கபத்திரி, குலிங்கம், நைமிசாரணியம், வரநதி, சத்தம சங்கம். (எ-ம்) (உரு)

தரைபுகழ் பார்வ தேச்சுரம் விசாலேச்
சுரம்விம லேசம்விண் முகடு
மருவுபர்ப் பதஞ்சீர் தருகுகா ரணியம்
வருமயி ராபதேச் சரம்வீ
டருளிய பருப்ப தேச்சரம் நீதி
யருடிரி யம்பகங் காஞ்சி
யுரைசெய்கா ளத்தி வேங்கட மோத்து
ரொளிதிக ழருணையங் கிரியே.

(இ-ள்) பார்வதேச்சுரம், விசாலேச்சுரம், விமலேசம், பருப்பதம், குகாரணியம், அயிராபதேச்சுரம், பருப்பதேச்சுரம், திரியம்பகம், காஞ்சி, காளத்தி திருவேங்கடம், திருவோத்தூர், திருவண்ணாமலை. (எ-ம்) (உசு)

சத்தமார் கோதா விரிகொள்காஞ் சியெனத்
தகுவிருத் தாகிரி காழி
மூத்தர்சூழ் தில்லை யெழில்கொள்சாய்க் காடு
மொழிந்தபுள் ளிருக்குவே ளூர்சீர்
தத்துவெண் காடு காவிரி யிருபாற்
சங்கமத் துறைநன்மாந் துறைசேர்
வைத்திடும் பொன்னி யந்துறை மத்தி
யார்ச்சுனஞ் சண்பகா டவியே.

(இ-ள்) கோதாவிரி காஞ்சியெனச் சொல்லத்தக்க விருத்தாசலம், சீகாழி, சிதம்பரம், சாய்க்காடு, புள்ளிருக்குவேளூர், திருவெண்காடு, காவிரி சங்கமத்துறை, திருமாந்துறை, பொன்னியந்துறை, மத்தியார்ச்சுனம், சண்பகவனம். (எ-ம்) (உஎ)

மருவெழு மாரூர் மறைவன மால
வனமொடு மாதவி வனம்பூந்
தருவளர் பஞ்ச நதியுடன் சம்புத்
தகையிரா மேச்சுர மூதூர்
திருவளர் பலவாஞ் சிவதலம் பரவித்
திரைபொரு புனிதநீர் குடைந்தே
யிருநிலம் பழிச்சுங் கூடலெம் பரனை
யேத்தியே நிருதியிற் படர்ந்தான்.

(இ-ள்) திருவாரூர், வேதாரணியம், ஆலங்காடு, மாதவிவனம், திருவையாறு, சம்புகேசுரம், இராமேசுரம் முதலிய புண்ணிய சிவஸ்தலங்களெல்லாஞ் சென்று வணங்கித் தீர்த்தமாடி மதுரைக்கு வந்து சோமசுந்தரக் கடவுளை வணங்கித் துதித்துத் தென்மேற்குத் திசையை நோக்கிவந்தான். (எ-ம்) (உஅ)

கருமுகி றவழ்ந்து வயிறுளைந் தீன்ற
கதிர்மணி யெடுத்தெடுத் தருவி
சொரிதர வோங்குஞ் சுடர்ப்பரங் கிரியைத்
தூய்விழி குளிர்ந்திட நோக்கி
யாகர வெனவாய் மிழற்றமா முடிமே
லங்கையை முகிழ்த்துமே வியகா
லிருசிறைப் பசிய கிளியெடுத் திசைக்கு
மிருக்குரை செவிபுகுந் தனவால்.

(இ-ள்) நீருண்ட மேகங்கள் மழையோடு சொரிகின்ற மணிகளை யெடுத்து அருவிகள் சொரியப் பிரகாசம் பொருந்திய திருப்பரங்கிரியைக் கண்ணு மனமூங்குளிர, உடல் புளகாங்கிதங்கொள்ளக்கண்டு அரகரவென்று இரண்டு கைகளையுந் தலைமேலே குவித்து நிற்கும்போது அம்மலைக்கண்ணே ஒலிகளெடுத்துக் கூறும் வேதமுழக்கங்கள் அரசனுடைய இரு செவிகளிலும் வந்து புகுந்தன. (எ-ம்) (உக)

வேறு.

இத்தகைய பரங்கிரியிற் போந்து வேந்த
னிளநிலவு பொழிந்தமுத மெனவே தாவித்
தத்தலைச் சாரதெறிப்பக குளிர்ந்து பொங்குஞ்
சரவணப்பூந் தடங்குடைந்து தமிழ்போ லூறி
மொய்த்தசுவைச் சத்தியகூ வத்தின் மூழ்கி
மூளைத்தகுளிர்ப் புத்திரகூ வத்தி லாடி
வைத்தபழஞ் சுருதிமனு வுரைத்து வேதர்
வலக்கரத்திற் பசுங்கனக மாரி பெய்து.

(இ-ள்) இப்படிப்பட்ட திருப்பரங்கிரிக்குச் சிபிராசன் வந்து சரவணப் பொய்கையில் ஸ்நாநஞ்செய்து அப்பாற்சென்று தமிழ்போலு மதுரமிகுந்த சத்தியகூவத்தில மூழ்கி, அதன்மேற் புத்திரகூவத்தையடைந்து அதிலே ஸ்நானஞ் செய்து வேதமந்திரங்களை யுச்சரித்து வேதத்திலே வல்ல வேதியர்களுக்குச் சொன்னதானங்கொடுத்து. (எ-ம்) (கூO)

வேறு.

வயின்வயி னுறையு முனிவரைப் பணிந்து
வழுத்துகா லாசிகள் கூற
எயில்விசும் பளக்குஞ் சினகரம் புகுந்தெம
மீசனைக் குமரனைப் போற்றிப்
பயின்மறைக் கோயிற் புறத்துறக் கோடி
மாணவர் பரவுமார்க கண்டன்
கயிலையெம் பரமனென் றிடப் பரவிக
கசிந்துநெக் குருகியே துதித்தான்.

(இ-ள்) திருப்பரங்கிரியில் அங்கங்கே தவஞ்செய்யும் முனிவர்களைப் பணிந்து அவர்கள் ஆசிர்வதிக்கப்பெற்று திருமதில்கள் ஆகாயத்தை யளாவி நிற்குங் கோயிலுட் புகுந்து பரங்கிரி நாதனையும், குமாரகடவுளையும் வணங்

கித் துதித்து வெளியே வந்து, கோடி மாணுக்கர் சூழநின்று துதிக்க வீற் றிருக்கும் மார்க்கண்ட முனிவரைக் கண்டு பரமசிவனெனவே வணங்கி உள் ளுருகித் தோத்திரஞ் செய்தான். (எ-ம்) (கச)

அப்பொழு தரிய மாதவ ராசி
யறைந்திடத் தீர்த்தயாத் திரைசேர்
துப்புறழ் சடில மாதவர் பாதந்
தொழுதபின் மகதிவீ ணையைக்கொள்
செப்பருங் கரமு மொப்பிலாச் செவ்வேள்
சீறடி பழிச்சிய நாவு
மெய்ப்புற மருவு நாரதன் றலத்து
வீறது வேந்தனுக் குரைப்பான்.

(இ-ள்) மார்க்கண்ட முனிவர் ஆசீர்வாதத்தையும், தீர்த்த யாத்திரை யாய் வந்த மற்ற முனிவர்கள் ஆசீர்வாதத்தையும் பெற்று மகத்தாகிய வீணை யைக்கொண்ட கையையும், முருகக்கடவுளைத் துதிக்கும் நாவையுமுடைய நாரதமகாமுனிவரைக் கண்டு வணங்கினான். அவர் அரசனை ஆசீர்வதித்துத் திருப்பரங்கிரியின் மகத்துவத்தைச் சொல்லுவாராயினர். (எ-ம) (கரு)

இமிழ்திரைப் பரவை யுடுத்தஞா லத்தி
லித்தலம் புனிதமா முலகில்
அமைதரு தீர்த்தந் தன்னிலித் தீர்த்த
மதிகமாம் வினையைநற் பொருளைத்
தமையுணர் பெரியோர் கூறிய சிவமே
சத்தியந் தத்துவம் பரமென்
றமைதரு பெயரிற் சத்திய கிரிய
தாமென நாபதி துதிப்பான்.

(இ-ள்) அரசனே! சமுத்திரஞ் சூழ்ந்த உலகத்தில் இந்தத் திருப்பரங் கிரி பரிசுத்தமான ஸ்தலம். தீர்த்தங்களில் சரவணப்பொய்கை அதிகம். பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளின் இயல்புணர்ந்த பெரியோர்கள் சிவமே சத்தியமென்றும், உண்மையென்றும், பரமென்றுங் கூறுவார்கள். சிவமே இந்த மலைவடிவமாயிருத்தலால் இதற்குச் சத்தியகிரியெனவும், பரங்கிரியென வும், பெயரானது என்று நாரதர் சொல்ல, அரசன் தோத்திரஞ் செய்கின் ருன். (எ-ம்) (கசு)

குருதிபொங் கியமுக் குடுமிவேற் கரத்தன்
குலவுமைந் தொழில்களைக் கதிர்முன்
வருசெழுங் கமல மெனநிறைந் தியற்றி
மண்முத லைந்துமோய்ந் திடினும்
விரிதருங் கிரணங் குறைபடா தோங்கி
மேவுமண் டலங்களுக் கப்பாற்
பரவியே நடுவு மடிமுடி படையாப்
பரங்கிரிக் கடவுளே சரணம்

(இ-ள்) இரத்தங் கொப்புளிக்கு மூன்று கவர்களையுடைய சூலாயுதத்தைத் தாங்கியவராய்ப் பஞ்சகிருத்தியங்களைச் சூரியனுக்கு முன் மலர்ந்த தாமரையைப்போல முகமலர்ச்சியோடு செய்து பிருதிவி முதலிய பஞ்சபூதங்களு மழிந்து போனாலும் விரிந்த கிரணங்கள் குறைபடாமலோங்கி வளர்ந்திருக்கும் சூரியமண்டலத்துக்கப்பால் வியாபித்துநிற்கும் ஆதிமத்தியாந்தரகிதராகிய திருப்பரங்கிரியிலெழுந்தருளியிருக்குங் கடவுளே உமக்கு, அடியேன் அடைக்கலமாகப் புகுந்தேன். (எ-ம்) (கூச)

இன்னன துதிகள் நாவினிம் பிடற
வியற்றியே கிரிவலம் புரிந்து
மன்னனோர் காவி லிருந்துதேர்ந் திடுவான்
மருவுகே தாரமே சேதுப்
பொன்னவிர் தலத்திற் புனிதமிப் பதியிற்
பூசுர ரொருவரைப் பதித்தாற்
பன்னுசத் தியலோ கத்தினிற் கோடி
வேதரைப் பதித்ததென் றுணர்ந்தான்.

(இ-ள்) சிபி அரசன் இவ்விதம் துதித்துத் திருப்பரங்கிரியை வலஞ்செய்து, ஒரு பூஞ்சோலையிலிருந்து யோசித்துக் கேதாரம், சேதுஇவைகளைப் பார்க்கிலும் புனிதமாகிய இந்தத்தலத்தில் பிராமண ரொருவரைப்பிரதிட்டை செய்தால் பிரமலோகத்தில் கோடி பிராமணரைப்பிரதிட்டை செய்த பலனுண்டாகுமென்று அறிந்தான். (எ-ம்) (கூரு)

சுடர்விடு கொடிஞ்சித் தேரினைக் கடவுஞ்
சூதனை நோக்கியே வேந்தன்
நடமிடு திரைவான் கங்கைசூழ் கிடந்த
நலம்பெறு காசியின் மேவிப்

படருமைஞ் ஞூறு வேதரைத் தெரிந்து
பணிந்துநீ யிப்பதித் தகைமை
மடமற வோதி யழைத்துமான் றேரில
வைத்திவண் கொடுவரு கென்றான்.

(இ-ள்) அரசன் தன் தேர்ச்சாரதியைப்பார்த்து நீ கங்காநதிசூழ்ந்த காசி க்ஷேத்திரத்திற்குப்போய் ஐந்நூறு வேதப்பிராமணர்களைத் தெரிந்தெடுத்துத் திருப்பரங்கிரியின் பெருமைகளை அவர்களுக்கு எடுத்துச்சொல்லி அவர்களை வணங்கி அழைத்து ரதத்தில ஏற்றிக்கொண்டு வாவென்று கட்டளையிட்டான். (எ-ம்) (௬௬)

அன்னவன் போகி மீண்டிடு முன்ன
மமரர்கம் மியனைநன் யழைத்துப்
பொன்னெழு பதியிற் சகத்திரப பாதி
பூசார மாளிகை யகரந்
தன்னைநீ புரிதி யென்னவே யவனுந்
தக்கதோர் சுபதினம பார்த்து
மன்னுநாற் படியி ரெட்டென வழிசேர்
மாளிகை பலவிதஞ் சமைத்தான்.

(இ-ள்) பிராமணர்களை அழைத்துவரப்போன சாரதி மீண்டுவருமுன் தேவகம்மியனை வரவழைத்துத் தேவருலகம்போல ஐந்நூறு பொன்மாளிகைகளமைக்க உத்தரவு செய்தான். அந்தப்படியே தேவதச்சனும் நல்ல சுப முகூர்த்தத்திலே ஆரம்பித்துச் சிற்பசாஸ்திர விதிப்படி பதினறு வாயில்களையுடைய பலவிதமான மாளிகைகளை உண்டாக்கினான். (எ-ம்) (௬௭)

வண்டெழுங் கமலை மகிழ்மனை வாழ்வு
மாற்றிடா தென்றுமே பொலியக்
கொண்டதோர் கருவி யில்விடத் தேற்றிக
கோனெழுந் துலவிய காலை
வெண்டிசை புகழுந் தேரினைக் கண்டா
னிழிந்தவைஞ் ஞூறுவே தியர்கள்
கொண்டமா மகத்து நீறணி நுதலுங்
குலவிய கண்டிகை மார்பும்.

(இ-ள்) அந்த மாளிகைகளில லக்ஷ்மி எப்போதும் நிலையாக வசிக்கும்படி மந்திரயந்திரங்களையு மமைக்கச்சொல்லி, அரசனவன் மாளிகைகளைப்

பார்த்துக்கொண்டிருக்குஞ் சமயத்தில் எட்டுத்திசையுந் துதிக்கும் இரதம் வருவதைக் கண்டான். அதன்மேல் அத்தேரினின்றிறங்கிய ஐந்நூறு பிராமணர் யாகத்திலுண்டான விபூதி அணிந்த நெற்றியையும், உருத்திராக்ஷமாலை அணிந்த மார்பையுமுடையவராய்த் தோன்றக்கண்டான். (எ-ம்) (௬அ)

இன்னண மருவுஞ் சோதிமெய் யினரை
யெதிர்கொடு வந்தனை புரிந்து
மன்னவ னிருகண் குளிர்ந்திட நோக்கி
மணிமுடி துளக்கிநீர் மருவ
முன்னரே யிழைத்த தவமென மறையோர்
முகமலர்ந் தாசிகூ றிடவே
யன்னவ ரொடுவா னளவிட வோங்கி
யழகெழுஞ் சினகரம் புக்கான்.

(இ-ள்) இந்தப் பிரகாரம் வந்து சேர்ந்த பிரகாசமான வடிவத்தை யுடைய ஐந்நூறு பிராமணர்களையும் அரசன் எதிர்கொண்டு பணிந்து கண் களிகூரப் பார்த்துத் தலையசைத்து, நீங்கள் இங்கு வந்துசேர அடியேன் முன் ஜென்மத்தில் செய்த தவப்பயனென்று சொல்ல, அப்பிராமணர்கள் மகிழ்ந்து, அரசனை ஆசீர்வதித்தார்கள். அரசனும் அவர்களை அழைத்துக்கொண்டு கோயிலினுள்ளே புகுந்தான். (எ-ம்) (௬௯)

புக்கமன் னவனும் வையைநீர் பரந்து
புகுசதுர் வேதமங் கலமா
மிக்கநன் னிலத்திற் பாதிகோ யிலுக்கு
விளம்பிய பாதிவே தருக்கு
முக்கணன் குமரன் முன்னர்செய் தான
முயறசியாற் கடவுளின் காட்சி
இக்கணம் வேண்டு மெனமறை யோர்கை
யேறமந் திரப்புனல் பெய்தான்.

(இ-ள்) அதன்மேல் அரசன் முருகக்கடவுள் சந்நிதானத்தின் முன் னின்று வையைநீர் பாய்ந்துபாய்வதும், மிகவும் நல்ல நிலங்களென்று பேர் பெற்றதுமான சதுர்வேதமங்கலம் என்னும் கிராமத்திலே பாதிப்பாகம் கோயி லுக்கும், பாதிப்பாகம் பிராமணர்களுக்குமாக முருகக்கடவுள் சந்நிதானத்தில

செய்யும் தானபலனால் இந்த க்ஷணமே பரமேசுவரனுடைய காட்சி கிடைக்க வேண்டுமென்று பிரார்த்தித்து வேதமந்திரங்களைச் சொல்லிப் பிராமணர்கள் கையில் தாரைவார்த்தான். (எ-ம்) (௪0)

பெய்துபோந் திடுங்காற் படர்வழி யொழுங்கிற்
பிறங்குமோர் வேதியற் காணான்
வெய்துயிர்த் தழுங்கி யம்மவோ முன்னான்
மேவிய கொடுவினைத் தொடக்கோ
எய்துமிப் பிறப்பி லிழைத்ததோ யாதோ
வென்செய்கே னோதுகா ரணமோ
மெய்தரு வார்போல் விரித்தசங் கற்பம்
விழுந்திட விதித்தவா றேயோ.

(இ-ள்) பிராமணர்கள் ஒவ்வொருவராக நீர்வார்த்துக்கொண்டு வருகையில் ஐந்நூறு பேர்களில் ஒருவரைக் காணாதவனாய்ப் பெருமூச்சுவிட்டு வருந்தி நான் முன் ஜென்மத்தில் செய்த தீவினையோ இந்தச் சன்மத்தில் செய்த பாவமோ வேறு யாது காரணமோ என் சங்கற்பங்கெட ஊழ்வினை செய்த விதமோ. (எ-ம்) (௪௧)

ஈங்குறு முனிவோ ரில்லறந் துறந்தோ
ரெழில்பெறு மடவிபுக் கவரென்
றோங்கிய தோளா னைந்துநைந் திரங்கி
யுருகினான் விம்மிநெட் டுயிர்த்தான்
றேங்கிய விழிநீர் மார்பினிற் பொழிந்தான்
றிருமுகம் வாடினான் றேம்பி
யேங்கிநெஞ் சயர்ந்து விழுந்துகண் டுயின்று
ணெழிற்கனாக் கண்டுட னெழுந்தான்.

(இ-ள்) இங்கேயுள்ள முனிவர்கள் துறவிகளும், வானப்பிரத்தர்களுமா யிருக்கிறார்களே யென்று நினைத்துத் தளர்ந்து தளர்ந்து மனங்கரைந்து அழுதான். பொருமிப் பெருமூச்சுவிட்டான். ததும்பிய கண்ணீர் மார்பில வடித்தான். தெய்வத்தன்மை பொருந்திய முகம் வாடினான். ஏக்கமுற்று மனம் சோர்ந்து கீழே விழுந்தான். கொஞ்சம் நித்திரையுற்று நல்ல சொப்பனங்கண்டு உடனே யெழுந்திருந்தான் உயர்ந்த தோளையுடைய அரசன். (எ-ம்) (௪௨)

வரையொழுக் கருவி நான்றெனப் புயத்தில்
வளர்ந்தவுத் தரியவெண் பட்டு
மிருவுரு வெடுத்துத் தக்கன்மா மகத்தி
லிடுக்கண்வந் துற்றிடுங் கதிரோன்
புரையவன் விருளைக் கிழித்தகுண் டலஞ்சேர்
பொலன்கெழு குழையும்வெண் டகட்டிற்
கரியமா மணிபோற் கௌவிய சாந்தங்
கபம்தரிய நீறணி நுதலும்.

(இ-ள்) மலையிலே விழும் அருவிபோல் வெண்பட்டு உத்தரீயமும், தக்கன் யாகத்திற் பெரிய வடிவெடுத்துத் துன்பமுற்ற சூரியப் பிரகாசம் போன்ற மகாகுண்டலங்களணிந்த காதுகளும், வெள்ளித்தகட்டில் நீலமணியைப் பதித்ததுபோல் யாகச்சாந்தும், விபூதியுமணிந்த நெற்றியும் (எ-ம்) (சக)

பணிசெயுங் கூடற பத்திரன் றனக்குப்
பலகையிட் டிடவெடுத் ததுபோ
லணிகொள விக்கும் புத்தக மமைத்த
கவளியை யணைத்தசெங் கரமு
மணிகொள்கண் டிகைத்தார் வைத்தமா முடியு
மதிபொரு வதனமே லெழுந்து
திணியிரு ளொதுக்குங் குழுநகை நிலவுஞ்
சிறந்தருள் சிவன்றனைக் கண்டான்.

(இ-ள்) பாண பத்திரற்குக்கொடுக்கப் பலகையை யெடுத்ததுபோலப் புத்தகக்கட்டைத் தாங்கியகையும், உருத்திராக்ஷ மாலைகளை அணிந்த சிரசும், சந்திரவிம்பம்போன்ற முகத்திலே குறுநகையும் சிறப்புற்று விளங்கப் பிராமண வடிவமாக வரும் சிவபெருமானைச் சிபியரசன் கண்டான். (எ-ம்) (சஉ)

போந்திடுந் தந்தை தாயொடு தனையன்
பொலங்கெழுப் பின்பதம் பெயர்த்துத்
தேன்றுளும் பியசொற் செய்யவாய் மலருந்
திருநுதற் புண்டரக் கீற்று
மேந்துபொற் புரிநூன் மார்பமுங் குளிரை
யெடுத்திரைத் திடுமதி முகமும்
வாய்ந்தழ கொழுகப் பாங்கிரிக குமரன்
வந்ததுங் காவலன் கண்டான்.

(இ-ள்) இப்படிவருகின்ற சிவபெருமானாகிய தந்தையும், உமாதேவியாகிய தாயும், விநாயகராகிய தமையனாரும் அழகுபெற்றுவிளங்க அம்மூவர்களுக்கும் பின்னே நடந்து தேனொழுகும்படியான மதுரமான வார்த்தைகளைச் சொல்லும் நாவும், திரிபுண்டரமணிந்த விபூதிதரித்த நெற்றியும், முப்புரி நூலணிந்த மார்பமும், குளிர்ந்த சந்திரனைப்போன்ற முகமுமாக அழகு பொருந்திய பிராமணக் குழந்தைபோல் முருகக்கடவுள் வந்ததையும் சிபியரசன் பார்த்தான். (எ-ம்) (சரு)

கண்டதி சயித்து விழிகுளிர்ந் திடவே
கடவுளர் பதங்களைப் பரவி
விண்டுமென் மயிரின் முடங்கற நடுக்கி
மின்னென மணிமுடி துளக்கி
மண்டல மிழைக்குந் தவப்பெரும் பேறோ
மதியிலே னாற்றிய தவமோ
துண்டவெண் பிறையை மிலைந்தவ னனைய
ரிங்ஙனந் தோற்றுதற் கென்றான்.

(இ-ள்) அரசன் அதிசயித்துக் கண்குளிரப் பார்த்து வணங்கி மயிர்க்கூச் செறியத் தலையசைத்து உலகம் செய்ததவமோ! அறிவில்லாதவனாகிய நான் செய்ததவமோ! மூன்றாம்பிறைச் சந்திரனையணிந்த சிவபெருமானையொப்பான இந்தப் பிராமணர் இவ்விடத்திலே தோன்றுதற்குக் காரணம் என்று சொன்னான். (எ-ம்) (சசு)

என்றபி னவ்வூ ரெப்பெய ருரைத்தி
யென்றிட வேதனாய் வருவோன்
வென்றிசே ரொன்னார் வல்லுயிர் குதட்டி
விழுங்கிட வாள்வித்தாத தவகே
ளொன்றிய நம்பேர் பரங்கிரிப் பரம
னுலகினிற் பதியெலாந் திரிவோம்
நன்றிசேர் தலத்துப் புனிதமீ தெனவே
நாமுமிங் குறைந்திட வந்தோம்.

(இ-ள்) அரசன் வேதியனைப் பார்த்துச் சுவாமி! நீ ரெந்தவூர்? உம்முடைய திருநாமம் என்ன? சொல்லவேண்டுமென்று கேட்க, வேதியராய்வந்த சிவபெருமான் பகையரசருயிரைக்கொல்லும் வாளாயுதத்தைத் தாங்கிய அரசனே! நம்முடைய பெயர் திருப்பரங்குன்றம், பரமேஸ்வரையர் என்று சொல்லு

வார்கள். சிவதலங்களெல்லாம் யாத்திரையிலேயே சஞ்சரிடபோம். எல்லாத் தலங்களிலும் இது பரிசுத்தமான தலம். ஆகையால் நாமும் இங்கேயே இருக்கவேண்டுமென்று வந்தோம் என்றார். (எ-ம) (௪௭)

எனுமுரை செவியிற் புகுந்திடக் களித்தே
யெழுந்துகாய் சிலியல் வேந்தன்
பனிமலர் தூவித் தூபதீ பத்தாற்
பலவகை முகமனுங் கிழைத்துப்
புனிதநீர் வாங்கி நயபர னுவகை
புரிந்திடக் கடவதென் றுரைத்து
பணைகிழ்ந் திறைவன திருகரத்திற பெய்து
வணங்கியே யிருகைகூப் பினனால.

(இ-ள்) வேதியர் சொல்லைக்கேட்டு அரசன் மனங்களித்து அவருடைய பாதங்களிலே புஷ்பங்களைத் தூவித தூபம் தீபம் முதலிய சோடசோபசாரங்களால் பாதபூசை செய்து, அநேக விதமான உபசார வார்த்தைகள் சொல்லி இது சிவப்பிரீதியாகுகவென்று பூதானமாக அவர் திருக்கரங்களிலே நீர் வார்த்து வணங்கி இரண்டுகரங்களையும் சிரசின்மேல் குவித்தான். (எ-ம்) (௪௮)

அப்பொழு தவனு மாசிகள் கூறி
யணிமதி லுடுத்தமா ளிகையுட்
டுட்புறு கனிவாய்ப் பனைனிய ரொடுபுக்
கிருந்துதொன் மறைவழி நடாத்திப்
பைப்பணி யணிந்தோன் குருபரவேள் கோயிற்
பதிந்தனன் வேதியர் வாழ்ந்தா
ரிப்பதி தனிற்பூ தானமேன் மையிற
லெழில்பெறுஞ் சிபியெனும் வேந்தன்.

(இ-ள்) வணங்கி நின்ற அரசனை வேதியராய சிவபிரான் பார்த்து அநேக ஆசீர்வாதங்கள் சொல்லி மற்றைப் பிராமணர்களுடன் சேர்ந்து தாமும் ஒருவராகத் தமக்குத் தானஞ்செய்த மாளிகையுள்ளே மனைவி மக்களுடன் புகுந்து வேதாத்தியயனஞ் செய்து வீற்றிருந்து முருகக்கடவுள் ஆலயத்திலே யெழுந்தருளியிருந்தார். மற்றைய எல்லாப் பிராமணர்களும் தங்கள் தங்கள் மாளிகையில் புகுந்திருந்தார்கள். திருப்பரங்குன்றத்திற் பூதானஞ் செய்த பலனாலே அழகு பெற்று விளங்கிய சிபி அரசனானவன். (எ-ம்) (௪௯)

மிதிலையிற் பிறந்த கிளியொடும் பச்சை
மேனியான் வழுத்திய சேது
முதலவாம் பதிகள் காண்டக வுற்று
முனைமதிக் கோட்டினை மழுக்குங்
கதிரெயி லுடுத்த காம்பிலி நகரங்
கடிதணைந் தொருகுடை நிழற்கீழ்க்
குதிர்குதிர்த் திடவே புவியையாண் டூழி
கோமுறை புரிந்திடு நாளில்.

(இ-ள்) சீதா தேவியுடனே ஸ்ரீராமபிரான் பூசித்த சேது முதலான சிவதலங்களை யெல்லாம் தரிசித்துக்கொண்டு போய்க் காம்பிலிநகரஞ் சேர்ந்து உலகமெல்லாம் ஒரு குடைக்கீழாகச் செங்கோல்செலுத்தி நீடூழி காலம் மனமகிழ்ச்சியுடன் அரசாட்சி செய்துவந்தான். அப்படி அரசாட்சி செய்து வருங்காலத்தில், (எ-ம்) (௯௦)

கொய்யுளைப் புரவி மகங்களை யாற்றிக்
குலவிய கைலையை யடைந்து
துய்யநீ டூழி வாழ்ந்துநம பாமர்
துணைப்பத மலரினிற் கலந்தான்
வையகம் புகழும் பரங்கிரி யதனின்
மருவியோர் தினமிருந் தோர்கள்
வெய்யவெம் பவத்தைத் துடைப்பரென் றூலவ்
வேந்தன்வீ டடைகுத லரிதோ.

(இ-ள்) அநேக அசுவமேத யாகங்களைச் செய்து கயிலாசத்தை அடைந்து அங்கே நீடூழிகாலம் சாரூப பதவியில் வாழ்ந்து அப்பால் சிவபெருமானுடைய பாதத்தை அடைதலாகிய சாயுச்சிய பதவியடைந்தான். திருப்பரங்கிரியில் ஒருநாள் தங்கினவர்களும் பிறவியை மாற்றி உய்வார்களென்றால் சிபி அரசன் மோக்ஷம் அடைவது அரிதோவென்று சூதமகாமுனிவர் நைமிசாரணிய முனிவர்களுக்குத் திருவாய் மலர்ந்தருளினர். (எ-ம்) (௯௧)

நான்காவது சிபிவேந்தன் புதானச்சருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் ௪ க்குச் செய்யுள் ௨௪௪.

ஐந்தாவது

# பிரமகூவச் சருக்கம்.

——(-o-)——

நூலெலா மளக்கரை யளந்துமகிழ் சூதமுனி
நுண்பொரு ளுணர்ந்த தகைமைக
கேலவளர் சவுனக முனிக்குரை கிளத்தியிடு
மெய்தியத வக்குரிசில் கேள்
காலனுரு ளும்படி சிவந்தபத புண்டரிகர்
கந்தருறை சத்தி யகிரிக்
கோவிடுக தைகருள் வினை வகைகொடிய வல்வினை
யுடைத்தகதை சொற்று துமரோ.

(இ-ள்) எல்லா நூற்கடல்களையுமளந்து அதன் நுட்பங்களை யெல்லாம் அறிந்த சூதமகாமுனிவர் தாம் சொல்லும பொருள்களைக் கேட்டுணருந் தகுதியையுடைய சௌனகாதி முனிவர்களைப்பார்த்து யமனை யுதைத்துச் சிவந்த பாதத்தையுடைய சிவபிரானும், முருககடவுளும் வசிக்கும் சத்தியகிரி யாகிய திருப்பரங்கிரியின் சரித்திரங்களுள்ளே கேட்டவர்களுடைய கொடிய வினைகளைப்போக்கிய ஒருகதை சொல்லுவோம். கேளுங்களென்று சொல்லு கின்றார். (எ-ம்) (க)

பண்டெழு திருச்சுருதி யனபொருள வழாதுதொழில்
பற்றிய வறம்பு ரிகுவோன்
மண்டல மெடுத்துரை பழிச்சமனை வாழ்வினில்
வதிந்திரு ளொழுக்க மிகழான்
எண்டகைய வீன்றவர்த மைக்களி துளங்கிட
வியற்றியடி மைசெயல் கொள்வான்
றெண்டிரை குதித்தலைவு கோதமி பெருங்கரை
சிறந்திட வுறைந்து வளர்வோன.

(இ-ள்) கோதமிநதிதீரத்திலே சிறப்புறவாழுவோனாகிய ஒரு பிராமணன் வேதவொழுக்கந்தவறாது தருமஞ்செய்பவனாகி உலகமெல்லாம் புகழ்ந்து பேசும்படி இல்லறத்திலிருந்து மாதா பிதா மகிழ்ச்சியடைய அவர்களுக்கேவல் செய்து வருவான். (எ-ம்) (உ)

கடனல்விளை யுந்திரை நிறைத்துவரு குண்டகழி
கொண்டதோர் வளாக மதின்மேற்
றானல மிழைத்துவளர் காலவனெ னும்பெயர்
சுமந்தவ னிடத்தொருதொல் லோன்
வானவ ருளஞ்சிறி துளுக்கவுயர் மாதவம்
வருத்த தேவத் துதிவரத்
தேனுள மதுச்சிதறு மாமலர் சொரிந்தடி
சிரங்கொள வணங்கி யறைவான்.

(இ-ள்) சமுத்திரஞ்சூழ்ந்த பூமியில் பரிசுத்தமான ஒழுக்கமுடைய காலவனெனனும் மேற்கூறிய பிராமணனிடத்தில் தேவர்கள் மனஞ்சுருங்கப் பெரிய தவத்தைச்செய்த தேவத்துதியென்னும் முனிவர் வந்தார். அவரைக் காலவன் எதிர்சென்று வணங்கி வண்டுகள் மொய்க்குந் தேனிறைந்த மலர் களைத்தூவிப் பாதபூசைசெய்து சொல்லுகின்றான். (எ-ம்) (௬)

இல்லறம் விளைத்தபய னிங்குவர வெந்தையினி
யின்றென தகத்துண வெனுஞ்
சொல்லறைய வன்னவனு நன்றென விருந்துசுவை
துய்த்தவ னிருந்து மகிழ்காற்
பல்லவகை யாமொழி யுரைத்ததி சயமபெருகு
பாரிலெழு நீரு ளதில்வி
டொல்லையுத வுமபுனித நீர்முழுகி யெங்கணு
முலாவுதே வத்துதி சொல்வான்.

(இ-ள்) அடியேன் இல்லறம் விளைத்த பயனாகத் தேவரீரிங்கெழுந் தருளப் பெற்றேன். சுவாமிகளின்றையத்தினம் என்வீட்டில் போசனம் செய்தருளவேண்டுமென்று துதிக்க, முனிவர் இசைந்து பூசை போசனஞ் செய்து பலவகையாகப் பேசிக்கொண்டிருக்கையில், உலகத்தில் எளிதிலே மோக்ஷத்தைத் தரத்தக்க பரிசுத்தமானதீர்த்தங்களிலெல்லாம் ஸ்நானம்செய்து வந்த தேவத்துதி முனிவர் காலவனைப் பார்த்துச் சொல்லுகின்றார்.(எ-ம்) (௭)

பால்வெளிய நீறுதவழ் நெற்றிபெறு காலவ
படர்ந்துதிசை யெங்கணு முலாய்ச்
சீலமெழு நீர்பல குடைந்துள மிகப்புனித
தீர்த்தமிசை யக்கழறு வோம்

கோலுகே தாரகிரி யிற்குளிர் துளும்பியெழில்
கொண்டுலவு புட்கா முடன்
சாலவுத வும்புனித காசிமணி கர்ணிகை
தடங்கொள்பிர யாகை யதனில்.

(இ-ள்) பால்போலும் வெண்மை பொருந்திய விபூதியை அணிந்த நெற்றியையுடைய காலவனே! நாம் எல்லாத திசைகளிலும் யாத்திரைசெய்து அநேக புண்ணிய தீர்த்தங்களில ஸ்நானஞ்செய்திருக்கிறோம். மிகவும் பரிசுத்த மாகிய தீர்த்தங்களைச் சொல்லுகிறோம். கேதாரமலையில் புட்காதீர்த்தம், காசியில் மணிகர்ணிகை, பிரயாகை. அதன்பக்கத்தில் (எ-ம்) (ரு)

வேறு.

சேணுதவக் கொடுவினைவேர் தடிநத வேணித்
தீர்த்தமதன பாங்கருள தீர்த்தம் வீடு
காணவனைற் குதவுவனனி தீர்த்தம் பூத்த
கமலமலர் துன்றுசதகா ரணியத் தாதி
மாணெழிலசோ குளிர்கிடக்கும் பிரம தீர்த்தம்
வளரால வனங்குகாச் சிரமங் காஞ்சி
நாணுலவும் வேகவதி வளையின் சோதி
நகுமாளவியத்திரவி நாம தீர்த்தம்.

(இ-ள்) வினையை வேரறக்களைந்த மேலான பதவியைத் தரத்தக்க கண்ணவேணி, அதன் பக்கத்திலுள்ள மற்றைத தீர்த்தம், வன்னிதீர்த்தம், சத்தாரணியத்துள்ள பிரம தீர்த்தம்,ஆலவனகாம, குகாச்சிரமம, காஞ்சியிலுள்ள தீர்த்தங்கள், வேகவதி தீர்த்தம், சங்குகள் பிரகாசிக்கும் மாளவியத்திரவி தீர்த்தம். (எ-ம்) (சு)

பைம்பொனெழுங் கனகசபை விளங்குந் தில்லைப்
பதியிலெழுஞ் சிவகங்கை பகர்வெண் காட்டிற்
குபதிவிர்த் தருள்காயத் திரிநீள் சோலைக்
குளிர்சாயா வனங்குலவு சாயா தீர்த்தஞ்
செம்பதுமம் வதிந்தவிடை மருதில் வானோர்
சிரந்துளக்கு முத்தீர்த்தஞ் சென்னி யான்றோய்
வம்பவிழும் பொழிற்குடந்தை யெதிர்ந்த பொன்னி
வளர்கன்னி காதீர்த்த மதியோய் கேட்டி.

(இ-ள்) பசிய பொன்னாலாய கனகசபை விளங்குஞ் சிதம்பரத்தில் சிவகங்கை, திருவெண்காட்டில் காயத்திரி தீர்த்தம், சாயாவனத்தில் சாயா தீர்த்தம், திருவிடை மருதூரில் முத்திதீர்த்தம், கும்பகோணத்தில் காவிரி, கன்னிகா தீர்த்தம். (எ-ம்) (௭)

கூனெயிற்று வாயரக்க னுயிரை மென்று
குதட்டிவிழுங் கியகணைக்கைக் குரிசி றாண்டுந்
தூனலஞ்சேர் தனுக்கோடி யுடனே சேதுத்
துலங்குமிலக் குவதீர்த்தஞ் சுடிகைப் பாந்தள்
கானுலவுஞ் சேக்கைஎனக் கிடந்தோர் சீர்த்தி
கனிந்துவள ரனந்தபுரங் கானுந் தோறும்
பூனலமே வியதருமர் தழுவுந் தூய
பொருனையலை மணிசிதறும பாவ நாசம்.

(இ-ள்) வக்கிரதந்தங்களேயுடைய இராவணனுயிரை மென்று அதக்கி விழுங்கிய ராம பாணத்தைக் கையிலேயுடைய ஸ்ரீராமனாலே உண்டுபண்ணப் பட்ட சேதுவில் தனுக்கோடி தீர்த்தம், லக்ஷ்மண தீர்த்தம், அனந்தபுரம் என்னும் அனந்த சயனம். (பொதிகைமலைப் பக்கத்தில்) தாமிரபருணி, பாவநாசம். (எ-ம்) (அ)

இதன்புடையிற் கிடந்தரற்று மத்தி தீர்த்த
மெழிற்சோளந் தனிற்பாண்டு தீர்த்த மியானை
மதம்பெருகி யளறுசெய்ய மறுகு தோறும்
வரிநெடுங்கண் மடந்தையர்கள் மகிழ்நா தோளிற்
பதஞ்சிவக்க வைகியப்பாற் படருங் கூடற்
பதிவளையக் கிடந்திரைத்துப் பாரைக் கீண்டு
முதிர்ந்தசுவைத் தமிழ்தெரிந்து குடக்க மேறி
முத்தெடுத்துச் சிதறுதிரை முழங்கும் வையை

(இ-ள்) அதன்பக்கத்தில் அத்திதீர்த்தம், (அதையடுத்த)சோள நாட்டில் பாண்டு தீர்த்தம், யானைகளின் மதநீர்ப்பெருக்கமானது வீதிகளில் சேற்றை உண்டாக்க, மாதர்கள் தங்கள் கணவர் தோள்களிலேறி அப்பாற்செல்லும், மதுரையைச் சூழ்ந்து தமிழ்ச்சுவை தெரிந்து மேற்கேயேறி நடந்த வையை தீர்த்தம். (எ-ம்) (௯)

வேறு.

இப்பதிக்கு நிருதிதிக்காய்ப் பாதியோ சனைமருவி
யிலங்கும் தான
மைப்புனல்கண் டுயில்சோதி யச்சுமந்த வனமதனுண்
மருவு பொன்னூற்
றுப்பனைய திருமேனி தடித்துருண்ட செக்கரெனத்
துலங்குஞ் செவ்வேள்
செப்பருமா றெனுந்தலத்துண் முதற்பதியாய்ப் பரங்கிரியின்
சிலமபுண் டாமால்.

(இ-ள்) அந்த மதுரைக்குத் தென்மேற்குத் திசையிலே அரையோசனை தூரத்திலே மேகங்கள் நித்திரைசெய்யும் அந்தச் * சுமந்தவனத்திலே செவ்வானம்போல விளங்கும் முருகக்கடவுள் எழுந்தருளியிருக்கும் ஆறுதலங்களில் முதலாவது தலமாகிய திருப்பரங்குன்றமென்னு மலையிருக்கிறது. (எ-ம்) (கo)

விண்ணவர்மா தவர்குடையும் பரங்கிரிக்கு வடபாலாய்
மேவுந் தீர்த்தந்
தண்ணெழுசத் தியகூவம பனியினுமெல லியகூவந்
தனக்குக் கீழ்பா
னண்ணியபூ வின்மெலிய கூவமதன் கிழக்கதாய்
நவின்ற மும்மை
யெண்மருவு வயித்தியசா ரக்கூவ மெனபதுவிண்
ணெழுந்த திங்கள்.

(இ-ள்) அதற்கு வடபக்கத்திலே தேவர்களும், முனிவர்களும் வந்து ஸ்நானஞ் செய்யும் சத்திய தீர்த்தம், பனியினுமெல்லிய தீர்த்தம், அதற்குக் கீழ்பக்கத்திலே பூவின மெல்லியதீர்த்தம், அதற்குக் கீழ்பக்கத்தில் மேலே சொல்லிய மூன்று தீர்த்தங்களையும் அடுத்த வயித்தியசாரக் கூவதீர்த்தம். இது சந்திரனைவன். (எ-ம்) (கக)

நைந்துருகுஞ் சயரோகமை யகற்றியதிந் நன்னீரை
நண்ணி யாடி
ஞெந்தெழுந்த பிணியகற்ற வயித்தியதீர்த் தப்பெயரா
லுவன்ற தாகு

* சுமந்தவன மென்பது திருப்பரங்கிரித்தலத்தி னொருபெயர்.

மந்தணொழுஞ் சரவணப்பூம் பொய்கைகண்டோர் பிணிபாவ
மடக்கு நீர்தோய்ந்
தெந்தைதனைப் பரங்கிரிவே லனைக்கண்டு மூன்றுவைக
லிருந்த நாளில்.

(இ-ள்) மிகவும் வருந்தும் கூபரோகத்தை மாற்றியது. அதில் ஸ்நானஞ் செய்தவர்களின் நோயை நீக்குந் தன்மையையுடையது. ஆதலால் அத்தீர்த்த மானது வயித்தியசாரக் கூவமென்னும் பெயர் பெற்றது. (இனி) தன்னைக் கண்டவர் நோயையும், பாவத்தையும் போக்குஞ் சிறப்புவாய்ந்த சரவணப் பொய்கை யொன்றுண்டு. அந்த தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து மூன்று நாள் பரங்குன்றீசரையுங் குமாரக்கடவுளையுந் தரிசித்து அங்கேயிருந்தேன். அப்படியிருக்குங்காலத்தில். (எ-ம்) (கஉ)

தென்னவர்தங் குலத்துதித்த கோவிதா ரத்துவசன்
சேனை னாவுங
கன்னிமெயில புடையுடுத்த விசாலைநகர் வைகிடுவோன்
கடலவ ளாகத்
தின்னல்வளர் குறும்பெறிந்து பைங்குருதி கொப்புளிக்கு
மெஃகவேலோன்
பின்னுதிரைக் கடற்பூமி குளிர்தூங்க வொருகுடைக்கீழ்ப்
பிறங்க வைத்தோன்.

(இ-ள்) விசாலை நகரத்திலே பாண்டியன் குலத்திலே பிறந்த கோவி தாரத்துவசனென்னும் அரசன் பகைவர்களை யெல்லாம் வென்று, உலகமுழு தும் சந்தோஷிக்க ஒரு குடைநிழற்கீழ் வைத்து அரசாட்சி செய்து வந்தான். (எ-ம்) (கங)

இன்னவாண் டகைக்குரிசில் கோயில்கடைப் புறத்திலெடுத்
தெடுத்துத் தூற்றும்
பொன்னிவருஞ் சோதியொடு வெண்டவளச் சோதிபோற்
பூகி பூத்து
மின்னியெழுங் கண்டிகையாங் கொத்தெழுந்த திருமார்பு
விளங்கப் பூண்டு
துன்னுமியல் மாணவரோ டகத்தியமா முனியெதிரே
தோற்றுங் காலை.

(இ-ள்) இத்தன்மையுடைய அரசனது அரண்மனை வாசலில் விபூதி ருத்திராக்ஷ முதலிய சிவசின்னங்களைப் பூண்டு அநேக மாணாக்கர்கள் சூழ அகத்தியமகாமுனிவர் வந்து அரசனுக்கெதிரே தோற்றுங்காலத்தில், (எ-ம்)

போர்வேட்டு மெத்தமெத்த வீங்கியெழும் புயநிருபன்
பொலிந்த பீடஞ்
சீர்வேட்ட செல்வத்தால் விழிபுதைக்கப் பட்டனையான்
றிருப்பா தத்திற்
கார்வேட்ட செங்கைகொடு மலர்தூவான் பழிச்சியிடான்
கையுங் கூப்பான்
பார்வேட்ட புயன்வாளா வைகினனென் றருண் முனிவன்
பார்த்த பின்னர்.

(இ-ள்) யுத்தத்தை விரும்பி மிகவும் பூரிக்கின்ற புயங்களையுடைய அரசன் செல்வச் செருக்கினால அவரை எதிர் சென்று எற்காமலும், புட்பங்கள் தூவி வணங்காமலும், கைகூப்பாமலும் குருடன்போலிருந்தான். அப்படி அவனிருந்ததை அருள்வடிவத்தையுடைய அகத்திய முனிவர் பார்த்து, அதன் மேல், (எ-ம்) (கரு)

முன்னொருநா ளிந்திரனை விடந்தூவு முள்ளெயிறு
முளைக்குப் பாந்த
ளென்னவுரு வமபெறுதி யெனச்சபித்த திருவாயா
லெழில்மா ணாக்கர்
தன்னிடவே முன்படரும பிரமிட்டன் றனையழைத்துத்
துரிசு பூத்த
வன்னவனு ளகந்தைகெடக் குட்டநோய் பெறச்சபியென்
றறைந்து போனான்.

(இ-ள்) முன்னொரு காலத்திலே இந்திரனாய் வரும நகுடனென்னும் ஒருவனைப் பாம்பாகும்படி சபித்த திருவாக்கினால், தம்முடைய மாணாக்கர்களுக்குள்ளே முந்திச்செல்லும் பிரமிட்ட முனிவரை யழைத்து அரசனகங்காரங் கெடும்படி அவனுக்குக் குட்டநோயுண்டாகச் சாபங்கொடு வென்று கட்டளையிட்டுப் போயினர். (எ-ம்) (கசு)

இருசெவியிற் புத்தமுதம பொலிந்ததென யாவோரு
மிருக்க மாந்தி
யருள்சுரந்த குருவுரையை வழாதியற்ற வேண்டுமென
வகத்து ளாடி

வருதியொரு பொய்வாழ்வை மதித்திருந்த வகந்தைபெறு
மன்ன கேட்டி
திருவழகு கெடக்குட்டங் கோடியெனச் சபித்திட்டான்
சிறந்த தூயோன்.

(இ-ள்) பிரமிட்ட முனிவர் மாணவர்களெல்லாமிருக்கத் தன்னை யொரு பொருளாக நினைத்துக் கட்டளையிட்டனரென்று குருவாக்கை அமுதமாக இரண்டு காதுகளாலுமுண்டு அரசனைப் பார்த்து, மாயவாழ்வை மதித்திருந்த உன் அழகு கெடும்படி குட்டநோய் அடையக்கடவாய் என்று சபித்தனர். (எ-ம்) (கஎ)

அக்கணத்தின் மேனியெல்லாங் குட்டநோய் வளைந்திடவே
யந்த ணாளர்
சுக்கிலவெண் ணீறணிந்த மெய்யெதிர்ககச் சாரூபந்
தோன்றல் போலு
மிக்கரசன் வரமபெற்றே யெந்நாளுங் கஞ்சுகமாம்
வெண்பட் டாகும்
புக்கதிரு மாமிவிழி பெற்றவற்கு மாமிவிழி
பொதித்தன் மானும்.

(இ-ள்) அக்கணமே அரசனைக் குட்டநோய் வந்துபீடித்தது. அது எப்படியிருந்ததென்றால் முனிவர்கள் விபூதியணிந்த மெய்யை யெதிர்ந்ததனால் வந்த அவர்களுடைய சாரூபத்தைப் போலவும், அரசன் எக்காலத்தும் மேற்சட்டையாக அணிந்துகொள்ள வரத்தாற்பெற்ற வெண்பட்டைப் போலவும், மாமியார் கண்ணுக்கு எதிர்ப்பட்ட மருமகனுக்கு நாணி அம்மாமியார் கண்ணை மூடிக்கொண்டதுபோலும் இருந்தது. (எ-ம்) (கஅ)

கைக்கொடையாற் சூன்மேகம் வெருண்டதென வெண்கார்போற்
காட்டல் போலுந்
திக்குலவுந் திருமேனி வற்புறுத்தத் திருமேனி
சேர்தல் போலு
மைக்கருங்கண் மணிமூரல் மாதர்மயல் கொண்டிடவே
வருவோன் மேனி
புக்கதொரு வெளியகுட்ட மெங்குமெழுந் ததுபார்த்துப்
புகல்வ தானும்.

(இ-ள்) இன்னும் எப்படியிருந்ததென்றால் அரசன்கொடையைப் பார்த்துச், சூல்கொண்ட கரிய மேகம் பயந்து உடல் வெளுத்துப் போனதுபோலவும், திசையெல்லாம்பார்த்துதிரியுந் தன்னுடைய சிறந்தவடிவம் அத்திசையெல்லாம் புகழால் வியாபித்த அரசனுடைய சிறந்த சரீரத்தை அதகொடையைக் கற்பிக்கும்படி வற்புறுத்திக் கேட்க வளைந்துகொண்டதுபோலவுமிருந்தது. அதன்மேல் மாதர்கள் பார்த்து மயலகொள்ளும் அழகு பொருந்திய அரசன் தன்னுடைய மேனியெல்லாம் வெண்குட்ட முண்டானதைப் பார்த்துச் சொல்லுகின்றான். (எ-ம்) (கக)

என்னேயென் னேயிதுநோய் கொள்வதற்கோ வுடலெடுத்தே
னிளமைச் சோதிப்
பொன்னேரு முடலழகு போயதுமெங் கோமற்றைப்
புடவி வேந்தர்
சொன்னேரப் பழிமொழிகள் கூறுவரோ நகையரும்பித்
தொண்டை வாயார்
கொன்னேரும் வாள்விழியின் பார்வைவெறுத் தேயிகழ்ச்சி
கொண்டி டாரோ.

(இ-ள்) இது என்ன ஆச்சரியம்! ஆச்சரியம்!! இந்த வெண்குட்டம் பெறுவதற்கோ சரீரமெடுத்தேன். என்னுடைய சரீத்தினழகு எங்கே போனதோ. மற்ற அரசர்கள் பார்த்து வசைச்சொற்கள் சொல்லுவார்களே. என்னைப் பார்த்த இளம்பருவப் பெண்கள் வெறுத்து இகழ்ச்சி செய்வார்களே. (எ-ம்) (உ0)

உயிரிருந்து மிறந்தவன்போ லாயினேன் மன்னரெல்லா
முவந்து நிற்கச்
செயிரறுபொற் பீடிகைமே லிருந்திடுகோ நாளுந்து
திரிகோ வந்தோ
எயிலுடுத்த விசாலைபுரி யினிதாள வொருமகவு
மில்லையே யென்று
வெயில்விடுமா மணிக்கலன்சேர் மார்புருளக கண்பனித்து
வேந்தன் பின்னர்.

(இ-ள்) உயிரிருந்தும் இறந்தவனே யானேன். இனி எவ்வாறு அரசர்களெல்லாம் கைகுவித்து நிற்க, ரத்ன சிம்மாசனத்தில் வீற்றிருப்பேன். அரசாள்வதற்குச் சந்ததியுமில்லையே யென்று மார்பு நிறையக் கண்ணீர் சொரிந்து நின்றான். பிற்பாடு அரசன், (எ-ம்) (உக)

திரையதிருங் கடலேழு முழுந்தமிழுந் துளியாக்கிச்
செவ்வாய்க் கிட்ட
குரவனைச்சேர் மாணவனும் பிரமிட்ட முனியிரக்கங்
கொணரக் கூறி
யிருபதத்தைப் பிடித்தழுது நைந்துநைந்து நொந்திரங்கு
மெல்லை யந்த
வரமுனிவ னருள்சுரந்து மனமிரங்கிப் பொறைமருவி
வாய்மை கூறும்.

(இ-ள்) அலைகள் சப்திக்காநின்ற வேழு கடல்களையும் உழுந்தளவு துளி யாக்கி ஆசமித்த அகத்திய மகாமுனிவருடைய மாணாக்கராகிய பிரமிட்ட முனிவர் உள்ளத்திலே இரக்கம் வரும்படி துதித்து அவருடைய இரண்டு பாதங்களையும் பிடித்துக்கொண்டு அழுது தளர்ந்து தளர்ந்து வருந்திய காலத் தில் அந்தப் பிரமிட்ட முனிவர் கருணைகூர்ந்து மனமிரங்கிப் பொறுமை யடைந்து சொல்லுவார். (எ-ம்) (உஉ)

கீதவண்டு கிண்டியதார்க் கோவிதா ரத்தரச
கேட்டி யாலுன்
மீதுவெகுண் டிடுகோபந் தணிந்தகினி யுனதுகுட்ட
வினைக டரக்
கோதகன்ற புவியோம்பி யரசுரிமை செயநாமே
கூறு முண்மை
நீதிறங்கொண் டிருசெவியிற் புகட்டுதியென் றருண்முனிவ
னிசழ்த்த லானல்.

(இ-ள்) பூமாலையணிந்த கோவிதார நகரத்துக்கு அரசனே! உன்மீது கொண்டிருந்த கோபந்தணிந்தது. இனி உன் குட்டநோய் நீங்கி முன்போ லரசாட்சி செய்யவேண்டுமானால் நாம் சொல்லும் உண்மையைக் கைக்கொள் ளென்று சொல்லுவார். (எ-ம்) (உ௩)

வேறு.

கூன்கிடக்கு முதுகுடைய மதியை வேய்ந்தோன்
கூடலுக்கு நிருதிதிசை கொண்டு நீடுந்
தேன்கிடக்குஞ் சோலைவளர் பரமர் வெற்புத்
திகழ்மறையோர் பூதானஞ் சிபிக்கோன் கண்ட

வான்கிடக்கும் கம்பியனூர் வகுத்த வீதி
மாதான புரம்பரம வரைக்கு வாயுத்
தான்கிடக்குந் திசையில்நா னூறாகத்
தரைகிடக்கு மெல்லையயன் றந்த தீர்த்தம்.

(இ-ள்) வளைந்த மூன்றாம்பிறைச் சந்திரனையணிந்த சோமசுந்தரக் கடவுளெழுந்தருளியிருக்கும் மதுரை நகரத்திற்குத் தென்மேற்குத் திசையில் சோலைகள் சூழ்ந்த திருப்பரங்கிரியானது சிபிவேந்தன் பூதானஞ்செய்யத் தேவதச்சனாலே செய்யப்பட்ட வீதிகளையுடைய மாதானபுரமாம். அந்த மேலான மலைக்கு வாயுதிசையிலே நானூறு விற்கிடை தூரத்திலே ஒருதீர்த்த மிருக்கிறது. அதன்பெயர் பிரம கூவம். (எ-ம்) (உ௭)

வெண்டவளச் சோதிபெறும் பெருநோய் தீர
விதிவகுத்த தொக்குமதி விளையுந் தொன்னூல்
கொண்டெடுத்துக் கூறுவது மாகுஞ் சிந்தை
குழைந்துவந்து நீராடும் பிரம கூவம்
வண்டடைந்து குமுறுமிதழ் வெளிய கஞ்ச
மாளிகையாண் மணம்புரிய மலரோன் செய்த
வொண்டகையாற் கலியாண கூவ மென்று
முரைப்பர்திசை புதைத்தபுலா லுலவும் வேலோய்.

(இ-ள்) வேலாயுதத்தை யேந்திய அரசனே! வெண்குட்டநோய் தீர்ப்பதற்காகப் பிரமதேவராலே உண்டுபண்ணப்பட்டதுபோலும். அதுவல்லாமல் அறிவு விருத்தியாகின்ற பழைய நூல்களிலே சொல்லப்பட்டதும் ஆகிய பிரம கூவ தீர்த்தமானது பிரமதேவர் அதில் மூழ்கிச் சரசுவதியை மணஞ்செய்ததினாலே கல்யாண கூவமென்றும் பெயர்பெறும். (எ-ம்) (உ௮)

வேறு.

முளரியான் றிருமண முயல வெய்தியே
களிபெறு பரங்கிரிக் கற்ப கப்பெயர்
விளைகொளைங் கரன்றனை வேத மந்திரத்
தளியுழு மலர்பொழிந் தருள்பெற் றனனரே.

(இ-ள்) தாமரை மலரிலிருக்கும் பிரமதேவன் தனக்குக் கல்யாணஞ் செய்ய நினைத்துத் திருப்பரங்கிரியிலே கற்பக விநாயகரை வேத மந்திரத்தால் மலர்களைத் தூவிப்பூசித்து அவரது திருவருள் பெற்றான். (எ-ம்) (உ௯)

மலர்திகழ் சேக்கையான் மலர்க டூவியே
பலர்புகழ் குடதிசை பார்த்து மாதுட
னிலகியைத் திகிரிசங் கேந்து மாயனைக்
குலவுபூ சனைதுதி கொண்டு போற்றினன்.

(இ-ள்) தாமரைப்பூவிலிருக்கும்பிரமதேவன் அதன்பின் மேற்றிசையைப் பார்த்து உமாதேவியாரோடிருக்கும் சிவபிரானையும் சங்கு சக்கரந்தரித்த விட்டுணுவையும் மலர்களைத் தூவி பூசைசெய்து தோத்திரஞ் செய்தான். (எ-ம்) (உஎ)

நீலொளி துளும்பிட நின்ற துர்க்கைதான்
வாலெயி றதுக்கிய வாய்நி சாசரா
சாலவுந் துதித்திடு மயிடற் சாய்க்கவே
கோலவொண் பரங்கிரிக் குழகற் போற்றியே.

(இ-ள்) நீலநிறம் பொருந்திய துர்க்கையானவள் அசுரர்களெல்லாந் துதிக்குந் தலைவனாகிய மகிடாசுரனைச் சங்காரஞ்செய்யவதற்காகத் திருப்பரங் கிரியிலே யெழுந்தருளியிருக்கும் பரங்குன்றீசரை வணங்கி. (எ-ம்) (உஅ)

கற்பக நாட்டினிற் கழறு மும்மைசேர்
சொற்புரி வருடமுந் தூய நோன்பினை
யற்பக லிழைத்திட வாதி நாயகன்
மற்பொலி விடையின்மேல் வந்து தோன்றினன்.

(இ-ன்) திருப்பரங்குன்றத்திலே தேவ வருடத்தில் மூன்று வருடம் இரவும் பகலும் பரிசுத்தமாகிய தவஞ்செய்யச் சிவபெருமான் இடபாரூடராய் எழுந்தருளி அவள் முன்பு நின்று காட்சி தந்தருளினர். (எ-ம்) (உக)

வரம்பல கேளென மருவு துர்க்கைதான்
விரும்பிய துரைத்திட வேத நாயக
னிரம்பவஞ் செழுத்துப தேசம நீவிக்குத்
தரும்படி செய்துபின் மகிழ்ந்து சாற்றுவான்.

(இ-ன்) அதன்மேல் சிவபெருமான் உனக்கு வேண்டும் வரங்களைக் கேட்பாயென்று திருவாய் மலர்ந்தருளுதலும் துர்க்காதேவி தான் விரும்பிய வரத்தைக்கேட்க அவளுக்குச் சிவபெருமான் பஞ்சாட்சர மந்திரத்தை யுபதே சித்தருளிப் பின்னுஞ் சொல்லுவார். (எ-ம்) (௩௦)

பற்றிய குகன்முதற் பதிய தாகியே
யுற்றவித் தலத்திடை யூறு தீர்த்துநீ
நற்றவர் புகழ்நடு நாய கம்பெறக்
கொற்றவேற் குமரவேள் கோயில் சேரென்றான்.

(இ-ள்) நமது குமாரனாகிய முருகன் இருக்கும் தலங்களுக்குள்ளே இந்தத்தலம் முதன்மையுடையது ஆதலால் இப்பரங்கிரியில்வந்து தரிசிப்போரது இடையூறுகளை யெல்லாம் நீக்கி நமது குமரன் கோயிலில் தவசிகள் புகழப்படும் நடுநாயகமாயிருவென்றருளிச்செய்து மறைந்தருளினார்.(எ-ம்)(கூக)

அத்தகை வலியினு லவனை யீட்டியே
மெய்த்தகு மவன்றலை மிதித்து காப்பணாய்
வைத்தருள் வடதிசை நோக்கி வைகிய
வித்தகி பூசையை வேதன் முற்றினான்.

(இ-ள்) பரங்குன்றீசரது திருவருட் பலத்தால் மகிடாசுரனை யுத்த களத்தில்வென்று, அவன் தலையை மிதித்துக்கொண்டு குமாரக்கடவுளுக்கும் பரங்குன்றீசருக்கும் இடையிலே நடுநாயகமாக வடதிசையை நோக்கி யிருக்கின்ற துர்க்காதேவியைப் பிரமதேவன் பூசித்தான். (எ-ம்) (கூஉ)

வேறு.

பிறைதவழ் சடையான் பூசனை புரிந்து
பெரும்புகழ் வேலவன் பதத்தி
லிறுகிய முறுக்கு நெகிழ்ந்துகின் கிணிவா
யெனவரும மலர்ந்தபூத் தூவி
மறுவிலீ ரெட்டாம் வரிசைகொண் டேத்தி
மருவுசெவ் வேள்விடை கொண்டு
குறுநகைச் செவ்வாய் வாணியை மணந்து
குறைவிலா வுவகையிற் குளித்தான்.

(இ-ள்) சந்திர ஜடாதரராகிய பரங்குன்றீசரைப் பூசைசெய்து முருகக் கடவுளுடைய பாதங்களிலே மலர்களைத் தூவிச் சோடசோபசாரத்துடன் பூசைசெய்து துதித்து விடைபெற்றுச் சரசுவதியை மணந்து மகிழ்ச்சியடைந்திருந்தான். (எ-ம்) (கூக)

தூயதண் டுளிசேர் பிரமகூ வத்தைத்
தொட்டதின் மாதுட னாடி
மேயநீர் கொண்டு தருப்பண விதிகள்
விருப்புட னியற்றியே பிரமன்

சேயிதழ்க் கனிவாய் வெண்கிளி யுடனே
திருப்பரங் கிரிவலம் படர்ந்து
பாய்பசுங் கனகத் தேரினைக் கடவிப்
பண்டுறை யுலகமெய் தினனால்.

(இ-ள்) அதன்மேற் பிரமதேவன் பிரமகூவத்திலே வெள்ளைக்கிளியைப் போலும் மனைவியாகிய சரசுவதியுடனே ஸ்நானஞ்செய்து தருப்பண முதலியவைகளை விதிப்படி செய்து திருப்பரங்கிரியைப் பிரதக்ஷணம் வந்து, ரதத்திலேறித் தனது சத்தியவுலகம் போய்ச் சேர்ந்தான். (எ-ம்) (௬௪)

இத்திறம் பொலிந்து மூழ்குவோர் வாழ்வு
மிறுதியில் வீடுமே யுதவு
மெய்த்தகு பிரம தீர்த்தமூற் றாடின்
மேனிவெண் குட்டநோ யகன்று
கத்துநீ ராழிக் காசினி புரப்பை
காவல கேண்மதி யென்றே
மொய்த்தமா தவர்சூழ் தருபிர மிட்டன்
முயன்றுதன் னிருபபிலெய் தினனால்.

(இ-ள்) இவ்வாறு சிறப்போடு விளங்கித், தன்னிடத்தில் வந்து மூழ்குவோர்க்கு இம்மையிலே வாழ்வும், மறுமையிலே மோக்ஷமுங் கொடுக்கும், பிரமதீர்த்தத்தில் நீ போய் ஸ்நானஞ் செய்தால் வெண்குட்டம் நீங்கப்பெற்றுப் புனிதனாய் முன்போ லரசாட்சி செய்வா யென்று சொல்லிப் பிரமிட்ட முனிவர் தமதிடத்துக்குச் சென்றார். (எ-ம்) (௬௫)

வாய்ந்தவப் பொழுதே வேந்தனு மேகி
வளர்பரங் கிரியடைந் தந்நீர்
தோய்ந்தபின் பண்டை யதனிலும் விளங்கு
சோதிபெற் றுளங்களி கூர்ந்து
பாய்ந்தநீர்ச் சடில சேகர னுடனே
பவளவாய்க் குமரனைப் போற்றி
யாய்ந்தசீர் பெருகும் விசாலைபுக் கிருந்தே
யவனியை யோம்பிவாழ்ந் தனனே.

(இ-ள்) அதன்மேல் கோவிதாரத்துவசனாகிய அரசனும் எழுந்து திருப்பரங்கிரியை யடைந்து பிரமகூவத்தில் ஸ்நானஞ்செய்து, வெண்குட்டம் நீங்கி முன்னையினும் பிரகாசமுடைய மேனியனாகிச் சிவபெருமானையும், முரு

கக்கடவுளையும் பணிந்து துதித்துக் கிரிப்பிரதட்சணஞ் செய்து தன்னுடைய நகரமாகிய விசாலமாநகரத்துக்குச் சென்று, அரசாட்சி செய்து வாழ்ந்திருந்தான். (எ-ம்) (௬௬)

வேறு.

இன்னளைய பயன்விளைக்கும் பிரம கூவ
மெழும்புனித நீர்குடைந்தே யாமுஞ் சோதி
பொன்விழுது விழுந்தனைய வேணி யானைப்
புங்கவர்மா முடித்தழும்பு பொலிந்த தாளுங்
கொன்னவிலு நெட்டிலைவேற் கையுங் கொண்ட
குமரனைப்போற் றிப்பரம குவட்டைச் சூழ்ந்து
மன்னியகன் றனமெனக்கா லவற்கு நீதி
வளர்தேவத் துதிபகுத்து வகுத்துப் போனான்.

(இ-ள்) இந்தப் பிரகாரம் சிறந்த பயனை விளைவிக்கும் பிரமகூவத்திலே மூழ்கிச் சிவபெருமானையும், முருகக்கடவுளையும் வணங்கித் திருப்பரங்கிரியை வலம்புரிந்து இவ்விடத்திற்கு வந்தோமென்று காலவனென்னும் வேதியனுக்குத் தேவத்துதிமுனிவர் சொல்லியருளிப்போயினர். (எ-ம்) (௬எ)

தண்பொழிநீர் பெருகியிடும் பிரம கூவத்
தகைமையது கேட்டிடுவோர் தழைந்து நேயம்
பண்பெருகக் கூறிடுவோர் சாப மேற்ற
பவந்துடைப்பர் மணக்கோலம் பரிப்ப ரென்று
நண்பெழுந்தே வத்துதிகா லவற்குச் சொற்ற
நற்கதையா மென்றுசவு னகர்க்குத் தொன்னூ
லெண்பெருகக் கருந்தழும்பே றியசொன் னாவா
லியம்பினன்மா தவளவெண்ணீ றிலங்குஞ் சூதன்.

(இ-ள்) குளிர்ந்த நீர்பெருகுகின்ற இந்தப் பிரமகூவ தீர்த்தத்தின் பெருமையைச் சொன்னவர்களும், கேட்டவர்களும் தங்களுக்குச் சாபத்தால் வந்த பாவத்தை நீக்கிச் சுகமாக வாழ்வார்கள், மணக்கோலமும் பெறுவார்களென்று தேவத்துதி முனிவர், காலவனுக்குச் சொன்ன கதையிதுவென்று சூதமுனிவர் சௌனகாதி முனிவர்களுக்குச் சொல்லி அவர்களை மகிழ்வித்தார் (எ-ம்) (௬அ)

ஐந்தாவது பிரம கூவச் சருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் ரு-க்குச் செய்யுள் உ௯௨.

---

# ஆறாவது

# தலவிசேடச் சருக்கம்.

——(0)——

வண்ட லம்பிய கஞ்ச மாளிகை வான வன்றிரு மன்றல்செய்
தண்டர் கூறிய வேத கூவம தாடல் செய்தத றைந்தபின்
விண்ட லம்புக ழும்ப ரங்கிரி வீறு மன்பொடு தூயநீ
ரெண்ட ருந்தகை சவுன கற்கரு ளெய்து சூத னியம்புவான்.

(இ-ள்) தாமரை மலரை யிடமாகவுடைய பிரமதேவன் சரசுவதியை மணந்து, பிரமகூவத்தில் ஸ்நானஞ்செய்த சரித்திரத்தைச் சொல்லியபின் தேவர்கள் புகழுந் திருப்பரங்கிரித்தலத்தின் மகத்துவத்தையும், பரிசுத்த முடைய சௌனகமுனிவர்களுக்குச் சூதமகாமுனிவர் சொல்லுகின்றார். () (க)

ஊறல் பொங்கி யுவட்டெ ழும்புனி தத்து நீர்திக ழொன்பதில்
வீறு தங்கு மிரண்டு நீர்மிக மேன்மை யீரும தேதெனின்
மாறி ருக்கு முருக்கு சண்முக வாவி யொன்றதின் மூழ்குவோ
ரீறி லன்பு பொருந்த றம்பொரு ளின்ப வீடடை வாரரோ.

(இ-ள்) திருப்பரங்குன்றத்தில் ஒன்பது தீர்த்தங்க ளிருக்கின்றன. அவற்றில் இரண்டு தீர்த்தங்கள் மிக மேன்மையுள்ளன. ஒன்று மயக்கத்தையும் வஞ்சகத்தையுங் கெடுக்கின்ற சரவணப்பொய்கை. அதில் ஸ்நானஞ் செய்தவர்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் சதுர்வித புருடார்த்தங் களையும் பெறுவார்கள். (எ-ம்) (உ)

மூன்பு கன்று தெரிந்து சத்திய கூவ மொன்றதின் மூழ்கவே
வன்பெ ழுந்தவி னைப்பெர ருட்பைமூ ருக்கு மன்றி மழுக்கையான்
றன்ப தந்தொழு மன்பு மேவரிச் சந்தி ரன்புவி யாளுமோர்
மன்பு விக்கொரு வாச கத்தவ னென்றெ லோரும் வகுக்கவே.

(இ-ள்) மற்றொன்று சத்தியகூவம். அதில் மூழ்கினவர்கள் சகல பாவங் களும் தீர்வார்கள். சிவபெருமானுடைய பாதத்திலே மிகுந்த அன்பு பூண்டவ னாதலால் இவ்வுலகத்தையாளும் அரசனாகிய அரிச்சந்திரன் சத்தியவாக் குடையவனென்று உலகமெல்லாம் புகழும்படி. (எ-ம்) (ங)

மெய்பெ னுந்திரு விரத பங்கம்வி ளைந்தி டாவகை யித்தலத்
தெய்தி யூற லுவட்டெ ழுங்குளி ரேறு சத்திய கூவநீ
ருய்யுமாறு குடைந்த ருந்தவ முற்றும் வாய்மை வழானென
வைய மேத்து மிருஞ்சு டர்த்துணை வானு லாவிய வைகலும்.

(இ-ள்) சத்திய விரதத்துக்குப் பங்கம் வாராதவிதம் இந்தத்தலத்தில் வந்து சத்திய தீர்த்தத்தில் மூழ்கிச் சத்தியவாக்குடையவனென்று உலகமெல்லாம் சந்திரசூரியர்களுள்ளவரை துதிக்க அரிய தவத்தைச்செய்து முடித்தான். (எ-ம்) (௫)

பான்ம திப்பிள விட்ட வேணியர் பாலர் வைகிய சோலைசூழ்
கான்ம லிந்தப ரங்கி ரிககணொர் கணம ரைக்கண மாயினு
மேன்மை யன்பொடு வைகு வோர்வினை வேர றுத்து நலமபெறு
மான்ம ழுக்கைய னுருவு கொண்டு வயங்கு வாருரை திண்ணமே.

(இ-ள்) மூன்றும் பிறைச் சந்திரனைச் சடையிலேதரித்த சிவபெருமானுடைய குமாரராகிய முருகக்கடவுள் எழுந்தருளியிருக்கும் அந்தத்தலத்திலே ஒருகணம் அல்லது அரைக்கணம் உள்ளன்போடு வசிப்பவர்கள் தீவினையை வேரோடறுத்துச் சிவசாரூப்பிய பதவியை அடைவார்கள். இது சத்தியமே. (எ-ம்) (௬)

மஞ்சு றங்கு தலைப்ப ரங்கிரி வைகி மாதவ மெய்திவாழ்
விஞ்சு மாமுனி வோர ளப்பிலர் சிலர்ப குத்துவி ளம்பிலோ
அஞ்சு கம்பகர் தற்கி யாமள விட்டி லேமரி தமமவோ
செஞ்சொல் வேத முழங்கு வாய்மையர் சிலரை யாமும்வி ளம்புவாம்.

• (இ-ள்) மேகங்கள் படியுஞ் சிகரத்தையுடைய திருப்பரங்குன்றிலேயிருந்து தவஞ்செய்கின்ற முனிவர்கள் அனந்தர். அவர்களுக்குள் சிலர் பெருமையை யெடுத்துச் சொல்லுவதற்கு அஞ்சு யுகங்களானாலும் முடியாது. அவர்களுக்குள் நேரான வாக்கியங்களையுடைய வேதங்களை யுணர்ந்த சில முனிவர்களை எடுத்துச் சொல்லுவோம். (எ-ம்) (௭)

கதிர்பொ ருந்திய நீற்று மேனியர் கபில ரத்திரி கண்ணுவர்
முதிர்செ ழுந்தவர் சவுன பார்க்கர முனிம ரீசிவ சிட்டர்மெய்
குதிர்கு தித்திடு மங்கி ராமுனி பிருகு கோகிலர் தூமிராச்
சதிர்கொள் சங்கிர தித்த மாமுனி யேனை யோர்பலர் சாருவார்.

(இ-ள்) பிரகாசம் பொருந்திய விபூதி யணிந்த மேனியையுடைய கபிலர், அத்திரி, கண்ணுவர், சவுனபார்க்கரர், மரீசி, வசிட்டர், அங்கிரா, பிருகு, கோகிலர், தூமிரா, சங்கிரதித்தர் முதலிய முனிவர்கள் அநேகர் வருவார்கள். (எ-ம்) (௮)

வெண்ணி லாவு தருந்தி ருப்பொடி மெய்யர் கண்டிகை மன்னுதா
ருண்ணி றைந்த வுரத்தர் நீள்மர வுரியை வீக்கு குறங்கினர்
தண்ணி றைந்திடு தத்த மக்குள தயவு மிக்கெழு நட்பினர்
மண்ணொ டும்பர் பழிச்சு திவ்வியம் வைத்த மாவுரு வத்தரே.

(இ-ள்) இன்னுமவர்கள் வெண்மை பொருந்திய நிலாவைப் போன்ற திருநீற்றை யணிந்த மெய்யையுடையவர்கள், ருத்திராக்ஷத்தை அணிந்த மார்பையுடையவர்கள், மனத்தினுள்ளே நிறைந்த ஞானமுடையவர்கள், மர வுரியைத் தரித்த இடையையுடையவர்கள், அவரவர்கள் தகுதிக்குத் தகுந்த கருணையுள்ளவர்கள், பூவுலகமும் மேலே உள்ள உலகங்களும் துதிக்கத்தக்க தெய்வீகமான சரீரத்தையுடையவர்கள். (எ-ம்) (௮)

பைத்த லைப்பணி யின்ம ருத்தொடு பயமு லர்ந்துதிர் சருகுணும்
பித்த லைந்த கருத்த ரிற்பிற ழுந்தி றத்தர் முரண்டருங்
கொத்தெ ழுந்தன கூனெ ழுந்தன கோடு கொண்ட விலங்குபோல்
வைத்த மெய்யினர் பக்க மேற்சிறை மன்னு புள்வடி வத்தரே.

(இ-ள்) படத்தையுடைய சர்ப்பங்களைப்போல வாயுபட்சணம் செய் வதிலும், காய்ந்துதிர்ந்த சருகுபட்சணம் செய்வதிலும், பித்தேறின கருத் துடையவர்போலப் பிறழ்ந்து பேசும் வலிமையுடையவர் கூட்டமாகவும் வளை வாகவுமுள்ள கொம்புகளையுடைய மிருகங்களைப் போலவும், இரண்டு பக்கத்தி லும் இறகுகளையுடைய பட்சிகளைப் போலவும், வேண்டிய உருவங்களை யெடுத்துக்கொள்ளப்பட்டவர்கள். (எ-ம்) (௯)

விண்டொ டுங்குடு மிப்ப ரங்கிரி விமல னைக்கறை யுதறுவேல்
கொண்ட சேவக னைப்ப ரவிய கொள்கை முப்பொழு தெய்தியே
வண்டு கிண்டிட மதுவொ ழுக்கிய மலர்சொ ரிந்துவ ழிந்துகை
கண்ட வாமல கம்மெ னப்பொருள் கண்டு ளங்களி கூருவார்.

(இ-ள்) (இவ்விதம் அவரவர்களுடைய தவமுயற்சிக்கு வேண்டிய வடி வத்தை யெடுத்துக்கொண்டு) பரங்குன்றேசவரரையும், முருகக்கடவுளையும் மும்காலமும் மலர்தூவி அருச்சித்து வணங்கிப் பரம்பொருளை உள்ளங்கை நெல்லிக்கனிபோற் கண்டு மனங்களிக்கின்றவர்கள். (எ-ம்) (௧௦)

இத்த லைத்தவ ராசர் வைகு மெழிற்ப ரங்கிரி தன்னிலே
கொத்தெ ழுந்திடு கற்ப கத்தரு நீழல் கொண்டவ னுதியோர்
மெய்த்தி சைப்பதி காவ லோர்வரை கூப்பி டெல்லை விளங்குபே
ரொத்த சிங்க மமைத்த ருச்சனை போகை யிற்புரி வாரரோ.

(இ-ள்) இப்படிப்பட்ட பெருந்தகைமையினையுடைய தவமுதல்வர்களாகிய முனிவர்கள் வசிக்கும் திருப்பரங்கிரிக்குக் கூப்பிடுதூரம் வரை நாற்புறமும் தேவேந்திரன் முதலிய தேவர்களும் திக்குப்பாலர்களும் வந்து சந்தோஷத்துடன் சிவலிங்கந்தாபித்துப் பூசை செய்வார்கள். (எ-ம்) (கக)

எண்ணி றந்திடு பாவ வேரை யெடுத் தெடுத்து முருக்கியே
புண்ணி யம்பல செய்த மாந்தர் பொருந்து போகமு நல்கியே
கண்ணி றைந்திடு நெற்றி யார்கை லைக்கி ரிக்க ணிருத்தியே
யண்ண லார்வடி வாக்கி யேயரு ளுக வுஞ்செயு மத்தலம்.

(இ-ள்) இவ்வாறு பூசைசெய்பவர்களுக்குப் பாவத்தை வேரோடறுத்து விரும்பு மிஷ்ட காமாதிகளை யளித்துச் சிவசாரூப்பியத்தையுங் கொடுத்துக் கைலாச மலையிலே யிருக்கச்செய்து மோட்சத்தையுந் தரவல்லது அத் திருப்பரங்கிரி. (எ-ம்) (கஉ)

வண்ப ரங்கிரி யம்ப திக்கண் வதித்த வேதியர் கைக்கொளப்
பண்பு டன்பசு வைச்சி றக்கவளித்து ளார்பசு வினச்சொலி
னெண்மி றந்த மயிர்க்கொர் கற்ப மிருந்கு லத்தொடு கைலையில்
நண்பு டன்களி கூர மேவி நயந்து நாளுமவிளங்குவார்.

(இ-ள்) இந்த வளர்ந்தங்கிய பரங்கிரித் தலத்திலிருந்து வேதியருக்குப் பசுவைத் தானங்கொடுத்தவர், அப் பசுவின் ஒவ்வொரு உரோமத்திற்குமொவ்வொரு கற்பகாலம் கயிலாச மலையை யடைந்து தங்கள் குலத்திலுள்ளவரோடு மகா சந்தோஷத்துடனே தினந்தோறு மிருந்து வாழ்ந்து விளங்குவார். (எ-ம்) (கங)

வேறு.

பொங்க ருடுத்த பரங்கிரியிற் பூஞ்சோ லைகளைப் பொலிவித்தோர்
கொங்கு விரிசிறுந் திருமாலை குமரன் புயத்தி லணிவித்தோர்
கங்குல் கிழியத் திருவிளக்கு கடம்பன் கோயி லியற்றுவித்தோர்
துங்கம் விளைத்த பயனசிவனே சொல்வா னெயமாற சொலவரிதே.

(இ-ள்) சோலைகள் சூழ்ந்த திருப்பரங்கிரியில் நந்தவனம் வைக்கச்செய்தவர்களும், முருகக் கடவுளுக்குப் புஷ்பமாலை சாத்தச்சொன்னவர்களும், அவரது கோயிலில் திருவிளக்கிடச் சொன்னவர்களும் அடையும் பிரயோசனத்தை எம்போலிய ரெடுத்துச்சொல்ல முடியாது. சிவபெருமானே சொல்லவல்லவர். (எ-ம்) (கச)

திங்க டோறும் வருஞ்சோம வாரந் தனிலே தேயத்தோர்
மங்கை பாகன் குமரனையே வந்து வழுத்திப் பரங்கிரியிற்
பொங்கு சிறப்பு மிகவிடுத்து விரதம் பூண்டோர் மறுதலங்க
ளெங்குந் திரிந்து கோடிநோன் பியற்றும் பயனை யடைவாரே

(இ-ள்) மாதந்தோறுஞ் சோமவாரங்களில் திருப்பரங்கிரியில் வந்து சிவபெருமானுக்கும், முருகக்கடவுளுக்கும் அபிடேக நைவேத்திய முதலியன செய்வித்துத் துதித்து, சேவைசெய்து விரதமிருப்பவர்கள், வேறு தலங்களிற் கோடி விரதங்களைச் செய்தவர்கள் பெறும்பயனைப் பெறுவார்கள். (எ-ம்)(௧௫)

எற்றுந் திரைநீர்ப் பரங்கிரியி னெந்த விரத நோற்றாலு
மற்றைப் பதியிற் பலகோடி விரத மிழைத்த பயன்மலிந்து
பற்றும் பாவ வினையறுத்துப் படருஞ் செல்வம் பொலிந்தோங்கிச்
சுற்ற முடனே வெள்ளியொளி துளும்பும் கைலைப் பொருப்பணைவார்.

(இ-ள்) புண்ணிய தீர்த்தங்கள் வாய்ந்த திருப்பரங்கிரியில் யாரொருவர் எத்தகைய விரதத்தைச் செய்தாலும், பிறதலங்களில் பலகோடி விரதஞ் செய்து பெறும்பயனைப் பெறுவர். அதுவுமல்லாமல் பாவங்களனைத்தையும் முற்றுங்களைந்து புனிதராய்ச் செல்வமெல்லாம் பெற்றுச் சுகமடைந்து முடிவிலே தஞ் சுற்றத்தாருடனே கயிலாசமலையை அடைவர். (எ-ம்) (௧௬)

தெய்வ நிகழ்சொல் லுமைகூடச் சிவனு முறையிற் சோமனெனுந்
துய்ய திருப்பேர் பெறுஞ்சோம தினத்திற் சுரந்த விருளொதுங்கு
மைமொண் களத்தர் பரங்கிரியில் வளருங் குமர னுகந்திடுநாட்
கொய்யு மலர்மாலைகள்சாத்தக் குறைவி லாத பேறடைவார்.

(இ-ள்) தெய்வத்தன்மை நிகழ்கின்ற சொல்வடிவமாகிய உமாதேவியுடன் பொருந் வடிவமான சிவனிருந்தால் அவனுக்குச் சோமனென்று பெயர் கூறலாம். அத்தகைய சிவபெருமானுக்குரிய சோமவாரத்திலும், முருகக்கடவுளுக்குரிய விசாக நாளிலும், அவ் விருவருக்கும் வாசனைபொருந்திய புஷ்பமாலை தொடுத்துச் சாத்துவோர்கள் குறைவற்ற நற்பலன்களையெல்லாம் பெறுவார்கள். (எ-ம்) (௧௭)

கூற்றின் முதுகு படச்சிவந்து குலவும் பதத்த சிவன்பூசை
தோற்றும் பயனை யளப்பவரார் தூய தந்தை தாளெறிந்தோர்
மாற்ற மறியா தருள்பூசை வளரும் பரங்குன் றதில்வகுப்பே
ரேற்றுங் கதிசே ருவர்திண்ண மிந்தப் பதிக்கோ ருவமையுண்டோ.

(இ-ள்) யமனை யுதைத்தலால் மிகவுஞ் சிவந்த திருவடியுடைய சிவ பூசையின் பயனையளந்து சொல்ல யாரே வல்லமையுடையார். சண்டேசுர நாயனார் மாறுபாடில்லாம லருள்செய்கின்ற பூசை செய்வோர் உயர்ந்த மோட்சத்தையடைவர். இந்தத் திருப்பரங்கிரித் தலத்திற்கு ஒப்பு வேறில்லை. (எ-ம்) (கஅ)

மருவும் புனித கார்த்திகையா மாத மருவுங் கார்த்திகைநாட்
பொருவில் பயன்சேர் சரவணப்பூம் பொய்கை படிந்து சண்முகனைப்
பெருகும் பசும்பா லைந்தமுதம் பெறுகவ் வியந்தேன் கதலியொடு
தருவின் பழச்சா றாட்டுவித்துத் தண்ணார் புழுகுஞ் சாத்துவித்து.

(இ-ள்) கார்த்திகை மாதத்தில் வருங் கார்த்திகை நட்சத்திரத்தில் ஒப்பில்லாத பயனைக் கொடுத்தருளுஞ் சரவணப் பொய்கையில் ஸ்நானஞ்செய்து, முருகக்கடவுளுக்குப் பால், பஞ்சாமிர்தம், பஞ்சகௌவியம், தேன், வாழைப் பழச்சாறு முதலியவைகளா லபிடேகஞ் செய்வித்துப் புழுகுகாப்புஞ் சாத்துவித்து, (எ-ம்) (கக)

குமரன் விரும்புந் திருநீலோற் பலமாங் குளிர்தார் சாத்தியே
யமுது நிகரு நிவேதனங்க ளாறு வதனத் தூட்டுவித்தோர்
குமுறு திரைவாழ் கங்கையைப்போற் குலவுஞ் செய்யுள் வடகலையுந்
தமிழுந் தொடுக்க வல்லவராய்த் தாணி யாளு மிறையாவார்.

(இ-ள்) முருகக்கடவுளுக்கு விருப்பமாகிய நீலோற்பலமலர் மாலை புனைவித்து, ஆறு திருமுகங்களினும், அமிர்தத்தினுமினிய பலவித நிவேதனங்களை நிவேதிக்கச்செய்தவர் கங்காநதிப் பிரவாகம்போல வடமொழியிலும், தமிழ் மொழியிலும் பாட்டுப்பாட வல்லவராகி, உலகத்தையாளும் அரசாகி யிருந்து வாழ்வார்கள். (எ-ம்) (உ0)

தருவெங்கொடுமையஞ்செனும்பா தகத்தையறுக்குமஞ்செழுத்தைக்
குருதி யொழுகும் வேலுடைய குமரன் றிருமுன் னாயிரத்தெட்
டுருவின் றெணினூற்றெட்டெனினு முருவை யியற்றிற் றுய்வயிற்றிற்
கருவை யகழ்ந்து பாழ்படுத்திக் கடவுள் சாரூ பமபெறுவார்.

(இ-ள்) பஞ்சமா பாதகங்களைக் கெடுத்தருளும் ஸ்ரீபஞ்சாக்ஷர மந்திரத்தை, வேலாயுதத்தை யேந்திய முருகக்கடவுள் சந்நிதிக்கு முன் ஆயிரத்தெட்டு, அல்லது நூற்றெட்டு உருச் செபித்தோர் இனிமேல் வரும் பிறவியை யறுத்துச் சிவசாரூபமடைவர். (எ-ம்) (உக)

செல்வம் பெருகும் பரங்கிரியாந் தெய்வப் பதியைக் குரோசமெனும்
எல்லை தனில்மாண் டவர்கதியி னெய்து வார்கள் திவ்வியங்கள்
வல்ல தலத்தி லுடலெரியக் கிடைத்த லெளிதோ சயம்புவளர்
தொல்லைப் பதியி லிருந்திடவே கிடையா துலகந் தோன்றினர்க்கே.

(இ-ள்) செல்வம் பெருகி வளரும் திருப்பரங்கிரியின் ஐந்து கூப்பிடு தூர எல்லைக்குள் இறந்தவர்களெல்லோரும் சிவகதி சேருவர். நன்மை மிகுந்த இத்தலத்திலே மரணங்கிடைப்பது எளிதல்ல. மாயாவுலகத்தை மெய் யென்று நம்பியழியு மாந்தர்களுக்குச் சுயம்புத்தலமாகிய பழைய தலங்களில் வாசஞ்செய்யும் புண்ணியங் கிடைப்பது அரிது. (எ-ம்) (௨௨)

விழைந்து மனிதர் வகுத்தலிங்க மதனின் முனிவர் மேவியுளங்
குழைந்து பதித்த குறியதிக மதனிற் சித்தர் குலவியிடத்
தழைந்த இலிங்க மதிகமது அதிற் றருவிண் ணவர்தா பனப்பூசை
யிழைந்த இலிங்க மதிகமதிற் சயம்பு லிங்க மினிதுயரும்.

(இ-ள்) மனிதர் தாபித்த லிங்கத்தினு முனிவர் தாபித்த லிங்கம் உயர்ந்தது. அதனினுஞ் சித்தர்தாபித்த லிங்கம் உயர்ந்தது. அதனினுந் தேவர்கள் தாபித்த லிங்கம் உயர்ந்தது. அதினினுஞ் சுயம்புலிங்கம் உயர்ந் தது. (எ-ம்) (௨௩)

தெய்வச் சயம்பு கொழுந்துவிட்டுச் சிறந்த தலத்திற் புராதனநூ
லைய மகல வுரைத்தபதி யதிக மதனி லிருந்திடவே
பெய்யும் விருப்பம் பெற்றாலும பெறுதற் கரிய கலியுகத்தி
லுய்யும் வகைக்கோ ரிடையூற்றை யெய்தி மனித ருறுதிபெறார்.

(இ-ள்) இத்தகைய சுயம்புலிங்கமுள்ள சிவதலங்களுக்குள்ளே புராணங் களாற் சந்தேகமின்றி எடுத்துச் சொல்லப்பட்ட தலமே மிகவும் மேலானது. அந்தத் தலங்களில் இருக்க ஆசையுண்டானாலும், இக்கலியுகத்தில் அதற் கிடையூறு பல ஏற்பட்டு மனிதர்கள் உறுதியைப் பெறாதுபோவர். (எ-ம்) பெறுதற்கரிய கலியுகமென்றது தவந்தானங்கள் சிறிது காலத்திற் பயன் கொடுத்தலாலென்க. (௨௪)

பன்னூல் புகழும் பரங்கிரியின் பான்மை யறிந்தே யிடையூறு
முன்னா றணுகிற் பின்னூறு முயன்று புத்தி தனைத்தேர்ந்து
தொன்னூற் கையம் விளைந்தகலி யுகத்திற் றேன்று மனிதருக்குட்
டன்னூ ரெனவே யுறையுமவன் றரையூர் நரகூர் தனைச்சாரான.

(இ-ள்) முன்பு எவ்வகையூற்றில் நூறு வந்தாலும் பின்பு கெட்டுப் போம். பல நூல்களால்புகழப்படும் திருப்பரங்கிரியின் மகத்துவத்தை யறிந்து

அவற்றிற் கெல்லாங் கலங்காது மனத்தைத் தேற்றிப் பழைய நூற்பொருள்களிலே சந்தேகம் உண்டாகும் இந்தக் கலியுகத்தில் பிறந்த மனிதருக்குள்ளே தன்னுடைய ஊரைப்போல் நினைத்துத் திருப்பரங்கிரியில் வசிப்பவன் இந்தப் பூவுலகத்தையும், நரகத்தையும் அடையமாட்டான். எனவே மேலுலகங்களை அடைவான் என்பதாயிற்று. (எ-ம்) (உ௬)

மதிதோய் சிமையப் பரங்கிரியில் வாழ்வோ ரயலார் மனைவிழைந்தும்
விதிதோய் தமக்கு விதித்திடூஉ ணல்லா வூணை விரும்பியுண்டுங்
கதிர்தோய் முப்பான் பணவெடையாங் கனகங் கரந்து மிவ்வகையா
முதிர்தோர் கொடுமை யெனநடுங்கா முற்று மபுரியுந் தீவினையோர்.

(இ-ள்) சந்திரன் தவழும்படியான குடுமியினையுடைய திருப்பரங்கிரியில் வசிப்பவர்கள், பிறர்மனைவியை விரும்பியும், உண்ணாத உணவை விரும்பியுண்டும், முப்பதுபண எடை தங்கத்தைக் களவுசெய்தும் இப்படிப்பட்ட பாவங்களை முழுவதுங் கொடுமையென்று அஞ்சாது செய்வார்களானால் அந்தத் தீவினையுடையவர்கள். (எ-ம்) (உ௭)

கும்பி தனிலே கிடந்தலறக் குளியா ரெனினு மவர்புரிந்த
வெம்பு கொடிய தீவினையை வீட்டுஞ் செயலே தெனில்வடுகன்
பம்பு குருதி யலையெறிந்து பதைத்துத் துடிக்கத் திரிசூலத்
தம்ப நுனியி லேற்றிவினை தணித்தாங் குதற வீடடைவார்.

(இ-ள்) கும்பிபாக நரகத்தை அடையமாட்டார்கள். அடையாவிட்டாலும் அவர்கள் செய்த கொடிய பாவம் எப்படி நீங்குமெனில், வயிரவக்கடவுள் தம்முடைய சூலத்தினாலே அவர்களைக் குத்தி துடிதுடிக்க இரத்தம் ஒழுகும்படி செய்து தீவினையை நீக்கி அதன்மேல் மோட்சத்தை யடைவர். (எ-ம்) ()

இக்கா தையினை யெழுதரியா இருக்கில் வடித்த சாரமெனப்
புக்கா ரமுத மெனக்கேட்போர் புகலு மவரை நஞ்சுதினங்
கக்கா ரமுற்பாம் பினையணிந்த கடவு ளெனப்பா வித்தேத்துந்
தக்கார் கதியி லடைந்திடுவார் சாற்றுந் தகைமை சத்தியமே

(இ-ள்) இந்தத் திருப்பரங்கிரி மகத்துவத்தை வேதசாரமென்றும், அமுதமென்றுங் கேட்போரும் இதைச் சொல்பவரை விஷத்தைக் கக்கும் சர்ப்பாபரணத்தை யணிந்த சிவபிரானெனப் பாவித்துத் துதிக்கும் உத்தமரும் நல்ல கதியை அடைவர். நாம் சொல்லும் இது சத்தியம். (எ-ம்) (உ௮)

ஆறாவது தலவிசேடச் சருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் ௬-க்குச் செய்யுள் ௩கo.

ஏழாவது

# அரிச்சந்திரச் சருக்கம்.

---

மன்றலேறுதண் பொங்கர் சூழ்தரும் வண்பரங்கிரி மன்னியே
நன்றி விடுப விக்கு மந்தநீர் மூழ்கு நாளையுஞ் சொல்வழா
வென்றி சேரரிச் சந்திரன்பெறு வீறு மந்தணர் வினவவே
கொன்றை வேணியான்பதந்தொழு சூத மாமுனி கூறுவான்.

(இ-ள்) வாசனை மிகுந்த குளிர்ச்சியுடைய பூஞ்சோலைகள் சூழ்ந்த வளந் தங்கிய திருப்பரங்கிரியிலுள்ள மோக்ஷத்தைக் கொடுக்கும் சத்தியகூவ தீர்த்தத்திலே ஸ்நானஞ் செய்யும் புண்ணிய காலமும், வாக்குத் தவறாத அரிச்சந்திரன் மூழ்கிச் சொல்லுறுதியும், மிக்க மேம்பாடும் புகழும் பெற்ற தன்மையும், சௌனகாதிமுனிவர் கேட்கச் சூதமுனிவர் சொல்லுவாராயினர். (எ-ம்) (க)

வேனில் வேள்களி கொண்ட மேடமா தத்தி னிற்படர் சித்திரை
தானணைந்திடு பூரணைத்திதி தன்னில் வல்லிருள் சாயவே
வானெழுங்கதிர் மேவு காலையின் மன்னு தங்கரு மம்புரிந்
தான சத்திய கூவ னீரினடைந்து செய்வன கூறுவாம்.

(இ-ள்) மன்மதன் திருவிழாக்கொள்ளும் சித்திரை மாதத்தில் சித்திரை நக்ஷத்திரமும், பௌர்ணமியுங் கூடிய தினத்தில் சூரியோதயத்தில் நித்திய கர்ம முடித்துச் சத்தியகூவ தீர்த்தத்தை அடைந்து செய்யவேண்டிய விதியைச் சொல்லுவோம். (எ-ம்) (உ)

தூய நீரெனுந் தேவதைத்திரு வுண்ணி னைந்துபின் சூழ்ந்துதன்
னேய மோடெதிர் மேவி யெண்வகை யைவகைச்செய னிறையவே
யாய வந்தனை செய்து சொல்வழுத் திக்கி ளத்திடு மாரணர்க்
கேய பூசனை செய்து முண்பன வினித ளித்தபின் னவர்களால்.

(இ-ள்) பரிசுத்தமுள்ள சலதேவதையாகிய கங்காதேவியைத் தியானஞ் செய்து, தீர்த்தத்தைப் பிரதட்சணம் வந்து நேரே நின்று புருடர்கள் அட்டாங்கமாகவும், பெண்கள் பஞ்சாங்கமாகவும் நமஸ்கரித்துத் தோத்திரஞ் செய்து வேதாத்தியயனஞ் செய்கின்ற பிராமணர்களுக்குத் தன்னாற்கூடிய மட்டும் அன்னதானங்கொடுத்து, அவர்களால் (எ-ம்) (ங)

குளிர்பொ ருந்தவே யாசி பெற்றபின் கோம யந்திலந் தண்டுல
தளிர்பொ ருந்துபச் சறுகு கூடவே கொண்டு நற்றலை திறுவிநீர்த்
துளிகள் கூடவோ ரரறெ னும்படி நாளி லேறிய தொல்லைபா
வொளிசெ யும்பவ மியாவை யும்வெளிப் படநி னைந்தபி னோதியே.

(இ-ள்) நல்ல ஆசீர்வாதத்தைப் பெற்றுக் கோமயம், எள்ளு, பச்சரிசி, பச்சையறுகம்புல் இவைகளைத் தலையில் தரித்துக்கொண்டு நீர்த்துளிகள் கூடி ஆறுனதுபோல் நாளுக்குநாள் ஏறி நிறைந்த பாவங்களை யெல்லாம் நினைத்து ஒவ்வொன்றாகச் சொல்லி, (எ-ம்) (௪)

இக்கொ டும்பவந் தீர்த்தி யென்றபி னெதிரி றைஞ்சிநீர் மூழ்குவோர்
தக்க நூறெனும் வயதி லேயிதித் தகைமை சேரொரு ஞான்றுதான்
மிக்க சத்திய கூவ மாடிட வேண்டு மாலது பெற்றிலா
ரொக்க மானிட ரிகழு வேநட மாடி டும்பிண மொப்பரே.

(இ-ள்) இந்தக் கொடிய பாவங்களை யெல்லாம் நீக்கென்று பிரார்த்தித்து எதிரே வணங்கித்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்பவர்கள், தங்களுக்கு ஏற்பட்ட நூறுவயதுக்குள்ளே ஒருநாளாயினும் இப்படிச் செய்யவேண்டும். இப்படிச்செய்யாதவர்கள் மனிதர்களெல்லாம் இகழ்ந்துபேசும் நடமாடுபிணத்தை யொப்பாவார்கள். (எ-ம்) (௫)

வாங்கி ளைத்திடு பரங்கி ரித்தல மருவி வேதருக் கோர்பிடி
சாம்பி டித்திடு மன்ன மிட்டவர் களிது ளங்கிவாழ் வெய்தியே
சிரங்கி ளைத்திடுங் கிளைகள் கூடுவர் தினக ரன்குளிர் திங்களும்
பொருந்து நாளவர் கால்வ ழித்திரள் பூமி யெய்தியே ழுமே.

(இ-ள்) மேன்மை நிறைந்த திருப்பரங்கிரித்தலத்துக்கு வந்து வேதமோதிய பிராமணருக்கு ஒருகைப் பிடியளவு அன்னங்கொடுத்தவர்கள், அவர்கள் நெடுங்காலஞ் சுற்றத்தோடு சந்தோஷமான வாழ்வை யடைவார்கள். அம்மட்டோ சூரியசந்திரர்களுள்ளமட்டும் அவர்கள்சந்ததி பரம்பரைதழைத்து இந்நிலவுலகத்தில் சீடித்தோங்கி வளர்ந்துவரும். (எ-ம்) (௬)

திருப்ப ரங்கிரி வேலர் சங்கரர் தேம லிந்தபா லன்னமேல்
விருப்பெ ழுந்திட வூட்டு வார்வினை வீடி நற்பய னடைவார
ருக்கு ளைத்தவர்க் கினிய பாலுட னெய்தி யேசமைக் கின்றசேர்
றருத்து வார்வினை யாவை யுந்துடைத் தலகில் பேறடை வாரரோ.

(இ-ள்) திருப்பரங்கிரியிலே முருகக்கடவுளுக்கும், சிவபெருமானுக்கும் பாற்பொங்கல் செய்து நிவேதித்தவர்கள் பாவத்தைப் போக்கி நல்லபலனை

அடைவார்கள். வேதங்களை யருளிச்செய்த அச்சிவபிரானுக்காகச் செய்து நிவேதித்த அந்தப் பிரசாதத்தைப் பிறர் புசிக்கச் செய்தவர்களும் மேலே சொல்லிய பயனை அடைவார்கள். (எ-ம்) (எ)

திரும லிந்தவை காசி மாதமே திங்கள் கேட்டைநாட் புனிதமே
மருவு சத்திய கூவ மாடியே மருவு தந்தைமார் மந்திரந்
தருத ருப்பணஞ் செய்ய வேயவர் தந்தை மார்நர கெய்தினு
நரகை விட்டவர் வெள்ளி யங்கிரி நண்ணி யேகளி கூருவார்.

(இ-ள்) வைகாசி மாதத்தில் சோமவாரத்தோடு கூடிய கேட்டை நக்ஷத்திரத்திலே சத்தியகூவ தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பிதுர்களுக்கு மந்திர விதிப்படி தர்ப்பணஞ் செய்தால் செய்தவர்களின் பிதுர்க்கள் நரகத்திற்கிடந்தாலும் அதினின்று நீங்கிக் கயிலாசத்தை யடைந்து மகிழ்ச்சி மிகுந்திருப்பார்கள். (எ-ம்) (அ)

பின்னர் நற்குலந் தன்னின் மேவியே பெருகு செல்வரா யீற்றிலே
மன்னர் தம்பத நண்ணு வாரருள் மருவு சத்திய கூவநீர்
தன்னின் மூழ்குவர் முயல கத்தொடு குட்ட மீளைநோய் சாடியே
இன்னல் செய்தவே தாள மாதிசே ரின்னல் விட்டரு ளெய்துவார்.

(இ-ள்) அப்பால் நல்லகுலத்திலே பிறந்து செல்வத்தை யடைந்து முடிவிலே அரசராய் வந்து பிறப்பார்கள். சத்தியகூவ தீர்த்தத்தில் மூழ்குபவர்கள் முயலகநோய், குட்டநோய், ஈளைநோய், பூதங்களாலும் பேய்களாலு முண்டாகுந் துன்பமாகிய இவற்றினின்றும்நீங்கித் திருவருளைப்பெறுவார்கள். (எ-ம்) (க)

வேறு.

இக்கதை நிறுத்தி யயோத்தியாள் வேந்த
    னினிதொடு சத்திய வாய்மை
மிக்கதொல் வரத்தைப் பெற்றிடுங் காதை
    விளம்புவந் திரைகுதித் தலவு
மைக்கடற் புவியி லெண்டிசை விளங்க
    வளர்ந்திடுங் குலகிரி யெட்டுந்
திக்கினி லெல்லைக் கல்லென நிறுவித்
    தெவ்வரை விருப்பிய தோளான்.

(இ-ள்) இந்தக்கதையை இந்தமட்டோடு நிறுத்தி அயோத்திக்கு அரசனாகிய அரிச்சந்திரன் தன்னுடைய சத்தியவிரதம் நிலைநிற்க வரம்பெற்ற கதையைச் சொல்லுகிறோம். கடல்சூழ்ந்த புவியில் எட்டுத்திக்கிலுமுள்ள

அட்டகுல பருவதங்களையே தன்னுடைய எல்லைக் கற்களாகத் தாபித்து யுத்தத்தை விரும்பிய புயவலியை யுடையவன். (எ-ம்) (௧0)

குரைகட லுடுத்த விருநில வளாகங்
குளிர்மதிக் கடக்குடை நிழற்றித்
திரள்பட மேவு மலகைபேழ் வயிறு
தேக்கிட வேப்பமிட் டுலவ
மருவல ரென்ற மானிடர்க் கிடுக்கண்
வருத்தவெங் கொடியவர் தலைகள்
தரைதனி லுருள்கப் பரையெனக் கிடக்கத்
தாளுதைத் திடறுவெங் களிற்றான்.

(இ-ள்) கடல்சூழ்ந்த உலகமெல்லாம் தன்னுடைய ஆணை செல்லும்படி ஒரு குடைக்கீழ் அரசாட்சிசெய்து யுத்தகளத்தில் வந்து பேய்கள் பிளந்த வாய்கள் நிறைய மாமிசத்தையுண்டு ஏப்பமிட்டுத்திரியப் பகைவர்களுடைய தலைகளும் அடைக்கலம் புகுந்த சனங்களுக்குத் துன்பமுண்டுபண்ணினவர்களுடைய தலைகளும், கப்பரைபோலத் தரையிலுருளும்படி மிதித்து இடறும்படியான யானைகளையுடையவன். (எ-ம்) (௧௧)

இறைவனைப் பரவுங் கருந்தழும் பதனி
னிலங்கிய நீறணி நுதலா
னிறைதரு மலரோன் மாலளந் தறியா
நீட்சியைக் குறுக்கிய வுளத்தான்
மறுவறு வேந்தர் நெருக்கமுற் றுலவ
மகுடமு மகுடமு முரிஞ்சிக்
குறைவறு கனகப் பொடிமலை யெனவே
குவித்திடு கடைத்தலை யுடையான்.

(இ-ள்) சிவபெருமானை, பூமியிலழுந்தும்படி வணங்குதலால் உண்டாகிய கருந்தழும்பில் விபூதியை அணிந்த நெற்றியை யுடையவன். பிரம விட்டுணுக்களால் அளந்தறிய முடியாத சிவபெருமானுடைய நீண்ட வடிவத்தைக் குறுக்கி இடைவிடாது தியானிக்குஞ் சிந்தையை யுடையவன். அரசர்கள் முடிகள் ஒன்றோடொன்று தாக்கிப் பொற்பொடிகளை மலைபோலக் குவிக்கும்படியான அரண்மனை வாயிலை யுடையவன். (எ-ம்) (௧௨)

வரைந்திடா மாதர் குடமுலை தன்வாய்
மடுத்தபான் முலையெனத் தெரிந்தோன்
திருந்திய செங்கோன் மன்னரும் புகழுந்
திகழரிச் சந்திர னென்போன்,
புரந்துபல் லுயிருந் தம்மகப் போலப்
புடவியை யாண்டநா டனக்குச்
சிரந்தொழும் குருவாம் வசிட்டனை நீதித்
திறங்களை வினவிய காலை.

(இ-ள்) தன் மனைவி நீங்கலாக உலகத்திலுள்ள மற்ற எல்லாப் பெண்களையும், தன் தாயைப் பார்ப்பதுபோல் பார்க்கப்பட்டவன். தேர்ந்த நீதியையுடைய அரசர்களும் புகழும்படியான நீதியையுடைய அரிச்சந்திரனென்னும் பெயரையுடைய அரசன் உலகத்திலுள்ள எல்லா உயிர்களையும், தன்னுடைய குழந்தைகளைப்போலப் பாதுகாத்து அரசாட்சிசெய்துவரும் காலத்தில் ஒரு நாள் தன்னுடைய குலகுருவாகிய வசிட்ட மகாமுனிவரை வணங்கி நீதியின் உறுதிகளைக் கேட்டபோது. (எ-ம்) (கங)

பற்பல செய்கை யுரைத்தபின் னவையிற்
பாரினி லுத்தமச் செயலாஞ்
சொற்பிழை யுரையாச் சத்திய விரதந்
தூயபே றிதுவழு வாதே
யற்புதம் விளைக்கு மைம்புலன் வழியை
யடைத்துளந் தன்வச மாக்கித்
தற்பகை யாக்கும் பொய்யிலா மெய்யே
தனக்குத வுறுதியென் றுணர்தி.

(இ-ள்) அம்முனிவர் பல நீதிகளையும் எடுத்துச்சொல்லி 'அரசனே! எல்லா நீதிகளிலும் சொற்றவறாத சத்தியவிரதம் ஒன்றே பரிசுத்தமுள்ள பிரயோசனமாகும். இது தவறாமல் ஆச்சரியத்தை யுண்டுபண்ணும். ஐம்புலன்களின் வழியே செல்லும் மனத்தை அதன்வழிச் செல்லவொட்டாது தன் வசமாகச்செய்து, தனக்குப் பகையை உண்டுபண்ணும் பொய்யை இல்லாது அற்றுப்போகும்படி செய்யுஞ் சத்திய விரதமே, தனக்கு உதவும்படியான உறுதியென்று நீ அறிவாயாக.' (எ-ம்) (கச)

என்றிது கூறத் திருமுடி துளக்கி
யெழிலரிச் சந்திரன் வாய்மை
யொன்றெனு முறுதி யாவதே விரத
மென்றுளங் கொண்டபி னுறக்கந்
தன்றனை யறியாச் சொப்பனந் தனிலுஞ்
சபையெழுந் திசையினு மனிதர்
கன்றியே கூறும் வழக்கினுஞ் சிரமங்
காட்டிய போர்புரி பொழுதும்.

(இ-ள்) என்று வசிட்ட மகாமுனிவர் சொல்ல, அரிச்சந்திரன் தலையசைத்துக்கேட்டு மகிழ்ந்து சத்தியத்தையே விரதமாகப் பூண்டு, சொப்பனத்திலும், ராஜசபை கூடிய இடத்திலும், மனிதர்கள் அனுபவத்தோடு பேசும் வழக்குகளிலும், யுத்தம் செய்யுங் காலத்திலும். (எ-ம்) (கூ)

பாங்கருழிருந்த வாசர்கா ளையர்கள்
பவளவாய் நகைவிளைந் திடவே
தேங்கிய விநோதந் தன்னினு மொருசொற்
செப்புவ தன்றியே யுரையான்
வீங்குநீ ராழி யுலகினின் மெய்மை
விளம்பிடாப் பொய்யரைக் காணி
னேங்கியே நடுங்கிக் காலனைப் போல
வெண்ணியே யுளந்திடுக் கிடுவான்.

(இ-ள்) பக்கத்திலே ராசகுமாரர்கள் சூழ்ந்திருக்கச் செய்யம் நிறைந்த விநோதக் காட்சிகளிலும், ஒரேவிதமாகப் பேசுகிறதேயல்லாமல், வேறு வார்த்தை பேசமாட்டான். கடல்சூழ்ந்த உலகத்தில் பொய் சொல்வோரையும், சொல்லொன்று செயலொன்றாயிருப்பவரையும் கண்டால் நடுநடுங்கிவெறுத்து எமனைப்போல அவர்களை நினைத்து மனவருத்தப் படுவான். (எ-ம்) (கக)

இன்னண நீதி மன்னவ னயோத்தி
யிருந்திடு நாளினொரு முருகன்
பொன்னடிச் சீர்த்தி மகதியாழ் வீணையினிற்
பொருத்திய நாரதன் வரவே
மன்னவ னெழுந்தே யருக்கியம் பிலிற்றி
வழுத்திநின் றிடப்பரங் கிரியின்
மின்னிய புகழுஞ் சத்திய தீர்த்த
மேன்மையும் விரித்துரை செய்தான்.

(இ-ள்) இவ்வாறு சத்தியவிரதனாகி அரசாட்சிசெய்து வருநாளில், ஒரு நாள் முருகக்கடவுளது திருவடிப்பெருமைகளை மகத்துவமுடைய வீணையி லிசைத்துப் பாடும் பெருமைவாய்ந்த நாரத மகாமுனிவர் வந்தார். அவரை யெதிர்சென்று அரிச்சந்திரன் வரவேற்று அருக்கிய பாத்திய முதலிய உபசா ரங்களுடன் பூசித்து வணங்கிநிற்க, நாரதர் திருப்பரங்கிரியின் மகத்துவத் தையும், சத்திய தீர்த்தத்தின் சிறப்பையு மெடுத்து விரித்துக்கூறினர். (எ-ம்)()

சத்திய வாய்மை நோன்பினி லுறுதி
தழைந்தசங் கற்பமிட் டிருந்தோன்
மெய்த்திரு வுதவுஞ் சத்திய கிரியின்
விறுளம் பிடிபட விரும்பி
முத்திதந் தருளுந் தீர்த்தயாத் திரையின்
முயற்சியா லமைச்சரை யழைத்துக்
கத்துதெண் டிரைநீர் நிலவளா கத்தின்
கருமங்க ளியற்றுமென் றறைந்தான்.

(இ-ள்) சத்திய விரதத்தையே உறுதியாகக்கொண்ட அரிச்சந்திரன் கேட்டுச் சத்தியமாகிய செல்வத்தை நிலைபெறத்தரும் திருப்பரங்கிரியின் பெருமையானது மனத்தைக் கவர்ந்துகொள்ள, உடனே மோக்ஷத்தைக் கொடுக்குந் தீர்த்தயாத்திரையில் விருப்பங்கொண்டு, மந்திரிமார்களை அழைத்து, ராச காரியங்களைச் சரியாகப் பார்த்துக்கொள்ளுங்களென்று கட்டளையிட்டான். (எ-ம்) (௰)

கணிதம் பயின்ற வேதியர்கள் காலங் குறிக்கப் பொற்காசு
மணியின் குவையுந் தானைகளின் வகையு மிருளைக் கிழித்தொழுக்கும்
பணியின் றிரளு மானையிலும் பரியின் மேலுங் கூனெழுந்து
திணியு முதுகொட் டகமீதுஞ் செல்லச் சிலர்மா னிடர்போத,

(இ-ள்) கணிதநூற் பயிற்சியுள்ள வேதியர்கள் குறிப்பிட்ட சுபவேளை யில் பொற்காசுகளையும், இரத்தினங்களையும், வஸ்திரங்களையும், ஆபரணங் களையும், யானை குதிரை ஒட்டகைகளின் மேல் ஏற்றிக்கொண்டு சில மனிதர் கள் முன்னே செல்ல. (எ-ம்) (௧௧)

முதிர்ந்த கனகத் தேர்கடவி மொய்க்கு மினத்தார் சிவிகைவரப்
பொதும்ப ரெழுஞ்சத் தியசயிலம் பொருவி லயோத்தி நடுவாக
வதிந்த தலங்கள் புண்ணியநீர் மருவிக குடைந்தந் தணர்வறுமை
வெதும்பும் படிபொன் மழைபொழிந்து விமலர்ப் பழிச்சி யினிதகன்றான்.

(இ-ள்) செருங்கிய சுற்றத்தார்கள் பல்லக்கிலேறிவர, அரிச்சந்திரன் மாற்றுயர்ந்த பொன்னாற்செய்த இரதத்தைச் செலுத்திச் சோலைகள் சூழ்ந்த திருப்பரங்கிரிக்கும் ஒப்பில்லாத அயோத்திக்கும் மத்தியிலுள்ள தலங்களையும், தீர்த்தங்களையும் தரிசித்து மூழ்கி, அங்கேயுள்ள வேதியர்களுக்குச் சொர்ண தானங் கொடுத்து நிர்மலராகிய கடவுளரைப் பணிந்து நீங்கினான். (எ-ம்)(உ0)

அரிய கடவு ளனைவருக்கு மறியாச் சுயம்பு வாகிவிடம்
பருகி யவியா விருத்தனெனும் பரம னிருந்த விருத்தகிரி
மருவி யிருபா லெழுந்தகரை வளைத்துக் கரைத்து வருஞ்சங்கந்
திரைக ளெடுத்தம் மனையாடுந் திருமா மணிமுத் தாறடைந்தான்.

(இ-ள்) சகல தேவர்களும் அறிதற்கரிய சுயம்புவாகிய ஆலாகல விஷத்தையுண்டும் இறவாதிருக்கின்ற விருத்தகிரிநாதர் எழுந்தருளியிருக்கும் விருத்தாசலத்துக்குவந்து, இருகரையும் பெருகிவரும் அலைகள் சங்கங்களை யெடுத்தெறிந்து அம்மனையாடும் மணிமுத்தாநதியை அடைந்தான். (எ-ம்) (உக)

புனிதத் திருநீ ராடிமன்னன் பூதி யணியு நியமமுற்றிக்
கனிதுய்த் திடுந்திம பசுங்குதலைக் கௌரி தலைவன் றிருக்கோயி
வினிதிற் போதச் சந்நிதியி லெழுந்த வன்னி மரத்தின்கீழ்
முனிவர்க் குபதே சங்கள்பல மொழியுந் தவரோ மசமுனிவன்.

(இ-ள்) பரிசுத்தமான அந்தத் தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து விபூதி தரித்து நித்தியகன்ம முடிந்து உமாபதியாகிய பழமலைநாதர் திருக்கோயிலினுள்ளே வரும்போது அங்கே சந்நிதியிலே முளைத்தெழுந்த வன்னி மரத்தின் கீழிருந்து முனிவர்களுக்கு உபதேசஞ் செய்யும் உரோமச முனிவரைக் கண்டு. (எ-ம்) (உஉ)

செய்ய பதத்தை யெடுத்தெடுத்துச் சிரத்திற் சூடிக் கண்ணிலொற்றி
யைய மறவே பழிச்சுநிற்கு மவனை நோக்கி யருட்பார்வை
யெய்தி யுரைப்ப னிலமேழு மெடுக்கும் பொருளையெடுப்பதுண்டோ
மெய்யே மெய்யா தாரமெனும் வேதப் பொருண்மற் றோரறியார்.

(இ-ள்) அவருடைய பாதங்களைச் சிரமேற்சூடிக் கண்ணிலே யொற்றித் துதித்து நின்றான். அப்படித் துதித்துநின்ற அரிச்சந்திரனை உரோமச முனிவர் கிருபையுடன் பார்த்து, ஏழுலகங்களிலுமுள்ள எல்லாப் பொருள்களையும் விலையாகக்கொள்ளும் இரத்தினத்தை விலைகொடு வாங்குவாருண்டோ? அதுபோலச் சத்தியமே உறுதியென்னும் வேதப்பொருளை அனுபவித்து அறிந்தவர்களன்றி மற்றவர்க ளறியமாட்டார்கள். (எ-ம்) (உங)

மெய்மை யகன்று தனக்குறுதி விரும்புந் துணைவர் வேறில்லை
மெய்மைக் கெடுத்து நாடோறும் விளைக்குந் தருமம் பயனில்லை
மெய்மைத் தவிர்ந்து புவிசூழ்ந்து மெலிந்து தேடு நிதியமில்லை
மெய்மை யகற்றி யுடல்வருந்தி விதிக்குந் தவங்கள் வேறில்லை.

(இ-ள்) சத்தியத்தைத் தவிரத் தனக்குறுதிதருந் துணைவேறில்லை. ஒருவன் சத்தியத்தைக் கெடுத்துத் தினந்தினம் எவ்வளவு உயர்ந்த புண்ணியத்தைச் செய்தாலும் ஒருபயனையு மடையமாட்டான். ஒருவன் சம்பாதிக்கக் கூடிய பொருள் சத்தியமே யல்லாமல் வேறுபொருளில்லை. சத்தியத்தை நீக்கிச் சரீரத்தை வருத்திச் செய்யப்பட்ட தவங்களும் வேறில்லை. (எ-ம்)(உச)

பகர்சத் தியத்தை விட்டுண்மைப் படுத்துங் கேள்வி யாதுநலந்
தொகுசத் தியத்தை விட்டுமன்று தோயும் புனித நீர்யாது
தகுசத் தியத்தை விட்டுநின்று தழலை வளர்க்கு மகம்யாது
திகழ்சத் தியத்தைவிட்டவர்க்குத் தெரிசற் குணங்கள் யாதுமன்றே.

(இ-ள்) அரசனே! ஒருவன் சத்தியத்தை விட்டுவிட்டு எவ்வளவு உண்மையான பொருள்களைக் கேட்டாலும் அது கேள்வியாக மாட்டாது. எத்தனை புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்தாலும் அது ஸ்நானம் ஆகமாட்டாது. எத்தனை யாகங்களைச் செய்தாலும் அது யாகமாகமாட்டாது. எத்தனை குணமிருந்தாலும் அது உத்தமகுண மாகமாட்டாது. (எ-ம்) (உரு)

மேலாய் விளங்குந் தருமத்துள் வேள்வி மெய்யுட் கேட்டியொன்று
மேலா தாயின் வரும்பலருக் குபகா ரத்தைத் தராசிலிட்டுக்
கோலா னிறுக்கச் சமனாகுங் குற்ற மில்லாச் செயலிரண்டும்
வேலா வலையத் தேபுரிதி வேந்தர் மகுடம் பொருந்தாளாய்.

(இ-ள்) அரசனே! கேட்பாய். தருமங்களுக்குள் யாகமுஞ் சத்தியமு மேலாகப் பிரகாசிக்கும். உன்னிடத்து நாம் சொல்வது ஒன்றும் பொருந்தாதாலும் பலருக்கும் வரும் பயன்களை மனமாகிய தராசிலிட்டு நீதியாகிய கோலால் நிறுத்தால், மேற்கூறிய இரண்டுஞ் சமமாகுமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். ஆதலால் இவ்விரண்டு செயல்களையும், கடல்சூழ்ந்த உலகத்திலே நீ செய்யவேண்டும். (எ-ம்) (உசு)

குலவுங் கடவுட் பழம்பாடல் கூப்பிட் டாற்றுஞ் செயலிரண்டு
மூலகிற் கொண்டாய் நினக்குவமை யுரைக்கற் பாற்றோ விதுவன்றி
யிலகுஞ் செயலொன் றுத்தமமா மிமையோர் முதலா மாலயனு
முலரிட் டிறைஞ்சுஞ் சிவபூசை வழுவா தியற்றி வழுத்துதியால்.

(இ-ள்) விளங்காநின்ற வேதங்களெல்லாம் பெருமுழக்கமிட்டுச்சொல்லு மிவ்விரண்டு தருமங்களையு மிவ்வுலகில் நீ கைக்கொண்டாய். ஆனால் உனக்குச் சமத்துவமுடையவர் இல்லை. இதுவல்லாமல் இன்னுமொரு செயலு முயர்ந் தது. அதாவது: பிரமவிஷ்ணு முதலியவர் அருச்சனைசெய்து வணங்குஞ் சிவ பூசையாம். அந்தப் பூசையும் நீ வழுவாது செய்தல் வேண்டும். (எ-ம்) (உஎ)

கன்னி ரெழுந்த திருமலையிற் காண வுபருஞ் சிமயவரை
தன்னீர் குகையிற் றிவ்வியமாந் தலத்தி லுலகிற் புராதனமா
நன்னீ ராற்றங் கரையினறு வனத்தின் முனிவர் நண்ணிடத்தின்
முன்னீ ருடுத்த நிலம்பிளந்து முளைக்கு மிலிங்க நறுந்தொடையாய்.

(இ-ள்) அரசனே! கல்லின் குணமுடைய கயிலாசமலையினுள்ள ஒப்பற்ற குகையிலும், தெய்வதன்மை பொருந்திய இடங்களிலும், உலகத்திற் பழமையாகிய பரிசுத்தமான ஆற்றங்கரையிலும், நல்ல வனத்திலும், முனிவர்கள் இருக்கு மிடத்தினிலும் பூமியைப் பிளந்து சுயம்புலிங்கம் உண்டாகும்.(எ-ம்)()

புனிதக் கடவுட் சுயம்புலிங்கம் பூசைப் பயனை மிகவுதவு
மினிதிற் செறியுஞ் சுயம்புடனே யிலங்குஞ் செவ்வே ளுவந்தருளுந்
தனிபெற் றகிலம் புகழுமொரு தலங்கூ றுதுங்கேண் மதியினிமை
கனியப் பழுத்து மதுப்பிலிற்றிக் காட்டுஞ் சுவைசேர் தமிழ்க்கூடல்.

(இ-ள்) சுயம்புலிங்க பூசை மிக்கபயனையுண்டாக்கும். சுயம்புலிங்கத் துடனே முருகக்கடவுளும் விரும்பி யெழுந்தருளியிருக்கும் ஒப்பற்ற தலமிருக் கிறது. அதைச் சொல்லுகிறோம் கேட்பாயாக. முதிரப்பழுத்துத் தேன் சொரிகின்ற தமிழ்ச்சுவையை யெடுத்துச் சொல்லக்கூடிய அறிவுடையோர்க ளிருக்கின்ற மதுரைக்கு. (எ-ம்) (உகூ)

நிருதித் திசைகா லோசனையி னிகழ்சத் தியஞா னச்சயில
மருவு வாயு வொருகாலம் வளருங் கந்த மாதனத்துத்
தருமச் சிமையம் பறித்தெறியத் தரையில் விழுந்திக் குமரன்மகிழ்
புரியு முதன்மைப் பரங்கிரியின் புகழை யாமோ புகழ்வோமே.

(இ-ள்) நிருதி (மேற்கு) திசையிலே காலோசனை தூரத்துக்கப்பால் சத்திய ஞானகிரி யென்னும் மலையொன்றிருக்கிறது. அந்தமலை வாயுவினுல் ஒருகாலத்தில் கந்தமாதனமலையினின்று பறித்தெறிந்த சிகரமாகிய திருப்பரங் கிரியாகும். அதிலே முருகக்கடவுள் எழுந்தருளியிருக்கின்றார். அதன் பெரு மையை அளவிட்டுச்சொல்ல முடியாது. (எ-ம்) (௩௰)

குவட்டின் குடுமி யிடத்தூறிக் குலவும் வடபா லூற்றெழுந்தே
யுவட்ட வருசத் தியகூவ முற்றுக் குடைந்தி சனைநோக்கந்
தெவிட்டத் தாரா வழகுடைய செவ்வேள் பதத்தைப் பவச்சலதி
துவட்டப்பணிவோர்முனிவருக்குத் தோன்றவரிதாங்கதியடைவார்.

(இ-ள்) அம்மலையின் உச்சியின் வடபக்கத்தில் ஊற்றெடுத்து நீர் நிறையப் பெருகுஞ் சத்தியகூவ மென்னுமொரு தீர்த்தமிருக்கிறது. அதிலே ஸ்நானஞ்செய்து நித்திய கர்மங்களாகிய நியதிகளைமுடித்து, அங்கே சுயம்புவாகிய சிவலிங்கப்பெருமானையும், கண்ணுக்கடங்காத அழகுடைய முருகக் கடவுளையும் பூசைசெய்து தோத்திரஞ் செய்வோர் சனனமாகிய கடலைக் கடந்து முனிவர்களும் எய்துதற்கரிய மோக்ஷத்தை யடைவர். (எ-ம்) (கூ)

குளிரும் புயல்சூழ் பரங்கிரியைக் குறித்து விரைவிற் போந்தறிவு
தெளியும் படிநா ரதனிசைக்குஞ் செயன்மா றாது சத்தியநீ
ரொளிருந் தீர்த்த மாடியுரை யொன்றாத் தவஞ்செய் குவைநாளு
நளிர்சேர் மாசி மகத்தாட வருது மென்றா னரபதியும்.

(இ-ள்) ஆதலால் நாரதமுனிவர் சொல்லியபடி குளிர்ச்சியைச் செய்யு மேகங்கள் சூழ்ந்திருக்கின்ற திருப்பரங்கிரிக்குச்சென்று சத்தியகூவ தீர்த்த மாடி, மௌனமாயிருந்து தவஞ்செய்து கொண்டிருப்பாய். நாமும் குளிர் மிகுந்த மாசி மகத்துக்கு நீராட அங்கு வருகிறோமென்று உரோமச முனிவர் சொன்னார். அதைக்கேட்ட அரிச்சந்திரமகாராஜன். (எ-ம்) (கஉ)

இமிழுந் திரைக்கங் காதரனை யென்றும் பெரிய பிராட்டியுடன்
றமிழுந் துதைய முறக்கவிழ்ந்து நிறைதேன் குதிக்கு மலர்தூவி
யமுதம் பொலியுந் தனதுபெய ரணியா பரணத் தெழுதிநீர்
குமுறப் பணிமூச் செறிந்தசடைக் குழக னணியச் சாத்துவித்தான்.

(இ-ள்) விருத்தாசலத்துக்கு வந்து முழங்குகின்ற நீர்நிறைந்த கங்காதர ராகிய பழமலைநாதரையும், பெரிய நாயகியம்மையையும், வண்டுகளும் நெருங்க வாய்விரிந்து தேனிறைந்த மலர்களா லருச்சனைசெய்து வணங்கித் துதித்துத் தன் பெயரெழுதிய பொன்மாலையைக் கங்காநதி பெருமுழக்கஞ்செய்ய மூச்சு விடும் சர்ப்பாபரணந்தரித்த சடையையுடைய பழமலைநாதருக்குச் சாத்துவித்து, அவ்விடத்தைவிட்டு நீங்கி. (எ-ம்) (கந)

அடிக்கைப் புலியம் பதஞ்சலியஞ் சலிக்க வொலிக்கப் பதஞ்சலிக்க
நடிக்குஞ் சிவனைத் தனுமாத நாளா திரையிற் போற்றியே
யிடிக்கொத்திரைக்குங் கரியுரிவை யிருக்கும்போர்வைச் சிவதலங்கள்
படிக்கட் பலவுந் தொழுதரசன் படர்ந்து பரங்குன் றணுகினனால்.

(இ-ள்) சிதம்பரத்துக்கு வந்து, வியாக்கிரபாத முனிவரும் பதஞ்சலி முனிவரும் வணங்கி நிற்பப் பெருமுழக்கத்தோடு திருவடி சலிக்கும் பஞ்ச கிருத்திய நடனஞ்செய்யும் நடராசப்பெருமானை மார்கழி மாதம்வருந் திருவாதிரை நக்ஷத்திரத்தன்று தரிசனஞ்செய்து திரும்பி இடிபோல் முழங்கும் யானைத்தோலைப் போர்த்துக்கொண்ட சிவபிரான் வசிக்கும் பற்பல சிவஸ்தலங்களை ஆங்காங்கே தரிசித்து அரிச்சந்திரன் திருப்பரங்கிரிக்கு வந்து சேர்ந்தான். (எ-ம்) (௬௪)

கமஞ்சூ லுளைந்து வயிறுடையக் கார்மே கங்கள் விழிதுயிலச்
சுமந்த குடுமிக் கூன்கிடக்குங் கரும்பு நெரிந்து சொரிதரளஞ்
சமஞ்சேர் காமன் விடுமுல்லை தைக்க வெருவி யொதுங்குமின்னார்
அமைந்தமுலையிற் புரண்டிடவே யழலின்பொறியென் றகற்றிடுவார்.

(இ-ள்) நிறைந்தசூல் கொண்ட மேகங்கள் வயிறுடையத் தவழ்ந்து நித்திரைசெய்ய, அம்மேகங்களைத் தாங்கிய மலையுச்சியில் வளைந்துகிடக்குங் கரும்புகள் நொறுங்கிச் சொரிகின்ற முத்துக்கள் மன்மதனுடைய கருப்பு வில்லிலிருந்து தொடுக்கப்பட்ட முல்லை மலராகிய பாணத்துக்குப்பயந்து ஒதுங்கும் பெண்களுடைய மார்பில்வந்து புரள, அம் முத்துக்களைக் காமவெப்பத்தால் தீப்பொறி யென்று எறிவார்கள். (எ-ம்) (௬௫)

முகைவிண்டலர்ந்த முண்டகத்தீ முளைத்தபொகுட்டுப் பசுங்கனகந்
தொகைகொண் டதன்சூழ் கிடந்தவண்டு சூழுங் கரியா மதன்மீது
புகுதுஞ் சோலை நெட்டையின்வால் பொருக்கிற் பிடித்து நக்கியவாய்த்
தருமற் கடங்கம் மியமூதுங் குழல்போற் கரைசூழ் தடம்பலவே.

(இ-ள்) மொட்டலர்ந்த செந்தாமரை மலர்கள் தீப்போலவும், அதன் பூங்கொட்டைகள் தங்கம் போலவும், அதைச்சூழ்ந்து கிடக்கும் வண்டுகள் கரி போலவும், நீண்ட வாலோடுபோய் விரைவிற் பிடித்து, அத்தாமரையிலுள்ள தேனை நக்கும் குரங்குகள் குழல்வைத்தூதும் பொற் கொல்லர்களைப் போலவும் சிறந்த பல தடாகங்கள் விளங்கும். (எ-ம்) (௬௬)

வேறு.

இத்தகை பொலிந்து சீத மெடுத்தெடுத் தருவி தூற்ற
முத்தருள் பரங்குன் றெய்தி மொய்த்தபொன் னிரத மோர்சார்
வைத்தவ ணிழிந்து கேளிர் மானிட ருடுத்து லாவச்
சத்திய தீர்த்தம் போற்றித் தருவிருப் புடனே தோய்ந்தான்.

(இ-ள்) இத்தகைய சிறப்புவாய்ந்து குளிர்ச்சியைச் செய்யும் அருவிமுத்துக்களை வாரி யிறைக்குந் திருப்பரங்கிரிக்கு வந்து தன்னுடைய ரதத்தையும், சேனைகளையும் ஒருபக்கத்தில் நிறுத்திச் சுற்றத்தாரும், மற்றைமனிதரும் சூழச்சென்று, சத்திய தீர்த்தத்தைத் துதித்து மிகுந்த விருப்பத்தோடு ஸ்நானம் செய்தான். (எ-ம்) (௧௭)

பசுங்கன கந்தங் கந்தம் பாய்தரு மார மாரம்
பொசிந்தொளி யறாத கையாற் பூசுரர் தமக்கு நல்கிக்
கசிந்திடு நீல கண்டன் கந்தவேள் கோயிற் போத
வசைந்தசைந் *துகண்ட வேணி யருட்கவு தமனைக் கண்டான்.

(இ-ள்) பசுமையான சொன்னங்களையும், வாசனை வீசுகின்ற சந்தனங்களையும், முத்துக்களையும் கசிந்து பிரகாசம் நிரம்பியகையால் வேதியர்களுக்குத் தானங்கொடுத்து நீலகண்டத்தையுடைய சிவபெருமானையும், முருகக்கடவுளையும் தெரிசிக்கக் கோயிலினுள்ளேவரும்போது அசைந்தசைந்து துள்ளிய சடையினையுடைய திருவருட் செல்வராகிய கௌதம மகாமுனிவரைச் சந்தித்தான். (எ-ம்) (௧௮)

செங்கையங் கஞ்சங் கஞ்சக் கடவுளின் சென்னி யேந்து
மங்கைபா கனைப்போ லுற்ற மாதவன் பாதம் போற்றி
யங்குமா ணவரை நோக்கி யஞ்சலித் தவனை நோக்கி
மங்கல முடனே வாழி யென்றமா தவன்பின் சொல்வான்.

(இ-ள்) செந்தாமரை மலர்போன்ற தமது திருக்கரத்திலே பிரமகபாலத்தைத் தாங்கும் உமாதேவி பாகராகிய சிவபெருமான் பிரசன்னமானது போல் வந்த அக் கௌதம மகாமுனிவருடைய பாதங்களிலே விழுந்து வணங்கி, அவர் சீடர்களையுங் கைகூப்பித் தொழுது நின்றான். அப்படித் தொழுதுநின்ற அரிச்சந்திரனைக் கௌதம மகாமுனிவர் பார்த்து அரசனே! நீயெக்காலமும் மங்கலமாக வாழக்கடவாயென்று ஆசீர்வதித்துப் பின்னும் சொல்லுகின்றார். (எ-ம்) (௧௯)

* உகண்ட—துள்ளிய.

இன்னிசை மகதி யாழ்க்கை யிருந்தவன் பிருந்த வஞ்சொன்
முன்னிமுன் செய்த நோன்பு மூட்டிய பயனால் வந்தாய்
மன் னுசத் தியசீர் தோய்ந்து வரந்தரு மிறையைப் போற்றிப்
பொன்னெழுங் கோயில் செய்து விழாவையும் புரிதி யென்றான்.

(இ-ள்) இனிய இசைகளைப் பாடும் ஒருவகை வீணையாகிய மகதியாழைக் கையிலே தாங்கிய அன்புருவத்தைப் பெற்ற பெருந்தவத்தினையுடைய நாரத மகாமுனிவர் சொற்படி பூர்வ தவப்பயனால் நீ இங்குவந்தாய். சத்திய தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து சிவபெருமானையும், முருகக்கடவுளையுந் துதித்துக் கோயிலுஞ் செய்து திருவிழாவும் நடத்தித் தரிசனஞ் செய்யென்று, கௌதம மகாமுனிவர் சொன்னார். (எ-ம்) (சய)

அந்தவாய் மொழிகொண் டிரெட் டாயதோர் வரிசை யேத்தி
யெந்தையாஞ் சிவனைச் செவ்வே ளடியிரு போதை மூப்போ
தந்தன துளத்து நீங்கா தூவகையிற் பூசை செய்தே
கொந்தவிழ் மயனைக் கூவிக் கோயிலைக் கிளத்தி யென்றான்.

(இ-ள்) அரசன் அப்பணியைச் சிரமேற்கொண்டு சோடசோபசாரங்களுடன் சிவபெருமானையும், முருகக்கடவுளையும் முக்காலமும் இடைவிடாத அன்போடு பூசைசெய்து தேவகம்மியனை அழைத்துச் சிற்பநூல் விதிப்படி ஆலயஞ் செய்யும்படி உத்தரவு செய்தான். (எ-ம்) (சக)

ஏழாவது அரிச்சந்திரச் சருக்கம் முற்றிற்று.

ஆகச் சருக்கம் எ-க்குக் கூடிய செய்யுள் ருடுக.

---

எட்டாவது

# திருவிழாச் சருக்கம்.

---

தரணியாண் டருளச் சந்தி ரன்பணி
சிரமிசைச் சேரவே தேவர் கம்மியன்
பரமன்வே லவனுட னுதிப் பண்ணவர்
குருவுமிழ் சினகரங் குயிற்று வானரோ,

(இ-ள்) உலகத்தை யரசாட்சி செய்து காக்கின்ற அரிச்சந்திர மகாராசன் உத்தரவைச் சிரமேற்றாங்கிக் கொண்டு தேவதச்சனானவன் திருப்பரங்குன்றத்தினிடத்துச் சிவபெருமானுக்கும்,முருகக்கடவுளுக்கும்,மற்றைத் தேவர்களுக்கும் பிரகாசம்பொருந்திய கோயில் செய்யத்தொடங்கினான் (எ-ம்) (க)

வண்டுளர் முகையவிழ் மாலைத் தேவியைத்
தண்டுணா ரிதழியான் சார்ந்து மாமணங்
கொண்டநா ளியற்றிய கோல மென்னவே
விண்டொடு மண்டபம் பலவி யற்றினான்.

(இ-ள்) வண்டுகள் முழங்க அரும்புவிரிகின்ற பூமாலையணிந்த பார்வதி தேவியைக் குளிர்ந்த பூங்கொத்துக்களையுடைய கொன்றைமாலை யணிந்த சிவபெருமான் மணக்கோலஞ் செய்துகொண்ட மண்டபம்போல ஆகாயத்தை யளாவிய பல மண்டபங்களை யுண்டாக்கினான். (எ-ம) (உ)

தரைவிசும் பளவிடச் சமைத்தல் போனடுப்
பெருகுபொற் சூளிகை பெரிய செங்கதிர்
மருவுநாற் கோணமாய் வகுத்துப் பார்த்தென
விருபரி வேடத்தின் மதிளி யற்றினான்.

(இ-ள்) அந்த மண்டபங்களுக்கு நடுவே மண்ணுலகத்தினின்றும் விண்ணுலகத்தினுயரம் இவ்வளவென்று அளப்பதற்குச் செய்ததுபோல, சூளிகை மண்டபத்தைச் சிவந்த கிரணங்களுடைய பொன்னாலே நாற்கோணமாகச் சிருட்டித்து, அதன்மேல் சூரிய சந்திரர்களைச் சூழ்ந்த பரிவேடம் போல் நான்கு பக்கத்திலும் திருமதிலையுமுண்டாக்கினான். (எ-ம்) (ங)

தோடவிழ் கடம்பனைத் துதிக்க வந்திடும்
பீடுசேர் கதிர்ப்பரி பிணித்து வைத்திட
நாடியே பழுவமார் தறியை நட்டென
நீடிய கொடிக்கம்ப நிறுவி னனரோ.

(இ-ள்) கடப்பமாலையணிந்த முருகக்கடவுளைத் தரிசிக்க வரும்போது சூரியன் தன்னுடைய குதிரையைக் கட்டிவைக்க ஏற்படுத்திய பழுக்கள் நிறைந்த நீண்ட கட்டுத்தறிபோலத் துஜஸ்தம்பத்தை யுண்டாக்கினான். (எ-ம்)

பிங்கலன் புட்பகம் மகவன் பேரொளி
பொங்கிய விமானங்கள் பொலிய வைத்தென
இங்கெழு குமரவே ளிமைய வர்க்கெலாஞ்
செங்கதிர்ச் சிகரிகள் செலுத்தி னனரோ,

(இ-ள்) குபேரனுடைய புட்பக விமானத்தையும், இந்திரனுடைய பிர காசம் பொருந்திய விமானத்தையுங் கொண்டுவந்து வைத்தாற்போல முருகக் கடவுளுக்கும், மற்றப்பரிவார தேவதைகளுக்கும் செவ்விதாகிய விமானங்களை யுண்டாக்கினான். (எ-ம்) (ரு)

பரன்றிகழ் குமரனைப் பணிந்து ளோர்சிவ
புரம்பெற வழிசமைத் தெனப்பொற் கோபுர
முரங்கொள்விண் முகட்டினை யுடைத்து மப்புற
நிரம்பிட வேணியை நிகர்த்து நின்றவே.

(இ-ள்) சிவபெருமானையும், முருகக்கடவுளையும் வணங்கினவர்கள் சிவ புரத்திற்கேக ஏற்படுத்திய வழியைப்போலச்செய்த அழகிய கோபுரங்கள் வலிமைதங்கிய ஆகாயத்தினுச்சியைப் பிளந்தும் அதன்மேலுஞ் செல்லாநின்ற ஏணியை யொப்பாக நின்றன. (எ-ம்) (சு)

வாலொளி துளுமபிய வெள்ளி மால்வரை
மேலெழு தந்தையை நோககி வேலவன்
சாலவழ் தென்கிரிச் சமைத்த கோயிலைக்
கோலவெங் கதிர்பழுத் திடக்கு யிற்றினான்.

(இ-ள்) வெள்ளியங்கிரியிலிருக்குஞ் சிவபெருமானைத் தரிசித்துக் கொண்டு வடக்கு முகமாக இருக்கும் முருகக்கடவுளது அழகிய திருப்பரங்கிரி யினிடத்துச்செய்த கோயிலை முழுமையும் பொன்மயமாகச் செய்தான். (எ-ம்)

எயிற்றுவெண் குடுமிதேய்ந் தெனநா ணுறக்
குயிற்றுதாட் டாமரைப் பரமன் கோயிலைக்
கயிற்செறி வேலுடை மகனைக் காண்குற
எயிற்செறி கீட்டிசை யிலங்கச் செய்தனன்.

(இ-ள்) விஷ்ணுவாகிய பன்றியின் பல்லினது உச்சிநுனி தேய்ந்து நாணமடையச் செய்த பாததாமரைகளையுடைய சிவபெருமான் கீழ்த்திசை யில் வேலாயுதத்தைக் கையில்வைத்திருக்குந் தன் குமாரனாகிய முருகக் கடவு ளைக் கிழக்கு நோக்கிப் பார்ப்பதற்காக மேற்குப்புறத்தில் அச்சிவபெருமா னுக்கு ஆலயஞ்செய்தான். (எ-ம) (அ)

பனிவரை யீன்றிடுங் குதலைப் பைங்கிளி
யினிதொடு திகிரிசங் கேந்து வோன்குகன்
றனையெழில் கண்டிடச் சார்ந்த தேவர்க
ளினிதுறச் சினகர மியற்றி னனரோ.

(இ-ள்) அதற்குப்பக்கத்தில் இமையமலையாகன் பெற்ற பார்வதி தேவியாரும், இனிமையாகச் சங்குசக்கரத்தை யேந்திய மகாவிஷ்ணுவும், முருகக்கடவுள் அழகைத் தரிசிக்கவந்த மற்றைப்பரிவார தேவதைகளும் மகிழ்ச்சியோடிருக்க ஆங்காங்கு விதிப்படிகோயிலுண்டாக்கினன். (எ-ம்) (கு)

வேறு.

இவ்வகை யியற்ற ஞாலத் திறைவன் களிப்பு மேவிக்
கொவ்வைவா யுமையாள் பாகன் குமரவேள் விழாவின் வீதி
செவ்விதிற் புரிதி யென்னத் தேர்பல மேருச் சோதி
வவ்விடப் பந்தர் சூழ மயன்றிரு வீதி செய்தான்.

(இ-ள்) இந்தவிதமாகச் செய்த சிற்பவன்மையைக் கண்டு உலகத்துக்கு ராஜாவாகிய அரிச்சந்திரன் களிப்படைந்து சிவபிரான் உமாதேவி முருகக்கடவுள் ஆகிய மூவருக்குந் திருவிழா வியற்றுதற்குத் தெருக்கள் முதலியவற்றை நிருமிக்கக் கட்டளையிட்டான். உடனே மயனும் மேருகிரி போலும், பொன்மயமாகிய இரதங்கள் பட்டினத்தைச் சூழ்ந்துவர நான்கு பக்கமும் பந்தல்கள் சூழத் திருவீதிகளை உண்டாக்கினன். (எ-ம்) (ய)

காமெழு மாலை நாற்றிக் கதிர்பொலி யாடி சூட்டி
வாமொளி பெருக வோங்கு மண்டப விதானஞ் செய்து
தேமெழு மாலை வீக்கு மாவணஞ் சிறந்த வீதி
தாமழ காகச் செய்து திருவிழாத் தயங்கச் செய்தான்.

(இ-ள்) வாசனைபொருந்திய நறுமலர் மாலைகளையுங் கண்ணாடி முதலியவற்றையுங் கோத்துத்தொங்கவிட்டு மிகுந்த பிரகாசம் நிறைய உயர்ந்த மண்டபங்களில் மேற்கட்டி கட்டிப் பூமாலைகள் தூக்கும் கடைவீதி முதலியவீதிகளும் அலங்காரம்பெறச்செய்து திருவிழா நடாத்தும்படி செய்தான். (எ-ம்) (யக)

தொல்லையங் கடவுட் பாடற் சுருதியா கமநூல் கூறும்
எல்லவிர் குடுமிச் செந்தீ யியற்றிய வேள்வி யாவும்
புல்லுவோ ராதி சைவர் புகன்றசிந் தியமென் றுண்மை
சொல்லுமா கமத்து நீதி தொகுத்திடும் விதிவித் தாக.

(இ-ள்) (அதுகண்ட அரசன் மகிழ்ந்து) பழமையாகிய தெய்வத் தன்மை பொருந்திய வேதசிவாகமங்களிலே கூறப்பட்ட ஓமாக்கினியோடு கூடிய பல பல யாகவகைகளைச் செய்துமுடித்த ஆதிசைவர்களைக் கொண்டு சிந்தியம் என்னும் சிவாகமத்திற் சொல்லும் விதியே யாதாரமாக. (எ-ம்) (யஉ)

ஈற்றுநா ளடுத்த நாளி னெழிற்கொடி யேற்றிச் சோதி
தோற்றுபா லிகைவித் தேற்றி முளைதாத் தூற்றி வேதம்
போற்றிய கடவுள் வாழ்த்துப் பூசையை யியற்றிப் பின்ன
ராற்றல்சேர் விதிய தாக வணிவிழா நடத்துங் காலை.

(இ-ள்) உத்திரட்டாதி நட்சத்திரத்திலே முருகக்கடவுளுக்குத் திருவிழாத் தொடங்கிக் கொடியேற்றுவித்துப் பிரகாசம்பொருந்திய பாலிகையிலே முளைதெளிப்பித்து வேதங்களெல்லாம் வணங்கும் விநாயகரை வாழ்த்திப் பூசை செய்வித்து முருகக்கடவுளை வீதியிலே யெழுந்தருளுவித்த காலை. (எ-ம்) (யரு)

சல்லரி திமிலை பேரி தக்கைமத் தளஞ்சே கண்டி
சொல்லெழு தடாரி மிக்க துந்துமி தவண்டை யோடு
புல்லுமல் லாரி யோசைக் கிடுபிடி தவில்கள் போர்மா
வல்லிசை டமாரம் வாசி மூக்கிலை மணியீ ராணம்.

(இ-ள்) சல்லரி, திமிலை, பேரி, தக்கை, மத்தளம், சேகண்டி, தடாரி, துந்துமி, தவண்டை, பம்பை, கிடுபிடி, தவில், பொருகின்ற பெரியவல்லோசையுடைய டமாரம், வாசிமூக்கு வீராணம். (எ-ம்) (யச)

இன்னபல் லியங்க ளாழி யெனக்கிடந் தொலிக்கச் சோதி
மன்னுசெங் குடுமிச் சேவல் வளர்கொடி வலனிற் போத
மின்னனை யார்கள் கோடி விதம்பெற நடித்துச் சூழப்
பொன்னணி மார்பன் வேதன் புங்கவர் போற்றி னூரால்.

(இ-ள்) இவை முதலான பல வாத்தியங்கள் கடலொலிபோல் முழங்கச் சிவந்த உச்சியையுடைய செவ்விய கோழிக் கொடி வலப்பக்கத்திலேவர மின்னல் போலும், பெண்கள் பலர் பக்கத்திற் சூழ்ந்து நடனஞ் செய்துவர, விஷ்ணுமூர்த்தியும், பிரமதேவரும், தேவர்களும் துதித்தார்கள் (எ-ம்) (யஇ)

மூவிரு நாள்வி ழாவின் முருகவே ளுடனே யீசன்
வாவிய விடையி லேறி வந்திட வீதி யெல்லா
மோவியங் குயிற்ற முன்றி லொளிவிளக் குடனே கும்ப
மேவமர் முனிவர் விண்ணோர் மேதினி யோர்கள் சூழ்ந்தார்.

(இ-ள்) ஆரும்நாள் உற்சவத்தில் முருகக்கடவுளுடனே சிவபெருமானும், உமாதேவியும், ரிஷபாரூடராய் எழுந்தருளி வர வீதிகளெல்லாம் சித்திரப் பதுமைகளால் அலங்காரம் செய்திருப்ப ஒவ்வொரு வீட்டு வாசல்களி

னும் தீபமும் பூரணகும்பமும் விளங்கின. அப்போது தேவரும், முனிவரும், மனிதரும் சூழ்ந்து துதித்து வந்தார்கள். (எ-ம்) (௱௬)

வேறு.

எரிபொங்கிய வெயிலைச்சுடு மிளமூரலை யுடையோய்
வரிதங்கிய சுடர்முத்தலை வடிவேல்வல னணிவோய்
கரியின்றிரு வுரிபோர்த்தொளி கனலுந்தழ லுருவோ
யரிதங்கிய கணையாயென வறைவாரொரு கோடி.

(இ-ள்) பிரகாசம்பொருந்திய திரிபுரங்களைச் சுடுகின்ற புன்சிரிப்புடையவனே! வண்டுகள் தங்கிய ஒளியுடைய மூன்று கவருள்ள சூலாயுதத்தை வலப்பக்கந் தரித்தவனே! யானைத்தோலைப்போர்த்த பிரகாசம் நெருங்கும் அக்கினி சொரூபமுடையவனே! விஷ்ணுவாகிய பாணத்தையுடையவனே! என்று அநேகர் தோத்திரஞ்செய்வார். (எ-ம்) (௱௭)

குளிருங்கடல் சுவறும்படி கூர்வேல்விடு முரவோய்
பிளிரும்படி வருசூருயிர் பிதிருஞ்சமர் புவோய்
வெளிருந்தமிழ் தெரிவோனொரு விளப்புந்துதி புனைவோய்
நளிர்பொங்கிய விழியாயென நவில்வா ரொருகோடி.

(இ-ள்) குளிர்ச்சி தங்கிய சமுத்திரம் வற்றும்படி வேலாயுதத்தை ஏவிய வலியுடையவனே! ஆரவாரஞ்செய்து வருகின்ற சூரபன்மனுடைய உயிர் உடைபடும்படி யுத்தஞ்செயபவனே! சுத்தமாகிய தமிழ்மொழியைத் தெளிந்த புலவராகிய அருணகிரிநாதர் சொல்லுந் திருப்புகழ் மாலையை யணிந்தவனே! குளிர்ச்சி தங்கிய கருணைக் கண்களையுடையவனே! யென்று அநேகர் தோத்திரஞ் செய்வார்கள். (எ-ம்) (௱௮)

தொழுவார்சிவ யோகத்தவர் சுடர்வேலனை யெதிர்ந்தே
மழுவார்கரன் மதலாயருள் வழங்காயெனப் பதமேல்
விழுவார்பர வசமாயுடல் விதிர்த்தேமொழி குளறி
யழுவார்குரு பரவென்றிசை யருள்வார்மனந் தெருள்வார்.

(இ-ள்) காந்திதங்கிய வேலாயுதக்கடவுளெதிர் நின்று சிவயோகிகள் வணங்கி மழுவாயுதந்தரித்த சிவபிரானுடைய மைந்தனே! கருணை செய்வாயென்று திருவடியினிடத்துக் கீழே விழுந்து நமஸ்காரஞ்செய்து பரவசமாகியுடல் நடுங்கி வாய்குளறி யானந்தக்கண்ணீர் சொரிந்து ஞானதேசிகனே! யென்று இசைப்பாட்டுகள் பாடி மனத்தெளிவடைவார்கள். (எ-ம்) (௱௯)

பணிவார்விசும் புறைவோர்மனம் படியக்குக னிருதா
ளணிவார்புல னைந்தின்வழி யடுவார்நிடைந் தனுகத்
துணிவாரருள் விளைவானது தோற்றிக்களி துளங்கித்
தணிவார்மனை மேலாசையைத் தடுப்பார்வினை கடுப்பார்.

(இ-ள்) தேவர்கள் முருகக்கடவுளுடைய இரண்டு பாத தாமரைகளையும் மனங்கசிய வணங்கித் தலையிலே தரித்துக்கொள்வார். பஞ்சேந்திரியங்களின் வழியைக் கெடுப்பார். குமாரக்கடவுளை நெருங்கியணுகத் துணிந்து போவார் திருவருள் விளைவு தோற்றப்பட்டுச் சந்தோஷித்துத் தாழ்ந்து நிற்பார். மனைவிமக்கள்மே லாசையைத் தடுப்பார். தீவினைகளைக் கெடுப்பார். (எ-ம்) (உ௰)

சூழ்வார்தவ ராசத்தவர் தூரத்திடு தருப்போற்
றாழ்வார்குரு பரனெழில தங்கண்விருந் தருந்தி
வாழ்வார்சிவ ஞானமுத மாந்திக்களிக் கடலி
லாழ்வார்தம தாகதைக்கட லகல்வார்துதி புகல்வார்.

(இ-ள்) தவசிகளுக்குள் உயர்ந்த தவசிகள் குமாரக்கடவுளைப் பிரதக்ஷிணஞ்செய்து அடியற்ற மரம்போல் விழுந்து வணங்குவார். அக்குமாரக்கடவுள் திருவழகைத் தமது கண்களிகூரப்பார்த்துப் பெருவாழ்வடைவார். சிவஞானமாகிய அமுதத்தையுண்டு சந்தோஷக் கடலிலழுந்தி ஆனந்த வாழ்வடைவார். துன்பக் கடலைவிட்டு நீங்குவார். தோத்திரஞ்செய்வார். (எ-ம்) (உக)

பைவாளர வணிநாதனருள் பாலாவரு ளென்றே
கைவார்வரு தொண்டத்தொகை ஞானம்பகம் விழிக்கச்
செய்வார்தம துயிருக்கிடர் சேர்கூற்றினை விதியை
வைவாரினி யுய்ந்தோமென வகுப்பார்வினை செகுப்பார்.

(இ-ள்) படத்தையுடைய சர்ப்பாபரணத்தையணிந்த சிவபிரான் திருக்குமாரனே! கருணை செய்வாயென்று மனமுருகுவாராகிய அடியார் கூட்டங்கள் ஞானக்கண் திறக்கும்படி செய்வார். தமது உயிருக்குத் துன்பஞ்செய்யும் யமனையும் விதியையும் வெறுப்பார். இனிப் பிழைத்தோமென்று தங்களைப் பிறர் கூட்டத்தினின்று பிரித்துக் கொள்வார். ஊழ்வினையைக் கெடுப்பார். (எ-ம்) ()

இவ்வாறு வருந்துந்தவ ரெதிரேமிடைந் துவனி
நவ்வாதிய சவ்வாதி நலஞ்சேரெழுத் தோதி
யெவ்வாறருள் பெற்றேமென வியம்பேமதன் முடிவை
வவ்வாதி தருங்காங்கையன் மகிழுந்திரு நாளே.

(இ-ள்) வகாரமாகிய சத்திக்கு ஆதியாகிய சிவபிரானாற் பெறப்பட்ட குமாரக்கடவுள் மகிழ்ந்தெழுந்தருளும் திருநாளில் மேற்கூறியவிதம் வருந்தித் திருவருள்பெற்ற தவசிகள் அக் குமாரக்கடவுளுக்கு நேரே நெருங்கியுலாவி நகரத்தை ஆதியாகவுடைய பஞ்சாக்ஷர மந்திரத்தையும் சகரத்தை யாதியாகவுடைய சடாக்ஷரமந்திரத்தையும் ஓதி எந்தவிதம் திருவருள் பெற்றாரென அதன் முடிவை யெம்மாலே சொல்லமுடியாது. (எ-ம்) (உங)

பூசத்தெழு முன்னாளெழும் பொற்றேர்கட விப்பின்
பேசப்படு நாளிற்குளிர் பெருதுஞ்சர வணநீர்
நேசத்தெழ நின்றாட்டவு நிலமேற்கட லெனச்சூழ்ந்
தோசைக்கடல் பெருகத்திரு நாட்கண்டதிவ் வுலகே.

(இ-ள்) இவ்விதமாகத் திருவிழா வியற்றி ஒன்பதா நாளாகிய புனர்பூச நக்ஷத்திரத்தில் இரதோற்சவத்தையும் நடப்பித்துப் பத்தாவது நாளாகிய பூச நக்ஷத்திரத்தில் குளிர்ச்சி பொருந்திய சரவணப் பொய்கையில் தீர்த்தோற்சவம் நடத்தவும் பூமியைக்கடல்சூழ்ந்தது போலச் சகல சனங்களுஞ் சூழ்ந்து திருவிழாச் சேவைசெய்து கடலோசை போலத்துதித்துத் தரிசித்தார்கள். (எ-ம்) (உச)

வேறு.

பிட்ட மதிய முழுதசடைப் பெருமான் குமரன் விழாவியற்றி
வட்ட வுலக மினிதளிக்கும் வள்ள லரிச்சந் திரக்குரிசில்
சிட்டர் புகழும் பரங்கிரியிற் செய்யுந் தவத்தாற் குமரன்விழி [தான்
கொட்டுங் கருணை பெற்றுமெய்யிற் குலவி யுவகைக் கடல்குளித்

(இ-ள்) மூன்றாம் பிறைச் சந்திரனைச் சடையிலே தரித்த சிவபெருமானுடைய திருக்குமாரராகிய முருகக்கடவுள் திருவிழாவை இவ்விதம் செய்து முடித்து வட்டமாகிய உலகத்தை யினிமையாகக் காக்கும் வள்ளலாகிய அரிச்சந்திரமகாராஜன் சிவஞானிகள் புகழ்ந்து பேசுந் திருப்பரங்குன்றத்திற் செய்யுந் தவத்தால் முருகக் கடவுளுடைய திருவருளைப் பெற்றுச் சத்தியவிரதந் தவறாத நிலைபெற்றுப் பேரானந்தக்கடலில் மூழ்கினான். (எ-ம்) (உரு)

சேது முதலாம் பதியடைந்து தீர்த்தங் குடைந்து நீதிமன்னன்
சோதி லொருவா சகம்பெற்றுக் குலவி வளஞ்சே ரயோத்திநகர்
போத வமைச்ச ரெதிர்கொண்டு பொற்பீ டத்தி லிருத்தவுறைந்
தோத வுவரி யுலகளித்தே யூழி வாழ்ந்து கதியடைந்தான்.

(இ-ள்) அதன்மேல் அரிச்சந்திரன் திருப்பரங்கிரியை விட்டுப் பிரிந்து, சேது முதலாகிய தலங்களை யடைந்து புண்ணிய தீர்த்தங்களிலே ஸ்நானஞ் செய்து குற்றமில்லாத சத்திய வாக்கைப்பெற்றுவிளங்கி எல்லாவளங்களு நிறைந்த அயோத்திக்கு வந்துசேர்ந்து, மந்திரிமார்க ளெதிர்கொள்ளச் சென்று சிம்மாசனத்திலேறி நெடுநாளரசாட்சி செய்துகொண்டிருந்து முடிவிலே மோட்சமடைந்தான். (எ-ம்) (உசு)

இந்தத் தகைமை பொலிந்தபரங் கிரியின் சீர்த்தி யியம்புவரார்
கந்தித் துலவுஞ் சத்தியகூ வத்திற் கடவுண் மாமகத்திற்
பந்தப் பிறவி யறமூழ்கப் பாரின மாசி மகங்கோடி
யுந்தும் புனித நீராடும் பயனை யொருநா ளுதவிடுமே.

(இ-ள்) இந்தத் தகுதியாகிய மான்மியம் விளங்கிய திருப்பரங்கிரியின் பெருமையை யாரே சொல்லவல்லவர். வாசனைசெய்து விளங்கும் சத்தியதீர்த்தத்தில் தெய்வத்தன்மை பொருந்திய மகா மகமாகிய ஒருதினத்தில் மூழ்கினால், மூழ்கினவர்க்கு கோடி மாசிமகதினத்தில் வேறுபுண்ணிய தீர்த்தங்களிலே நீராடின பலனை அந்தத் தீர்த்தங்கொடுக்கும். (எ-ம்) (உஎ)

வரையிற் சிமையத் தென்பாலின் மருவுங் கங்கா குண்டமெனுந்
தருநீர் தன்னிற் கார்த்திகையிற் சேர்கார்த் திகையம் மனுக்கூறி
யொருபத் தெழுநா ழிகைதன்னி லுவந்து மூழ்கிச் சிறப்பியற்றிப்
பரமர் பாதம் போற்றிடுவோர் கோடி கிளைகள் கதிபடைக்கும்.

(இ-ள்) திருப்பரங்கிரியின் உச்சியில் தென்பக்கத்திலே யிருக்கிற கங்கா குண்ட மென்னுந் தீர்த்தத்திலே கார்த்திகை மாதக் கார்த்திகையிலே, கார்த்திகேய மந்திரத்தைச் சொல்லிச் சூரியோதயந் தொடங்கிப் பத்துநாழிகை யெழுமளவிலே மூழ்கி, அபிடேக முதலியவற்றாற் சிறப்புச்செய்து சிவபிரானைப் பூசித்துத் தரிசித்தோர்கள் சுற்றத்தாரோடும் மோட்சமடைவார்கள். (எ-ம்) (உஅ)

மருவுந் திருக்கார்த் திகைமாதம்
வருகார்த் திகைநாள் வளர்கரையைப்
பொருநீர்த் தரங்கச் சரவணப்பூம்
பொய்கை மருவி நால்வேதம்
பெருகுந் திருக்கார்த் திகைமனுவைப்
பேசி மூழ்கிச் சிறப்புமிட்டு
முருகன் பாத மேத்திடுவோர்
முறைசேர் கைலைப் பொருப்படைவார்.

(இ-ள்) மேலே சொல்லியபடி கார்த்திகைமாதம் வரும் கார்த்திகை நட்சத்திரத்தில் அலைகளெல்லாங் கரையை மோதுகின்ற சரவணப் பொய்கையிலே கார்த்திகேயநம வென்று மந்திரத்தைச் சொல்லித் தீர்த்தமாடி முருகக்கடவுளைத் தரிசித்து அபிடேக முதலியவற்றாற் சிறப்புச்செய்து துதித்து விரதமிருந்தோர் திருக்கயிலாசத்தை அடைவார்கள். (எ-ம்) (உக)

திங்க டோறுங் கார்த்திகையாந்
தெய்வத் தினத்திற் குலவுதிரை
பொங்கிக் கொழிக்குஞ் சரவணப்பூம்
பொய்கை படிந்து தெய்வமின்னார்
தங்கள் கழுத்துத் திருத்தாலி
தந்த குமரன் சிறப்பிடுவோர்
நங்கள் கமலை யருள்பெற்று
நாலு கவிக்கும் புலமைசெய்வார்.

(இ-ள்) மாதந்தோறும் வருகிற கார்த்திகை நக்ஷத்திரத்தில் அலைகள் பொங்கியெழுந்து மணிகளைத் திரட்டியொதுக்கும் சரவணப் பொய்கையில் மூழ்கி, தெய்வப்பெண்கள் கழுத்தில் அணிந்த திருமங்கல்யத்தைக் காத்தருளிய முருகக்கடவுளுக்கு அபிடேக முதலிய சிறப்புச்செய்து வணங்குவோர சரசுவதியினருளைப்பெற்று ஆசு மதுரஞ் சித்திரம் வித்தாரமென்னும் நாலுகவியும் பாடும் புலவராவர். (எ-ம்) (கூ0)

மாசி மருவுஞ் *கெடுமதியின்
மதியத் தினின்முன் சொன்னமனுப்
பேசித் †திருப்பாற் குண்டநீர்
குடைந்தோர் பிறரை யணைந்ததுவுங்
காசற் றெழுமூ னுண்டதுவுங்
கழல்வார் பாவிற் பிரியமொனு
மீசற் கான்பா லாட்டுவித்தோ
ரொளிதிற் கைலை யேறிடுவார்.

(இ-ள்) மாசிமாதஞ் சோமவாரத்தில் மத்தியானநேரத்திலே கார்த்திகேய மந்திரத்தைச் சொல்லித் திருப்பாற்குண்ட மென்னுந் தீர்த்தத்திலே மூழ்கினவர், அன்னிய மாதரைப் புணர்ந்ததோஷமும், மாமிசம் புசித்த

* கெடு-பிரகாசம். † திருப்பாற்குண்டம்-பாற்கிணறு, அது பரங்கிரிக்குத் தென்பக்கமுள்ளது.

குற்றமும் நீங்கப்பெற்றுப் புனிதராவர். அம்மட்டோ! பாலிற் பிரியமுடையவ ராகிய சிவபெருமானுக்குப் பாலபிஷேகம் செய்தவர்களும் எளிதிலே கயிலாச மலையை அடைவார்கள். (எ-ம்) (கூக)

ஈசற் காறு முகற்காட்டி
யெழும்பாற் றுண்ட மெனச்சேரு
நேசத் தந்நீர் திருக்கங்கை
நீரிற் கோடி பயனுதவும்
பேசப் படுமக் தாசினியும்
பெருமா னுளித்த நீரன்றோ
பாசற் றிடவே வீடுதவு
மிதுவே யல்லான் மற்றுளவோ.

(இ-ள்) சிவபெருமானுக்கும், முருகக்கடவுளுக்கும் அபிஷேகம் செய்யப்பட்டு வரும் பாற்றுண்டமென்னுந் தீர்த்தமானது கங்கையைப் பார்க்கினுங் கோடிமடங் கதிகமாகப் பிரயோசனத்தைத் தரும். கங்கையுஞ் சிவபெருமானுடைய தீர்த்தமல்லவா? குற்றமற மோக்ஷங்கொடுப்பதற்குக் கங்கையதியல்லாமல் வேறு தீர்த்தங்களிருக்கின்றனவோ? (எ-ம்) (கூஉ)

வேறு.

தெளிதமிழ்ப் பரங்குன் றுறைந்த சிவன்றனைப் பால்கொண் டாட்டி
யளிபெறு மன்பி னுலே யருச்சனை யிழைக்க வீசன்
களிதுளங் கியபின் செவ்வேள் களித்திடப் பககம் வைத்துக்
குளிர்பெறச் சாமி நாத னெனும்பெயர் கொடுத்தான் மன்றே.

(இ-ள்) முருகக்கடவுள் தெளிந்த தமிழ் நிறைந்த பரங்கிரி படிவாகிய சிவபெருமானுக்குப் பாலபிஷேகஞ் செய்வித்து, அன்பினாலே யருச்சனை செய்தலால் மகிழ்ச்சியடைந்த அச்சிவபிரான் முருகக்கடவுளைப் பக்கத்திலே வைத்துச் சாமிநாதனென்னும் பெயரைக் கொடுத்தருளினார். (எ-ம்) (கூக)

கலியுகந் தன்னிற் செவ்வேள் கருதிய திருநா ளென்றும்
பொலிதர நடக்க ஞாலம் புகழ்பரங் கிரியே செவ்வே
டலமென வோங்க வீசன் சனமுகற் கன்பி லாதார்
மலிதரு சிவனுக் கன்பு மாற்றினு ரெனவி சைத்தான்.

(இ-ள்) கலியுகத்தில் எக்காலத்தும் முருகக்கடவுள் திருவிழா நடந்து வரவேண்டும். திருப்பரங்கிரி உலகமெல்லாம் புகழப்பட்ட முருகக்கடவுள் தலமென்று சொல்லும்படி யுயர்ந்திருக்கவேண்டும். முருகனிடத் தன்பில்லாதவர் சிவனாகிய என்னிடத் தன்பில்லாதவராவரென்று சிவபெருமானருளிச் செய்தனர். (எ-ம்) (கூச)

எனுமுறை வரங்கள் பெற்றே யெழிற்பரங் கிரியிற் செவ்வேண்
மனமகிழ் முதன்மை யாக மருவிநா யகமாய்த் தானே
புனிதமா யுறைந்தான் சாமி புரமெனக் கதிர்வெண் டிங்க
ளினிதொடு வழங்கு நாளு மேழுல கங்கள் போற்றும்.

(இ-ள்) மேற்சொன்ன முறைப்படி வரங்களைப் பெற்றுக்கொண்டு அழகு தங்கிய திருப்பரங்கிரியில் முருகக்கடவுளானவர் பிரதான தேவதையா யெழுந்தருளி யிருந்தார். சூரிய சந்திரர்க ளுள்ளமட்டும் சுவாமிநாதபுர மென்று திருப்பரங்கிரியை யெல்லா வுலகங்களுந் துதித்து வணங்கும். (எ-ம்) (கரு)

வாலொளி துளும்புங் கீர குண்டத்தை மருவி மூழ்கி
யேலுமோர் கனகத் தூளை யெழின்மறை யாளர்க் கீந்தோர்
சாலவுங் கனக மேருச் சைலதா னத்தை மானுங்
கோலுநற் றான மெல்லா மப்பயன் கொடுக்கு மாதோ.

(இ-ள்) வெண்ணிற மிகுந்த பாற்குண்டமென்னுந் தீர்த்தத்தை யடைந்து விதிப்படி ஸ்நானஞ்செய்து, வேதியர் கையில் ஒரு சிறு சொன்னப் பொடியைத் தானஞ்செய்தோர் (தானமானது) பிறதலங்களில் மகாமேரு மலையளவு சொன்னதானஞ் செய்தோர் தானத்துக்குச் சமானமாகும். மற்றைத் தானங்களினுலாகும் எல்லாப் பயனையும் அந்தச் சொன்னதானத்தின் பயனுன்றே கொடுக்கும். (எ-ம்) (கசு)

தென்பரங் கிரியின் மேவித் திருமறை யோர்க்குத் தானம்
பொன்பெறு கோதா னங்கள் புகழ்பெறு கன்னி தான
மன்புடன் கலைக ளாரங் கம்பள மருள்வோர் ஞாலத்
தின்புறு வேந்த ராகி யிற்றினில் வீடு சேர்வார்.

(இ-ள்) அழகு தங்கிய இத்திருப்பரங்கிரியை யடைந்து வேதியருக்குத் தானமாக விலையுயர்ந்த கோதானம், கன்னிகாதானம், வித்தியாதானம், வஸ்திரதானம், ஆபரணதானம், இரத்னகம்பளதானம் கொடுப்பவர் பூவுலகிலே அரசராகி முடிவிலே மோட்சத்தை யடைவர். (எ-ம்) (கஎ)

தென்றல்வந் துலவு வீதித் தென்பரங் கிரிவே லற்கே
யொன்றுபொன் வெள்ளி செம்பா லொளிபெறு தீப தூப
நன்றியி னமுது கூட்ட நவையில்பாத் திரத்தை யீந்தோர்
வென்றிமுக் குடுமி வேலோன் விழைந்துறை கைலை சேர்வார்.

(இ-ள்) தென்றற்காற்று வீசுந்திருவீதிகளையுடைய திருப்பரங்கிரியிலெழுந்தருளிய முருகக்கடவுளுக்குப் பொன், வெள்ளி, செம்புமுதலிய வற்றால்

தூபம், தீபம், நிவேதன பாத்திரமுதலியவை செய்து கொடுத்தவர்கள் மூன்று தலையுடைய சூலாயுதத்தைத் தாங்கிய சிவபிரானெழுந்தருளி யிருக்குங் கயிலாசத்தை அடைவார்கள். (எ-ம்) (கூஅ)

கொங்கவிழ் மாலைத் தேவர் கோனொடு திசைகாப் பாளர்
தங்கிய சித்தர் சீலந் தழைந்திடு தவத்தின் மிக்கார்
திங்கள்சேர் கதிரோன் வாய்மை திகழரிச் சந்த்ர னென்போன்
பொங்கெழிற் பரங்குன் றீசன் பூசைசெய் தருள்வீ டுற்றார்.

(இ-ள்) வாசனை விரிந்த பூமாலையணிந்த இந்திரன் முதலிய திக்குப் பாலகர்கள், சித்தர்கள், நல்லொழுக்கம் நிறைந்த முனிவர்கள், சந்திரசூரியர்கள், சத்தியவாக்குத் தவறாத அரிச்சந்திரன் முதலியவர்கள் திருப்பரங்கிரியில்வந்து பரங்குன்றீசரைப் பூசித்து வணங்கி மோட்சமடைந்தார்கள். (எ-ம்) (கூக)

பொத்திய வுலகங் கொள்ளப் பொங்கிய கடைவெள் ளத்தி
னித்தகை பொலிந்த தெய்வப் பரங்கிரி யழியா திந்த
மெய்த்தலத் தெல்லை யைந்து குரோசமாய் விளங்கு மென்றால்
முத்திசேர் பதியின் சீர்த்தி யெவர்களான் மொழிய லாமே.

(இ-ள்) ஏழுலகத்தையுமூடி மேலே யெழுந்த யுகாந்த காலவெள்ளத்தில் மேற்கூறிய தகுதிவிளங்கிய தெய்வத்தன்மையுடைய திருப்பரங்குன்றம் அழியமாட்டாது. இந்த மெய்த்தலத்தினெல்லையை யளவிட்டுச் சொல்லுங்கால் நான்குபக்கமும் ஐந்துகூப்பிடு தூரமாகுமல் முத்திக்ஷேத்திரமாகிய திருப்பரங்கிரியின் கீர்த்தியானது யாராலே சொல்லமுடியும். (எ-ம) (சு0)

திருப்பரங் கிரியில் வீந்தோர் திருச்செவி யுபதே சத்தை
விருப்பொடு கௌரி பங்கன் மேவியஞ் செழுத்துக் கூறக்
கருப்பழித் தன்னை தன்சூல் வயிறுபாழ் படவே மேலா
மருட்பொலிந் தமருஞ் சோதி யணிகெழு கைலை சேர்வார்.

(இ-ள்) திருப்பரங்குன்றத்திலே யிறந்தவர்களுடைய காதுகளில் ஆசையோடு உமாதேவிபாகராகிய சிவபிரான் பஞ்சாக்ஷர மந்திரோபதேசத்தைச் சொல்ல, அவர்கள் மாதாவின் வயிறு சூல்கொள்ளாமற் பாழ்பட்டுப்போகக் கருப்பாசயப் பைக்குட் கட்டுப்படாமல் அருள்மயமாயிருக்கும் பிரகாசந் தங்கிய கயிலாசமலையை யடைவார்கள். (எ-ம்) (சக)

எட்டாவது திருவிழாச்சருக்கம் முற்றிற்று.

ஆகச் சருக்கம் அ-க்குக் கூடிய செய்யுள் ௩௯௨.

## ஒன்பதாவது

# நற்கீரச்சருக்கம்.

பற்பல தமிழ்களில் வழங்கும் பான்மையும்
பொற்பரங் கிரிக்குகன் புரிந்த லீலையு
நற்புவி வழங்கிய நலமுங் கொண்டியா
மற்புத மெழுங்கதை யறைகு வாமரோ.

(இ-ள்) அநேகந் தமிழ்நூல்களிலே வழங்குந் தன்மையுடைய கதைகளையும் அழகிய திருப்பரங்கிரி முருகக்கடவுள் செய்தருளிய திருவிளையாடல்களையும் உலகத்தாராற் பேசப்படும் நலங்களையுந் தெரிந்துகொண்டு, ஆச்சரியமுண்டாகுங் கதையொன்று சொல்லுவோம். (எ-ம்) (க)

வேறு.

ஊற்றிருந்த தேனருவி யொழுகியபூந் துணர்ச்சோலை
யுடுத்த கூடல்
வீற்றிருந்தோர் நாற்பதுடனொன்பதென்னும் புலவருக்குள்
விமலன் சேர
வாற்றல்பெறு நற்கீரன் றமிழ்க்கடலை யளந்துகொண்ட
வறிவின் மிக்கான்
கீற்றெழுந்த மதிச்சடையா னுடன்வாது கூறியருங்
கீர்த்தி கொண்டான.

(இ-ள்) அருவிபோலத் தேனைச்சொரியும் பூஞ்சோலைகள் சூழ்ந்த மதுராநகரத்திலே தமிழ்ச்சங்கத்திலிருந்த நாற்பத்தொன்பதின்ம ரென்னும் புலவருக்குள் சோமசுந்தரக் கடவுளும் ஒருபுலவராயிருக்க, தமிழ் நூல்களெல்லாம் ஆராய்ச்சி செய்தறிந்த அறிவோனுயர்ந்த வலிமைபெற்ற நற்கீர னென்னும் புலவன் மூன்றாம் பிறைச் சந்திரனைத் தரித்த சோமசுந்தரக்கடவுளோடு தமிழில் வாதம்பேசி உயர்ந்தபுகழை யடைந்தான். (எ-ம்) (உ)

பின்னமல னுபதேசஞ் செவிபுகட்டி யறிவுமிகப்
பெருகிச் சீர்த்தி
பன்னியிறைக் கன்புபுரி சிலமுளான் பரங்கிரியிற்
படர்ந்து நித்தந்

தன்னிகரி லெழுந்தவொரு சரவணப்பூந் தடந்துடைந்து
தனது நீதி
மன்னியமக் கடன்கழித்தே யஞ்செழுத்தை யேற்றியபின்
மதுரை சேர்வான்.

(இ-ள்) அதன்மேல் நற்கீரன் சோமசுந்தரக் கடவுளாலுபதேசம் பெற்றுப் பேரறிவுடையவனாகி அவ்வெம்பிரானிடத்துப் பத்திசெய்யும் ஒழுக்கமுள்ளவனாய்த் திருப்பரங்கிரியை யடைந்து தனக்குத் தானே சமமாகிய சரவணப் பொய்கையிலே தினந்தோறும் ஸ்நானஞ்செய்து நித்திய கன்மமுடித்துச் சிவபூசைசெய்து பஞ்சாட்சர செபஞ்செய்து மதுரைக்குவருவானுமினான். (எ-ம்) நற்கீரர் பஞ்சாக்ஷர செபஞ்செய்த இடம் இக்காலத்திற் பஞ்சாக்ஷரப் பாறையென்று வழங்கப்பட்டிருக்கின்றது. (௬)

புங்கவர்க்கு ளிருள்கிழித்த மணிபதித்த கோபுரங்கள்
பொலிந்த கூட
லங்கயற்கண் பாகனன்றி மாலிடரில் மாறனன்றி
யகிலந் தன்னுட்
டுங்கமெழுந் தமிழ்மாலை தொடுப்பதிலை யென்றுகொண்டான்
றூய ரேனும்
வெங்கொடுமை வருங்கால மறிகுவரோ குமரனருள்
மேவி லார்கள்.

(இ-ள்) தேவர்களுக்குள்ளே இரத்தினம்பதிப்பிக்கப்பட்ட கோபுரங்கள் விளங்கும் மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக கடவுளையும், மனிதருக்குள்ளே பாண்டியனையும் உயாந்த தமிழாற் பாடுவதல்லாமல் வேறொருவரையும் பாடுவதில்லை யென்னும் விரதத்தை நற்கீரன் கைக்கொண்டிருந்தான். குமாரக்கடவுள் திருவருள் பெறாதவர்கள் பரிசுத்தமுடையவராலுனும் கேடுவருங்காலத்தை யறியமாட்டார்கள். (எ-ம்) (௭)

இத்தகைய கீரனிசைத் தமிழ்மாலை செய்திலனென்
றிதயத் தெண்ணிக்
கொத்திருந்த கடம்பணிந்தோன் பக்கமுறை நாரதனைக்
குறித்து நோக்க
அத்தகைமை யறிந்தவனு நற்கீரன் வருசமைய
மறையச் செவ்வேண்
மொய்த்தகிற லுக்கிரனண் டாபரணன் றனையழைத்து
மொழிவ தானுன்.

(இ-ள்) இத்தன்மையுடைய நற்கீரன் நமக்குத் தமிழ்ப்பாமாலை செய்து புனைந்தானில்லை யென்று கடப்பமாலை புனைந்த முருகக்கடவுள் திருவுளத்திலே நினைத்து நாரதமுனிவரைப் பார்க்க, அதைத்தெரிந்த நாரதமுனிவரும் நற்கீரன் வருஞ் சமையத்தையறிந்து முருகக்கடவுளுக்குத் தெரிவித்தனர். அதன்மேல் முருகக்கடவுள் வாயில் காப்பவராகிய மிகுந்த வெற்றியுடைய உக்கிரன், அண்டாபரணன் என்னும் பூதவீரரிருவரையழைத்துச் சொல்லுவார். (எ-ம்) (ங)

நம்படையா யெழுங்குருதி கொப்புளிக்கும் வடிவேலை
நாமே யூன்றி
யம்புவியி லமைத்தசர வணப்பொய்கை கலியுகத்தி
லவனி காணச்
செம்பதும மாயிரத்தோ டுத்திலகும் புனிதநீர்
சேர்வான் கீரன்
வெம்பமொரு குறையேற்றி மாமலையிற் சிறைபுகுத்தி
மேவு கென்றான்.

(இ-ள்) நமது ஆயுதமாக வருங் கூரிய வேலாயுதத்தைப் பூமியிலே பதித்து நாமே உண்டாக்கிய சரவணப்பொய்கையானது கலியுகத்திலே யுலகத்தாரெல்லாருமறிய அநேகந் தாமரைமலர்களோடு தோன்றிப் பிரகாசிக்கும். அத்தன்மையுடைய பரிசுத்தமாகிய தீர்த்தக்கரையில் நற்கீரன் வருவான். அவன்பேரில் கொடுமையாகிய ஒரு குற்றத்தை யேற்றி, அவனை இந்தப்பரங்கிரியிலுள்ள குகையிலே சிறைப்படுத்தி வாருங்களென்று கட்டளையிட்டருளினார். (எ-ம்) (ச)

அப்பணிதஞ் சிரத்தேந்தி யப்பணிவோ ரருள்குமர
னருளை யெண்ணுச்
செப்பரிய நற்கீரன் சரவணப்பூக் தடங்குடைந்து
திருநீ றிட்டுக்
கப்பெழுந்த திருவாசி னீழலிலே மருவுபஞ்சாக்
கரவெண் பாறை
யொப்பரிய தலனிருந்தே யஞ்செழுத்தை யுருவியற்றி
யுறைந்த காலை.

(இ-ள்) அக்கட்டளையைப் பூதவீரர்கள் தலையிலே தாங்கிக்கொண்டு வந்து முருகக்கடவுளை மதியாத நற்கீரன் சரவணப்பொய்கையிலே தீர்த்தமாடி

விபூதி தரித்து தீர்த்தக்கரையிலே நிற்கும் அரசமரத்தினிழலிலே யிருக்கும் பஞ்சாக்கரப் பாறையிலிருந்து பஞ்சாக்ஷரசெபஞ் செய்துகொண்டிருக்குங் காலத்தில். (எ-ம்) (௭)

திருவாசி னிலைச்சருகு தெண்ணீரில் விழும்பொழுது
சேல தாகும்
பொருகரையில் விழும்பொழுது பறவையா மென்றுவரும்
பூதர் தேர்ந்து
மாமுடியிற் சருகதனைக் கிள்ளியிட வழுங்குமிங்கு
மருவி வீழப் ..
பரியகய லொருபுறமும் பறவையுரு வொருபுறமும்
பதைப்பக் கண்டான்.

(இ-ள்) அவ்வரசமரத்தின் சருகு நீரிலே விழும்போது சேல்மீனாகு மென்றும், தரையிலே விழும்போது பறவையாகுமென்றும் தெரிந்து மரத்தி னுச்சியிலுள்ள ஒரு சருகைக் கிள்ளிக் கீழேதள்ள அச்சருகு நீரிலே பாதியும் நிலத்திலே பாதியுமாக விழுந்து பாதி சேல்மீன் வடிவோடும் பாதி பறவைவடி வோடுமிழுத்து வருந்துவதை நற்கீரன் கண்டான். (எ-ம்) (௮)

அன்றுசிறி தஃறிணைகள் பட்டபெரும் பாடுகண்டே
யகத்துண் முன்னிக்
கன்றிமிக நைந்திரங்கிக் கையுகிராற் கிள்ளியிடக்
கயலும் புள்ளுங்
குன்றியுடல் புரண்டுபுரண் டங்காந்து வாய்பிளந்து
குருதி கக்கிப்
பொன்றிடுங்காற் கண்மூடித் துடித்தயர்ந்து குப்புறவே
புலர்ந்த வம்மா.

(இ-ள்) அப்பொழுது அஃறிணைப்பொருள்களாகிய மீனும் பறவையும் பட்ட துன்பத்தைக் கண்டு மனஞ்சகியாமல் நைந்து நைந்து வருந்தி நற்கீரர் தமது நகத்தினாலே மீன்வேறு பறவைவேறாகக் கிள்ளுதலும், அவ்விரண்டும் உடல் குறைந்து பூமியிலே புரண்டு புரண்டு வாயைத்திறந்து பிளந்து, இரத் தங்கக்கி யுயிர்நீங்குஞ் சமையத்தில் கண்களை மூடித் துடிதுடித்துச் சோர்ந்து குப்புற விழுந்து வாடினது. (எ-ம்) (௯)

அக்கணத்தி னுக்கிரனண் டாபரணன் பற்கடித்தே
யழன்று சீறிக்
கக்குநறு வருவிதவழ் கடம்பனுறை பரங்கிரியிற்
கடிய பாவ
மிக்கொலையாம் பாதகஞ்செய் தவனையென்று வெந்நறைந்து
வெருவப் பற்றிப்
புக்கபெரு மலையின்மேற் குகையடைத்துப் பாறைகொண்டு
புதைத்தா ரன்றே.

(இ-ள்) அதைக்கண்டு, அந்தக்ஷணத்திலே உக்கிரன், அண்டாபரணன் என்னும் பூதவீரர்கள் பற்களைக் கடித்துக் கண்கள் சிவக்கக் கோபங்கொண்டு, அருவிபோலத் தேனைச்சொரியுங்கடப்பமாலையணிந்த குமாரக்கடவுளது பரங்கிரியில்இக்கொலையானது கொடியபாவமென்று நக்கீரரை முதுகிலேயறைந்து பயப்படும்படி பிடித்து மலைமேலுள்ள பெரிய குகையினிலடைத்துப் பாறைக் கல்லால் வாசலையடைத்து மூடினர். (எ-ம்) (ய)

அந்தணா ளரியதமிழ் தெரிபுலவ னெட்டுயிர்த்தே
யயர்ந்து விம்மிச்
சிந்தைமிக நைந்துநைந்து முகஞ்சுளித்துக் கண்பனித்துத்
தேம்பித் தேம்பி
வந்துசில நாள்கழிய மனத்துறுதி படநினைத்தான்
மயிலி லேறுங்
கந்தனுக்குத் தமிழ்சூட்டாக் காரணமீ தென்றுமனக்
கருத்துட் கொண்டான்.

(இ-ள்) தமிழ் நூற்கடலைக் கரைகண்ட நக்கீரன் அன்றையத்தினம் பெருமூச்சுவிட்டுச் சோர்ந்து விம்மி மனங்கரைந்து கரைந்து முகத்தைச் சுளித்துக் கண்ணீர்த் துளிசிதறி வாடிவாடிச் சிலதினஞ் சென்றபின் ஆராய்ச்சி செய்து மயில்வாகனக் கடவுளாகிய முருகனுக்குத் தமிழ்ப்பாமாலை சாத்தாத காரணத்தாலிந்தத் துன்பம் வந்ததென்று நினைத்தான். (எ-ம்) (யக)

சுவையூறுந் தமிழ்மாலை யுலகமென வெடுத்தோதித்
தொன்னூ லீற்றி
னுவவியது கிழவோனே யெனக்கூற நெடுங்கால
நோன்பு கோடி

புவியிலினைத் தறிவரிய குமாவே ளவன்கனவு
பொருந்தத் தோன்றி
யவனிதனிற் கிழவனென வாச்சிறிது நாளாமென்
றறைந்து போனான்.

(இ-ள்) மதுரம் பொருந்திய தமிழ்மாலையாகிய திருமுருகாற்றுப்படையை உலகமென முதலிலே தொடங்கி இறுதியிலே கிழவனென்று பாடிமுடித்துக் குமாரக்கடவுளுக்கு அர்ப்பணஞ்செய்தலும், நெடுங்காலம் உலகத்தில் கோடி தவங்களைச் செய்தாலும் அறிதற்கரிய முருகக்கடவுள் நற்கீரனது சொப்பனத்திலெழுந்து காட்சிகொடுத்தருளி நாம் பூலோகத்தில் கிழவனாக வரச் சிலகாலமாகுமென்று சொல்லி மறைந்தனர். (எ-ம்) (௯உ)

அப்பொழுது நற்கீரன் றமிழ்மாலை யிளையோனென்
றறைந்து சூட்டச்
செப்பரிய குடமுனிவாக் குபதேசஞ் செலுத்துமொரு
செஞ்சொ லாளி
யிப்பொருப்பி லடையாளங் கலியுகத்தோர் கண்டிடவே
லெறியப் பாறை
யொப்பறநே ரேகிழித்தங் கிருபிளவாய்ப் பிளந்திடவே
யுவப்பின் வந்தான்.

(இ-ள்) அந்தக்ஷணமே நற்கீரன் தான்பாடிய தமிழ்மாலையில் இளையோனென்றொரு பாடலையும் பாடி முருகனதிருவடியிற் சூட்டினன். (அதுகண்டு) அகத்தியமாமுனிவருக்கு உபதேசஞ்செய்யுந் தமிழ்ப்புலவராகிய முருகக்கடவுள் திருப்பரங்குன்றில் கலியுகத்திலுள்ளார் வந்து காணும்படி அடையாளமாக வாயிலையடைத்த பாறையை நேரே தமது வேலாயுதத்தாற் கீறி இரண்டு பிளவாகப்பிளந்துவிடுதலும் நற்கீரன் மனமகிழ்ச்சியோடு குகையைவிட்டு வெளியேறி வந்தான். (எ-ம்) தென்பரங்குன்றததின் பக்கததிலே இப்பொழுதும் அந்த அடையாளத்தைப் பார்க்கலாம். (௯௩)

அந்தரதுந் துபியொலிக்க மன்றலம்பூ மழைபொழிய
வயனோ ரோர்கள்
வந்துவந்து காங்கூப்பி யிருபாலும் வளைந்துடுப்ப
மகிழ்ந்து தெய்வத்

தந்தியொரு பாலிருப்ப வுக்கிரனண் டாபரணன்
சார்ந்து லாவக்
கொந்தவிழ்தார்க் குகன்வீரர் சூழ்ந்துவா மயிலில்வருங்
கோலங் கண்டான்.

(இ-ள்) ஆகாயத்தில் துந்துபிவாத்தியமுழங்கப் புட்பமாரி பொழியப் பிரமதேவன் முதலிய தேவர்கள் வந்து வந்து கைகளைக்குவித்து, இரண்டு பக்கத்திலுஞ் சூழ்ந்து நிற்கத் தெய்வயானையம்மை மகிழ்ச்சியுடனொருபக்கத் திலிருக்க, உக்கிரன், அண்டாபரணன் என்னும் பூதவீரர் பக்கத்திலுலாவிக் கொண்டுவர நவவீரர் சூழ்ந்துவர கொத்தலர் பூமாலையணிந்து குமாரக்கடவுள் மயில்வாகனத்திலெழுந்தருளும் திருக்காட்சியை நக்கீரன் தரிசித்தான். (எ-ம்) (மச)

குதலைமொழி யினித்தினித்துப் புறப்படுத்த குறுமூரல்
கொண்ட வாயு
மதியமென வமுதொழுகு மலர்முகமு மருளொழுகி
வழிந்த கண்ணுஞ்
சததளமொத் திமையவர்கண் முடியுழுத தழும்பிருந்த
தண்டைக் காலும்
பதியவரு வடிவழகை யிருவிழிக்கு விருந்தளித்துப்
பணிந்து நின்றான்.

(இ-ள்) மதலைச்சொற்கள் இனித்தினித்து வெளிப்படச்செய்த புன் சிரிப்புடைய திருவாயும் சந்திரனைப்போலத் தேனுகிய அமுதமொழுகுகின்ற தாமரை மலர்போன்ற திருமுகமும் கருணை கசிந்து வழிந்த திருக்கண்ணும், தேவர்கள் வணங்கும்போது கிரீடங்கள் பட்டழுந்திய தழும்பிருந்த தாமரை மலர்போன்ற தண்டையணிந்த திருவடியும் பொதியவருகின்ற புதிதாகிய திரு மேனியினழகை நக்கீரர் தனதிரண்டு கண்களுக்கும் விருந்தாகக் கொடுத்து வணங்கி நின்றார். (எ-ம்) (மரு)

அக்கணத்து நக்கீர னதிசயித்துத் தலைதுளக்கி
யருளா னந்தங்
கக்கியகண் பனிக்கவுடல் மயிர்க்கூச்சுப் புளகமொடு
கம்பஞ் சேர

மிக்ககதிர் கோடியர்க ளொளிவிரித்து மதிக்குளிர்மெய்
விளங்குஞ் செவ்வேள்
தக்கவிரு பதம்பணிந்து மும்மைவலஞ் சூழ்ந்துபுகழ்
சாற்று வானால்.

(இ-ள்) நின்ற அந்தக்ஷணத்தில் நற்கீரர் ஆச்சரியமடைந்து தலையசைத்து, ஆனந்தக் கண்ணீர் சொரிய உடல் மயிர்க்கூச்செறியப் புளகாங்கிதத்தோடு நடுங்கக் கோடிசூரியப் பிரகாசத்தைச் செய்து சந்திரனைப் போலக் குளிர்ச்சியைச் செய்யுந் திருமேனியுடைய முருகக் கடவுளது திருவடிகளை வணங்கி மூன்றுதரம் பிரதக்ஷணஞ்செய்து முருகக்கடவுள் சீர்த்தியைச் சொல்லுவாராயினர். (எ-ம்.) (கசு)

பனிவரையின் மகளுதவ வுண்டருளுஞ் செங்கனிவாய்ப்
பாலா போற்றி
குனிசிலைவேண் மிகநாண வடிவழகு கொண்டருளுங்
குமாரா போற்றி
வினையமெழுஞ் சூர்கிளையை வேரறுக்க வுளத்தில்வைத்த
விருத்தா போற்றி
முனிவருளங் கனியமிக வரங்குலவு பரங்கிரியின்
முருகா போற்றி.

(இ-ள்) இமைய வரசன் மகளாகிய பார்வதி தேவியார் கொடுத்தருளிய அமுதத்தையுண்ட சிவந்த கனிவாயையுடைய பாலனே! நமஸ்காரம்; வளைந்த வில்லையுடைய மன்மதன் வெட்கமடையத் திருமேனி கொண்டருளிய குமரனே! நமஸ்காரம்; வஞ்சகமுடைய சூரன் கிளையை வேரோடறுக்கத் திருவுளத்திலெண்ணிய பெரியவனே! நமஸ்காரம்; முனிவர் மனமகிழ விசேடமாக விளங்கும் திருப்பரங்கிரி முருகனே நமஸ்காரம். (எ-ம்) (கஎ)

கருதரிய வாறுமுகங் கொண்டருள நிறைந்தவருட்
கடலே போற்றி
திரைமருவு நிலவங்கஞ் சேரவுயிர்ச் சரக்கையிடுஞ்
செட்டி போற்றி
விரிதருவான் குஞ்சரத்தைக் கண்ணியிட்டுப் பிடித்தவெழில்
வேடா போற்றி
குருதியெழும் வேலேந்தி வரங்குலவு பரங்கிரியிற்
குமரா போற்றி.

(இ-ள்) நினைத்தற்கரிய ஆறுதிருமுகங்களைக்கொண்டு நிறைந்தகருணைக் கடல்போன்றவனே நமஸ்காரம். கடல்சூழ்ந்த உலகமாகிய கப்பலில் உயிர்களாகிய சரக்கையேற்றிய வணிகனே நமஸ்காரம். விரிந்த வளர்ந்தங்கிய தெய்வயானையை மாலையிட்டுக் கைப்பிடித்த மணக்கோலத்தையுடையவனே நமஸ்காரம். இரத்தமொழுகும் வேலாயுதத்தைத் தாங்கி விசேடமாக விளங்கும் பரங்கிரியிலெழுந்தருளிய குமாரக்கடவுளே நமஸ்காரம். (எ-ம்) (௰அ)

வேறு.

நஞ்சு போலெழு நமன்வரு மந்தநா ளுன்றன்
கஞ்ச மாம்பத மிரண்டுமுன் றியகருத் தேனு
லஞ்ச மாறுசெய் யாவகை யேழையை யளிப்பாய்
மஞ்சு மெட்டிட வளர்பரங் கிரிக்குக போற்றி.

(இ-ள்) ஆலகாலவிடம்போலத் தோன்றும் யமன் வரும் அற்றைத்தினம் உன்னுடைய தாமரைபோலுந் திருவடிகளை யெண்ணப்பட்ட மனமுடையேன் ஆதலால் பயப்படுகின்ற மார்க்கத்தைச் செய்யாவிதங் காத்தருள வேண்டும். மேகங்களெட்டித் தொடரச் சிறிதுசிறிதாக வளர்கின்ற திருப்பரங்கிரிக் குமரனே நமஸ்காரம். (எ-ம்) (௰கூ)

வேறு.

அப்பொழுது கூறுமிரும் பனுவலுக்கு மகிழ்ந்தனமென்
றருளிச் செவ்வேள்
செப்புவரங் கேண்மதியென் றுரைத்திடவே யஞ்சலித்துத்
திருந்து ஞால
மொப்பிலிளை யோனெனவே யுனையுரைக்க வேண்டுமியா
னுரைத்த மாலை
தப்பறவே துதித்திடுவோர் விருப்புதவ வேண்டுமெனத்
தாழ்ந்து நின்றான்.

(இ-ள்) இவ்விதமாக அந்தக்காலம் நக்கீரன் சொல்லும் பெருமை பொருந்திய பாடலுக்கு முருகக்கடவுள் மகிழ்ச்சியடைந்தோமென்று நக்கீரனை நோக்கி உனக்கு வேண்டிய வரங்களைக்கேளென்று திருவாய்மலர்ந்து சொல்ல நக்கீரன் அஞ்சலிசெய்து, இந்தவுலகம் உன்னை இளையோனென்று சொல்ல வேண்டும். அதுவல்லாமல் அடியேன் கூறிய திருமுருகாற்றுப்படையாகிய மாலையைக் குற்றமில்லாமற் படித்திடுவோர் ஆசைப்படுஞ் செல்வங்களெல்லாந் தந்தருளவேண்டுமென்று வணங்கி நின்றான். (எ-ம்) (உ0)

அவ்வரந்தந் தருளியபின் வெண்டிவலை கொழித்ததிரை
யதிருங் கங்கை
யுய்வகையான் போய்மூழ்க விடைதருதி யெனக்குமா
னுவப்பி னோக்கி
யிவ்வசலக் கொடுமுடித்தென் பாற்கங்கை யழைப்பமென
வியம்பி னோக்கிற்
செவ்வியலற் புதம்விளைக்கப் பஞ்சவன்னத் தேளியுலாத்
திரியு மென்றான்.

(இ-ள்) அந்த வரங்களைக் குமாரக்கடவுள் கொடுத்தருளியதன்மேல் வெள்ளியதுளிகளை அலைகளெடுத்தெறியுங் கங்காநதியிலே போய் அடியேன் ஸ்நானஞ்செய்வதற்கு விடைகொடுத்தருளவேண்டுமென்று நக்கீரன் கேட்க, குமாரக்கடவுள் மனமகிழ்ந்து இந்தப் பரங்கிரியினுச்சியிலே தென்பக்கத்திற் கங்காநதியை வரவழைப்போம். அதைப்பார்த்தால் பஞ்சவன்னமுடைய தேளிமீன் (திரளிமீன்) உலாவித்திரியுமென்று திருவாய்மலர்ந்தருளினார் (எ-ம்)(உக)

அக்காலை யெனையாண்ட வண்ணல்மறைந் திடலுமவ
னருளை முன்னி
மிக்காய வரைக்குடுமி யிடத்தொருசார் கங்கைவர
விளைந்த தெண்ணீ
ரெக்காலுங் கலியுகத்து மற்புதமாத் தேளியுலா
மெழிலை நோக்கிப்
பொய்க்கான பவந்தெறுநீர் குடைந்துமுரு கனைப்போற்றிப்
புலவன் போனான்.

(இ-ள்) அதன்மேல் குமாரக்கடவுள் தமது திருவுருவத்தை மறைத்துத் தமதிருப்பிடத்துக் கெழுந்தருளினர். அவரது திருவருளைக் கங்காநதியானது நினைத்து உயர்ந்த சிகரத்தையுடைய பரங்கிரியின் தென்பக்கத்தில் வருதலும் அதனிடத்துப் பெருகிய நீரில் கலியுகத்திலெந்தக்காலத்தும் ஆச்சரியமாகத் தேளிமீனுலாவிக்கொண்டு திரியும் அழகைப்பார்த்துப் பொய்யாகிய சனனத்தைப் போக்கும் அந்த நீரிலே ஸ்நானஞ்செய்து முருகக்கடவுளை வணங்கி நக்கீரனாகிய புலவன் தனதிருப்பிடத்துக்குச் சென்றான்.(எ-ம்)(உஉ)

இத்தகைய புலவனொன் றுஞ் சரவணப்பூந் தடங்குடைந்து
மெழிற்செவ் வேளாம
வித்தகன்பா தம்பணிந்துங் கூடல்வதிந் திற்றிலே
வீடு பெற்று

னத்தகைமை யருள்வரத்தாற் குமரனிளை யோனெனவே
யறையு ஞாலம்
புத்தமுத மெனப்பழிச்சும் புலவனிருந் தகைமையெம்மாற்
புகலற் பாற்றோ.

(இ-ள்) இந்தத்தகுதியுடைய நக்கீரன் எந்நாளுஞ் சரவணப்பொய்கையிலே தீர்த்தமாடி முருகக்கடவுளது திருவடியை வணங்கிப்போய் மதுரையில் வசித்திருந்து முடிவிலே மோக்ஷமடைந்தனன். நக்கீரனுக்குக் கொடுத்த தகுதியாகிய வரத்தால் முருகப்பெருமானை யுலகமெல்லாம் இளையோனென்று சொல்லித் தோத்திரஞ்செய்யும் புதிய அமுதம்போலத் தமிழ்ப்பாடலால் முருகப்பெருமானை வணங்கும் நக்கீரன் பெருமை யெம்மாற் சொல்லும் பகுப்புடையதோ. (எ-ம்) (உக)

வேறு.

மட்டு விரியுங் குழலுமையை வள்ளன் மணக்க வருவித்துங்
குட்டி விதியைச் சிறைபுகுத்தி யகிலம் பயக்கக் கொளுவித்தும்
பிட்ட மதிபோ லெயிறுடைய பெருஞ்சூ ருடன்கே ளவிந்துவிட
நட்ட வினம்போற் கலந்தவுண ருண்மை பலவு நன்குரைத்தும்.

(இ-ள்) தேனொழுகுங் கூந்தலையுடைய உமாதேவியை விவாகஞ் செய்யச் சிவபெருமானை இமையமலைக்கு வரவழைத்தும், பிரமதேவனைத் தலையிலே குட்டிச் சிறையில் வைத்து (முருகக்கடவுள்) உலகத்தைச் சிருட்டிக்கும்படி தந்திரஞ்செய்தும், மூன்றாம்பிறைச் சந்திரனைப்போல் வளைந்த வக்கிர தந்தங்களையுடைய சூரன் சுற்றத்தாருடன் கெட்டொழிந்துபோக அவனோடு அவனினத்தார்போலக் கலந்து அசுரருடைய உள்ளுளவுகளை யெல்லாம் முருகக்கடவுளுக்கு நன்றாகத் தெரியப்படுத்தியும். (எ-ம்) (உச)

கட்டுக் கடம்பன் மனக்குறிப்பைக் கண்டு முயன்று வருவித்துஞ்
சிட்டர் பரவும் பரங்கிரியின் சிறப்பு மொழிந்தெண் டிசைவிரித்து
மெட்டு மகதி யிசையமுத மிட்டுச் செவியைக் குளிர்வித்தும்
வட்ட வுலகிற் கனத்தவர்போன் மகிழுந் தொண்டு பலவிளைத்தும்.

(இ-ள்) கட்டப்பட்ட கடப்பமாலையணிந்த முருகக்கடவுளபிப்பிராயத்தைத் தெரிந்து, அதற்குத்தக்க முயற்சி செய்து, அவரைத் (திணைப்புனத்துக்கு) வரும்படி செய்தும், மெய்ஞ்ஞானிகள் துதிக்கும் பரங்கிரியின் சிறப்பை யெட்டுத் திசைகளிலு மெடுத்துச்சொல்லி மகதியாழாகிய வீணையினிசையாகிய அமுதத்தை முருகக்கடவுள் திருச்செவியில் வார்த்துக் குளிரும்படி செய்

தும், விளங்கிய வுலகத்தில் அகத்தியர் முதலிய பெரியாரைப்போல,முருகக்கடவுள் மகிழ்கின்ற பலவிதமாகிய அடிமைத்தொழில் செய்தும். (எ-ம்) (உ௯)

இனைய பலவாஞ்செயன்முடித்தோ னிருதாண்மலரென் முடிசுமக்கப்
புனையுந் திருநா ரதனைமகிழ் பொங்கி விழியின் கருணைதந்து
தனது பக்கத் திருக்கவரந் தந்தா னடியார்க் கெளியசெவ்வே [மோ
ணினையுந் தொறுமற் புதமெனக்கே நிறைக்கு முலகோர்க் கெதுவா

(இ-ள்) இத்தன்மையவாகிய அநேகஞ்செயல்களைச் செய்தோனுகி இரண்டு பாதங்களையு மென்னுடைய தலை சுமக்கச்சூட்டும் நாரதமுனிவனை மிக மகிழ்ந்து கருணைகடாக்ஷஞ்செய்து அடியார்க்கெளியவராகிய முருகக்கடவுள் தனது பக்கத்திலேயிருக்க வாந்தந்தருளினர். இவைகளையெல்லாம் நினைக்குந்தோறு மெனக்கே ஆச்சரியத்தை விளைவிக்கும். உலகத்திலுள்ளாருக்கு யாதாகுமோ. (எ-ம்) (உ௬)

௯-வது நற்கீரச் சருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் ௯-க்குச் செய்யுள் ௨௪௯.

---

பத்தாவது

# சூரசங்காரச் சருக்கம்.

---

அஞ்சொ லான்சைவ புராணத்து ளாறதி கத்தைச்
செஞ்சொ லூறிய தமிழ்ப்படுத் தினசெழுங் கீர
னஞ்சல் செய்தபின் செய்யுள்கண் டிடுங்கதை யறைந்தாம்
விஞ்சு காந்தஞ்சொல் சூரசங் காரத்தை விரிப்பாம்.

(இ-ள்) அழகிய சொற்களையுடைய தமிழ் வித்துவானும், சிவபுராணம் பத்தினுள்ளே யதிகமாகிய ஆறு புராணங்களை வடமொழியினின்றும் தமிழ் நூலாகச் செய்தவனுமாகிய நற்கீரன் (முருகக்கடவுள்) பயப்படுத்தியபின்னர் அவரைத் திருமுருகாற்றுப்படை யென்னும் நூலைப்பாடித் துதித்த கதையைச் சொன்னோம். இனி, உயர்ந்த கந்தபுராணத்துள்ளே சொல்லப்பட்ட சூரசங்காரமாகிய கதையைச் சொல்லுவோம். (எ-ம்) (க)

முன்ன மோர்பகற் குமரவேள் சூர்தனை முடிக்கப்
பன்னு மாலயன் முதலியோர் கணத்தொடு படா
மின்னு தேரினைக் கடாவியே வெய்யகான் றணைந்து
மன்னு வேலையின் மூவிரு மகார்களும் வந்தார்.

(இ-ள்) முன்னொரு காலத்தில் ஆறுமுகப்பெருமான் சூரசங்காரஞ் செய்யும்பொருட்டுப் பிரமன் விஷ்ணு முதலான பூதகணங்கள் சூழத் தொடர்ந்துவரப் பிரகாசம் பொருந்திய தேரைச் செலுத்திக் கொடிய காடுகளைக் கடந்து திருப்பரங்கிரிக்குப் பக்கத்தில் வரும்போது (அங்கே தவஞ் செய்துகொண்டிருந்த பராசரமகாருஷி புத்திரராகிய ஆறு முனிவர்களும் அவ்வாறுமுகப் பெருமானை யெதிர்கொண்டு வணங்க வந்தனர். (எ-ம்) (௨)

நீணி லத்துறு தத்தனே நிகணந்தி பரிதி
பாணி யேசனு முகன்றவ மாலியாம் பனவர்
மாணி ரைத்தவர் வந்துசெவ் வேளடி வணங்கப்
பூணி றைத்திடு மகபதி யவர்செயல் புகல்வான்.

(இ-ள்) அப்படி வந்த தத்தன், நந்தி, பரிதி, பாணி, சனுமுகன், தவமாலி யென்னும் மாட்சிமை நிரம்பிய தவசிகள் குமாரக்கடவுளது சிவந்த திருவடிகளை வணக்கஞ் செய்தனர். (பக்கத்தில் நின்ற) இரத்நாபரணங்களணிந்த தேவேந்திரன் அம்முனிபுத்திரர்களுடைய செய்கைகளைச் சொல்லத் தொடங்கினன். (எ-ம்) (௩)

அருந்த வம்பெறு பராசரன் சிறார்களா மறுவர்
திருந்தி ளம்பரு வத்தினிற் சரவணத் திருநீ
ரிருந்த மீனுகண் டிருந்திட மூழ்கியே விநோதம்
புரிந்து மீன்பிடித் துணங்கிடப் பாறையிற் பொழிந்தார்.

(இ-ள்) (இங்கே நின்ற தவசிகளறுவரும்) அருமையாகிய தவசிரேட்டராகிய பராசர முனிவருடைய புத்திரர்கள்; இவர்கள் இளைமைப் பருவத்திற் சரவணப்பொய்கையிலே தெளிந்த நீரிலே ஸ்நானஞ்செய்து, அங்கே துள்ளி விளையாடிக்கொண்டிருந்த மீன்களைக்கண்டு வேடிக்கை செய்து பிடித்துச் சுடுகின்ற பாறையிலே அம்மீன்கள் துடித்து வாடும்படி போட்டார்கள். (எ-ம்) (௪)

பசும்ப ரித்தொகை கடவுதேர்ப் பண்ணவ னுச்சி
விசும்ப டைத்திடப் பராசரன் கடன்செயன் மேவா
விசைந்த தீவினை புரிந்திடு குமாரரை யெதிர்கண்
டசைந்த வேணிகொண் டடைந்தவன் சாபமிட் டருள்வான்.

(இ-ள்) பச்சைக் குதிரைகள் கட்டிய தேரைச்செலுத்திய சூரியன் ஆகாயத்தில் வரும் மத்தியான வேளையில் பராசர முனிவன் நித்திய கன்மாநுட்டானங்களை முடித்துக்கொண்டு வரும்போது மனம்போன போக்கில்

கொடிய தொழில்களைச் செய்துகொண்டு நின்ற அப்புத்திரராறுவர்களையும் பார்த்துத் தமது சடைகளசைந்து கீழே விழும்படி நெருங்கிவெகுண்டு, அவர்களுக்குச் சாபங்கொடுப்பாராயினர். (எ-ம்) (ரு)

துடித்து லாங்கய லாகிநீர் சுலவுதி ரென்ன
அடித்த லம்பணிந் தெங்குறை யகலுநா ளேதென்
றுடைத்த நெஞ்சினர் புலம்பிட வுவப்பொடு முனிவன்
வடித்த செந்தமிழ்க் குமரவேள் மருவுமித் தடத்தில்.

(இ-ள்) (சரவணப்பொய்கையிலே விளையாடிக்கொண்டுதிரியு மீன்களைப் பிடித்துப் பாறையிலே போட்டு வாட்டியதனால்) நீங்கள் மீன் வடிவங்கொண்டு துடிதுடித்து இந்தப் பொய்கையிலே திரியக்கடவீரென்று பராசரமுனிவர் சாபங்கொடுக்க அப்பிள்ளைக ளறுவரும் அவருடைய பாதங்களை வணங்கி இந்தச் சாபமெந்தக்காலத்து நீங்குமென்று, உடைபட்ட மனமுடையவராய்ப் புலம்பி யழுதனர். (அதைக்கேட்டு) பராசரமுனிவர் தெளிந்த செந்தமிழ்ப் புலவராகிய முருகக்கடவுளிந்தச் சரவணப் பொய்கைக்குச் சந்தோஷத்துடனே (குழந்தைகளாய்) வருவார். (எ-ம்) (சு)

அந்த நாள்வருங் குதலைவா யம்பிகை மகவைக்
கந்த மேவிய கைக்கொளக் கனமுலை சொரிபால்
சிந்த வேதிவ லைத்துளி யருந்தியே நீவி
ரிந்த பாவினை தடிதிரென் றேகினன் பாலர்.

(இ-ள்) அந்தக்காலத்தில் அங்கே யெழுந்தருளும் உமாதேவியானவள் மழலைச் சொற்கள் பேசும் வாயையுடைய பிள்ளையாகிய குமாரக்கடவுளை வாசனைதங்கிய கைகளாலெடுக்க அவள் கனத்தசுகிய தனங்களினின்றுஞ் சுரந்தொழுகு பால்வெள்ளததின்றுளிகள் சிதறிவிழ அத்துளிகளை நீங்களுண்டு இந்தக்கொடிய பாவவிமோசனமடைவீரென்று சொல்லித் தமதிடத்துக்குச் சென்றார். (எ-ம்) (எ)

அத்த டத்தினிற் சேலுரு வணைந்துலாங் காலை
தத்த மக்கெழு நன்மைசேர் காலங்கள் சார்ந்து
மெய்த்த வத்தின ராகினர் விமலநிற் கண்டோர்
முத்த ராவர்கள் வினைவிட லரியதோ மொழியில்.

(இ-ள்) அந்தச் சரவணப்பொய்கையில் மீன்வடிவம் பெற்றுச் சுழன்று திரியுங்காலத்தில் தங்கள் தங்களுக்குண்டாகும் நல்வினைப்பயனடையுங் காலத்தைச் சார்ந்து சாபவிமோசனம் பெற்று, உண்மைத்தவமுடையவராயினர்,

எங்கள் பிதாவாகிய குமாரக்கடவுளே! நின்மலசொரூபராகிய உம்மைத் தரிசித்தவர்கள் சீவன்முத்தராவார். (என்றால்) அவர்கள் தீவினையை நீங்குதலொரு பெரியதோ. (எ-ம்) (௮)

அந்த மேன்மைகொண் டிவர்களு மருளடைந் தவரா
யிந்து புத்தமு தொழுகிய பரங்கிரி யிடத்திற்
கந்த வேளுனை நோக்கியே தவம்பல கண்டா
ரெந்தை கேளென வறுவரும் பின்வர விசைத்தார்.

(இ-ள்) உமாதேவியாரது ஞானப்பாலுண்ட மகத்துவத்தால் இந்த அறுவருந் திருவருளடைந்தவராகி, (சந்திரன் செல்லும்போது அவனுடம்பு உரிஞ்சுதலாலவ்வுடம்பினின்றும்) புதிய அமுதொழுகப்பட்ட திருப்பரங்கிரியினிடத்துக் கந்தசுவாமியே! உம்முடைய வரவை யெதிர்நோக்கி அநேகதவஞ் செய்துகொண்டிருந்தனர். எங்கள் பிதாவாகிய நீர் கேட்டருளுமென்று, இந்திரன் சொல்ல, அதன்மேல் அம்முனிவர்களுந் தங்கள் வரலாற்றைச் சொல்லி இட்டசித்தியடைந்தார்கள். (அதன்பின் திருப்பரங்கிரியிற் குமாரக் கடவுளெழுந்தருளியிருந்தனர்.) (எ-ம்) (௯)

இமிழ்தி ரைக்கட லேத்தல்போ லிரைத்தலைக் கரத்தா
லுமிழு முத்தமா மணியல ரிறைத்துவந் திறைஞ்சுந்
தமிழ்ம ணத்திடுஞ் சீரலை வாயெனுந் தலத்தி
லமிழ்தெ ழுந்திடு குதலைவா யமலன்வந் தடைந்தான்.

(இ-ள்) (அதன்மேல் சிலதினஞ் சென்றபின் அதைவிட்டுப் புறப்பட்டு) முழங்குகின்ற அலைகளையுடைய கடலானது பூசித்தல்போலத் தன்னிடத்துள்ள இரத்நங்களாகிய மலர்களைச் சொரிந்து வணங்கப்படுந் தமிழ்மணங் கமழுந் திருச்செந்தூரென்னுந் தலத்தில் அமுதமுண்டாகு மழலைச்சொற்களையுடைய நின்மலராகிய அக்குமாரக்கடவுள் வந்து சேர்ந்தனர். (எ-ம்) (௰)

பிட்ட மாமதிப் பிளவுபோ லெயிறெழுஞ் சூர
னட்ட கேளொடு யமரிழைத் திடநகை யரும்பித்
தொட்ட வாழியி னடந்தவை தொலைத்துவெங் கணத்தோர்
வட்ட ஞாலத்தி லதிர்தரக் குமரவேண் மகிழ்ந்தான்.

(இ-ள்) அது தெரிந்து மூன்றாம்பிறைச் சந்திரன்போலெழுந்த வக்கிரதந்தங்களையுடைய சூரன் தனக்குச் சிநேகராகிய சுற்றத்தாரோடு வந்து யுத்தஞ்செய்தனன். அதைப்பார்த்துப் புன்சிரிப்புச்செய்து, தோண்டப்பட்ட சமுத்திரத்தினூடே நடந்துபோய் அந்த யுத்தங்களையெல்லாங் கெடுத்துத்

தம்முடைய பூதவீரர்கள் வட்டமாகிய பூமியிற் பெருமுழக்கஞ்செய்யும்படி முருகக்கடவுள் மகிழ்ச்சியடைந்தனர். (எ-ம்) (யக)

குருதி கக்கிய குடுமிவேற் கொருபணி கொடுக்கச்
சூர டுத்தவாய் சோரியு மம்மண மடுக்க
வரும ணங்கனூர் தழுவுகை வளர்பிணந் தழுவ
வெரிம ணித்திரண் முடித்தலை யெலும்புகொண் டுருள.

(இ-ள்) இரத்தங்கக்கிய உச்சியையுடைய வேலாயுதத்துக்கு (சூரனைச் சங்காரஞ்செய்துவரும்) ஒப்பற்ற வேலையை (முருகக்கடவுள்) கட்டளையிடுதலும் அதுபோய்ச் செய்ததென்னவென்றால், சூரன் பக்கத்தில் தேவர்களடுத்த இடமெல்லாம் இரத்தமும் இரத்தமணமுமே நெருங்கவும் சூரனைத் தழுவ வருந் தெய்வப்பெண்கள்போன்ற பெண்களுடைய கைகள் பிணத்தைத் தழுவவும் பிரகாசம்பொருந்திய இரத்நகிரீடம் புனைந்த தலைஎலும்பாகியுருளவும்.

சந்து குங்குமந் தங்கிய மார்புசெங் குருதி
வந்து சோர மாதர்கை புடைத்திடு துடையி
லந்த ரத்தெழு பருந்துவாய் வழுவுமூ னடுக்கக்
கொந்தெ ழுந்தபூ வணையெனக் குஞ்சிமேற் கிடப்ப.

(இ-ள்) சந்தனமுங் குங்குமமும் பூசிய மார்பு சிவந்த இரத்தமொழுகியது. தேவப்பெண்கள் கையால் குத்தப்பட்ட தொடையில் ஆகாயத்திற் பறக்கின்ற பருந்தின் வாயினின்றுந் தவறிவிழுகின்ற மாமிசங்களடுக்கவும், கூட்டமாய் நிறைந்த பூமலர் மெத்தைபோலத் தலையுரோமங்கள் கிடக்கவும். () ()

வென்றி வாகையம் புயங்குடர் மாலைகள் மிலையத்
துன்று முத்தணி மார்புபல் லெலும்பொடு துதைய
மின்றி றந்தவா ரங்களாய் மென்கொழுப் பணியக்
குன்ற மென்றசூர் கேளொடு குவலயத் துருள.

(இ-ள்) வெற்றிமாலையணிகின்ற தோள்கள் குடல்களாகிய மாலைகள் சூடவும் நெருங்கிய முத்தாரமணியப்பட்ட மார்பினிடத்துப் பல்லு மெலும்புகளும் நெருங்கவும்மிருதுவானகொழுப்புகள் பிரகாசம்வெளிப்பட்ட சொன்ன மாலைகளாகப்புனையவும் பருவதம்போன்ற சூரன் சுற்றத்தாரோடு பூமியிற் கிடந்துருளவும். (எ-ம்) (யச)

வீழ்ந்தி டும்படி யவருயிர் விருந்தருந் தியவே
லாழ்ந்த வெண்டிரை யாழிநீ ரருந்தியெங் குகனைச்
சூழ்ந்தி றைஞ்சியே சூரியர் கோடிபொற் சுடர்போல்
வாழ்ந்த சண்முகன் கையினில் வளர்ந்தது மன்றே.

(இ-ள்) கீழே விழும்படி அச்சூரன் முதலிய அசுரரூபிகளை விருந்தாக வுண்ட வேலாயுதமானது ஆழமாகிய வெள்ளிய அலைகளையுடைய சமுத்திரத்திலே போய் முழுகி வந்து, எங்களுடைய முருகக்கடவுளைப் பிரதக்ஷணமாகச் சுற்றி வந்து கோடிசூரியப் பிரகாசம்போ லெழுந்தருளியிருந்த அவருடைய திருக்கரத்தில் வளர்ந்திருந்தது. (எ-ம்) (கரு)

சூரை யட்டபின் மாலயன் றுதிமழை பொழிந்து
சீர்கொள் பூசனை செலுத்தினர் குகன்மொழிப் படியே
பார்கெ ழுமபரங் கிரிசெல வூர்தியிற் படர்ந்தா
ரேர்கெ ழுங்குகன் மாமயி லேறியே கினரால்.

(இ-ள்) இவ்விதம் சூரசங்காரஞ் செய்ததன்பின் பிரம விஷ்ணுக்கள் மிகுந்த தோத்திரங்கள் செய்து முருகக்கடவுளைப் பூசனை செய்தார்கள். அதன்பின் அவருடைய ஆக்கினைப்படியே பிரம விஷ்ணுக்கள் முதலிய சகல தேவர்களும் உலகத்திற் பெருமைபெற்ற திருப்பரங்குன்றத்துக்கு அவரவர்கள் வாகனத்திலேறிச் சென்றார்கள். அழகு நிறைந்த ஆறுமுகப்பெருமானும் மகத்தாகிய மயில்வாகனத்திலேறிப் புறப்பட்டார். (எ-ம்) (கசு)

தேன லம்பிய கடம்பணி சிற்பரன் வந்தா
ஞனை மங்கையை மணஞ்செயு மறுமுகன் வந்தான்
கான வேதனைச் சிறையிடுங் காரணன் வந்தான்
வான மங்கையர் தாலியைத் தந்தவன் வந்தான்.

(இ-ள்) வண்டுகள் முழங்கப்பட்ட கடம்பமாலையணிந்த ஞானமூர்த்தி வந்தார். தெய்வயானையை விவாகஞ் செய்யும் ஆறுமுகக்கடவுள் வந்தார். கீதங்களையுடைய வேதனாகிய பிரமனைச்சிறைப்படுத்தும் மூலகாரணர் வந்தார். தேவப்பெண்கள் திருமங்கல்யத்தைக் காத்தருளியவர் வந்தார். (எ-ம்) (கஎ)

செருவில் வெங்கொடுஞ் சூரனைச் செகுத்தவன் வந்தான்
கருது மன்பருக் கூறிய கருணையான் வந்தான்
சுரர்கள் மாமுடி தழும்பிடுந் துணைப்பதன் வந்தான்
வரதன் வந்தன னென்றுசின் னம்பணி மாற.

(இ-ள்) யுத்தகளத்தில் மிகக்கொடியவனாகிய சூரனைக் கொன்றருளியவர் வந்தார். நினைக்கின்ற தொண்டருக்கு நிறைந்த கருணை செய்பவர் வந்தார். தேவர்கள் வணங்கும்போது, அவர்கள் கிரீடம் பட்டுத் தழும்பு செய்யும் இரண்டு பாதங்களையுடையவர் வந்தார். (எல்லாருக்கும்) வரங் கொடுப்பவர் வந்தாரென்று சின்னங்கள் முழங்க, (எ-ம்) (கஅ)

பவன னஞ்சிட மயிலெனும் பரிதனை நடத்தி
நவையி கந்தகா வதம்பல தணந்துநம் முருகன்
சிவமெ னும்பரங் கிரிவிழி கண்டிடச் சிந்தை
யுவகை பொங்கினன் புங்கவ ருவந்திறைஞ் சினரால்.

(இ-ள்) வாயுதேவனும் பயப்படும்படி மயிலாகிய வாகனத்தை வேகமாகச் செலுத்திக் குற்றமில்லாத அநேக காத தூரவழியைக் கடந்து நம் முருகக்கடவுள் சிவசொரூபமாகிய பரங்கிரி தமது திருக்கண்களுக்குப் புலப்பட மனமகிழ்ச்சியடைந்தனர். அப்பொழுது தேவர்களும் சந்தோஷமடைந்து வணங்கினார்கள். (எ-ம்) (௰௧)

திருவு ளங்களி பொருந்திய திருப்பதி யாறுள்
வருமு தற்பதி பரங்கிரி யடைந்தவண் வதிந்தான்
சுரர்கள் கம்மியன் சுந்தரம் பழுத்தபொற் கோயின்
மருவு தேவருக் கியற்றினன மனமகிழ்ந் திருந்தார்.

(இ-ள்) (முருகக்கடவுள் தமது) திருவுள்ளம் களிப்படையும் தலங்கள் ஆறினுள்ளே முதற்பதியாகிய திருப்பரங்குன்றத்தையடைந்து, அங்கே எழுந்தருளியிருந்தனர். அவருடன் கூடவந்த மற்றைத தேவர்களுக்கெல்லாந் தேவ தச்சன் அழகு நிரம்பிய பொன்மயமாகிய கோயில்களைச்செய்ய அவர்களும் மனமகிழ்ச்சியடைந்திருந்தார்கள். (எ-ம்) (உ௰)

இருந்த நாளினில் வேலனை காணவா யிரங்கண்
பொருந்து மிந்திரன் புதல்வியை யாறுமா முகற்குத்
திருந்து மாமணஞ் செய்துகைம் மாறெனச் செலுத்தப்
பெருந்த யாவொடு மாலுடன் விதிக்குரை பேச.

(இ-ள்) இப்படியிருந்த தினத்தில் வேலாயுதக்கடவுளைத் தரிசிப்பதற்காக ஆயிரங்கண்கள் பொருந்தியிருக்குந் தேவேந்திரன் பிரம விஷ்ணுக்களிடஞ் சென்று, என்னுடைய புத்திரியாகிய தெய்வயானையை ஆறுமுகப்பெருமானுக்கு விவாகஞ்செய்து பிரதியுபகாரமாகக் கொடுக்கவேண்டுமென்று பேரன்போடு சொல்லினன். (எ-ம்) (உக)

அந்த வாசகங் கேட்டுமா லயன்முடி துளக்கிக்
கொந்து லாவிய கடம்பணி காளைன் கோயி
லுந்தி னூடி யிறைஞ்சியே சூழவந் துவந்து
தந்தை யேயெமக் கொருவரந் தருகெனப் பணிந்தார்.

(இ-ள்) அந்த வார்த்தையைக்கேட்டு விஷ்ணுவும், பிரமனும் தலையசைத்துக் கொத்துக்கொத்தாய் விளங்கிய கடப்பமாலையணிந்த முருகக்கடவுள் ஆலயத்துக்குச்சென்று அவரது திருவடிகளை வணங்கிப் பிரதக்ஷணஞ்செய்து மகிழ்ந்து, எங்களுக்குப் பிதாவாயுள்ளவரே! ஒரு வரந்தரவேண்டுமென்று மீண்டும் வணங்கினார்கள். (எ-ம்) (உஉ)

பணிந்த காலையி லெழுமெழு மென்றுரை பகர்ந்து
தணிந்தி லாவிருப் பாகியே சாற்றிய வார்த்தை
யணைந்து கூறுமுன் னுணர்ந்தன மெனநகை யரும்பித்
துணிந்து ரைத்தவா னவர்க்கருள் வழங்கினன் றூயோன்.

(இ-ள்) அப்படி வணங்கியபோது பரிசுத்தராகிய குமாரக்கடவுள் எழுந்திருமெழுந்திருமென்று, உபசாரஞ்சொல்லி (நீங்கள்) பூரணமாகிய அன்போடு சொல்லிய வார்த்தையை நம்மிடத்தில் வந்து சொல்லுமுன்னமே யறிந்துகொண்டோமென்று புன்சிரிப்புச்செய்து துணிவாகச்சொல்லிய அவருக்குத் திருவருள் சுரந்தளித்தனர். (எ-ம்) (உக)

அக்க ணத்தினிற் புறம்புபோ யமரர்கோ மானு
மிக்க வொற்றரைக் கூவியே யண்டங்கண் மேவித்
தக்க வானவர் மாதவர் தமைப்பரங் கிரியா
மிக்க லெய்திடக் கூறுமென் றேயிசைத் திட்டான்.

(இ-ள்) (அதைப் பக்கத்திற் கேட்டுநின்ற) தேவேந்திரன் வெளியே வந்து அந்தக்ஷணத்திலே தகுதியுடைய தூதர்களையழைத்து, எல்லா அண்டங்களிடத்துஞ்சென்று, அங்கங்குள்ள தேவர் முனிவர்களைத் திருப்பரங்குன்றமாகிய இந்த மலையினிடத்து (தெய்வயானை திருமணக்கோலங்காண்யதற்கு) வரும்படி சொல்லுமென்று, உத்தரவுசெய்தான். (எ-ம்) (உச)

உண்மை யாகிய தேவரு ளொருவனை யழைத்து
வண்மை சேர்மகள் மனைவியைக் கொடுவரு கெனப்போய்
விண்ம கிழ்ந்திட வருதெய்வ யானையார் மேருத்
தண்ம லிந்திடு பொய்கையிற் றவமிழைத் தருளா.

(இ-ள்) தேவருக்குள் உண்மையுடைய வொருவனையழைத்து வளர்ந்திய மகளாகிய தெய்வயானையையும் மனைவியாகிய இந்திராணியையும் அழைத்துக்கொண்டு வருகவென்று இந்திரன்சொல்ல, அவன் போய் விண்ணுலகத்தார் மகிழும்படி தோற்றிய தெய்வயானையம்மையார் மகாமேருப் பக்கத்தில் குளிர்ச்சி நிறைந்த ஒரு தடாகத்தில் தவஞ்செய்து. (எ-ம்) (உரு)

எந்த நாளெனைக் குமரவேண் மணஞ்செயு மென்று
சிந்தை செய்திடு சமையத்திற் செவிகுளிர்ந் திடவே
வந்த தூதவன் சோபனங் கூறிட மகிழ்ச்சி
யுந்து வேலையின் மூழ்கினள் தாயுட னுவந்து.

(இ-ள்) எந்தக்காலம் என்னைக் குமாரக்கடவுள் விவாகஞ்செய்வாரென் றெண்ணிக்கொண்டிருக்கும் சமையத்தில் இரண்டு காதுகளுங் குளிரும்படி தூதாக வந்த தேவன் திருமணச்செய்தியைச் சொல்லுதலும் தெய்வயானையம்மையார் சந்தோஷமாகிய சமுத்திரத்தில் மூழ்கித் தாயாகிய இந்திராணியுடனுங் கலந்து மகிழ்ந்து. (எ-ட) (உகூ)

வெண்மு கிற்படர் மின்னென வெண்கரி கடவித்
தண்ம லர்ந்திடு பொய்கைசூழ் பரங்கிரி சார்ந்து
பண்ம லர்ந்திடு பவளவாய்க் குயிலவரப் பதுமை
யெண்மி குந்திடு மணங்கின ரெதிர்தழீஇக் கொண்டார்.

(இ-ள்) வெள்ளைமேகத்திற் செல்கின்ற மின்னலைப்போல வெள்ளையானையின் மேலேறி வந்து, குளிர்ச்சி நிறைந்த தடாகங்கள் சூழ்ந்த திருப்பரங்கிரியைச் சார்ந்து பவளம்போலும் வாயினையுடைய குயில்போலுந் தெய்வயானையம்மையார் வர (அதைக்கண்ட) இலக்குமி முதலிய எண்ணில்லாத தேவப்பெண்கள் எதிர்சென்று தெய்வயானையம்மையாரைத் தழுவிக்கொண்டார்கள். (எ-ம்) (உஎ)

வாழி யென்றுவிண் ணவர்குழா மாதர்க ளொலிக்க
வூழி ரும்பய னென்றுகோன் கம்மியற் குரைத்துச்
சூழும் வீதிகள் புறஞ்சமை யென்றிடத் துய்ய
வேழ மேறுவான் களித்திட வியன்றெருச் சமைப்பான்.

(இ-ள்) அதன்மேல் கூட்டமாகிய தெய்வப்பெண்கள் மங்கள வாழ்த்துமிகுதியாகச் சொல்ல, இது ஊழினது பெரும்பயனென்று, இந்திரன் தேவதச்சனுக்குச்சொல்லி, இந்நகரத்தைச் சூழும்பக்கத்தில் தெருக்கள் உண்டாக்குவாயென்று கட்டளையிட (அவனப்பொழுதே) இந்திரன் மனமகிழும்படி பெருமைபொருந்திய தெருக்களைச் சிருட்டிப்பானாயினன். (எ-ம்) (உஅ)

தணிவி லாமறை சாற்றுவோர் வீதிமா முடியின்
மணியி ருட்குழாங் கிழித்திடு மன்னவர் வீதி
யணிபெ ருந்திரு வணிகர்கள் வீதிவே ளாண்மை
திணிநி லம்பிளந் தியற்றுவோர் வீதிசெய் தனனால்.

(இ-ள்) பூரணமாகிய வேதங்களையோதும் பிராமணர் வீதியும், கிரீடத்திற் பதித்த இரத்னங்கள் இருட்கூட்டத்தையோட்டும் அரசர் வீதியும், அழகு தங்கிய பெருஞ்செல்வமுடைய வியாபாரிகள் வீதியும், *திட்பமாகியநிலத்தையுழுது வேளாண்மை செய்யும் வேளாளர் வீதியும் (தேவதச்சன்) உண்டாக்கினன். (எ-ம்) (௬௧)

வேறு.

இமைத்தமா மணிய ழுத்து மெழின்மணி மாடச் சுண்ணத்
தமைத்தபொற் சிகாக் கும்ப மணுதுபாற் கடலி னுப்பண்
கமைத்திருள் கிழித்த பானுக் கடுக்கு மம் மாட மீது
சுமத்திய மேக மாயன் றுயிலினை முகிழ்ப்ப தொக்கும்.

(இ-ள்) பிரகாசம்பொருந்திய மாணிக்கங்கள் பதித்த அழகுதங்கிய மாடத்தின்மேற் சுண்ணத்தாற்செய்த பொன்மயமாகிய தூவியின்மேல் வைத்த பொற்கும்பமானது பாற்கடலின் மத்தியில் பொறுக்கப்பட்ட இருளைக் கெடுக்குஞ் சூரியனுக்குச் சமானமாகும், அந்தமாடமானது மேலே சுமக்கப்பட்ட மேகம் திருமால் நித்திரை செய்துகொண்டிருப்பது போலும் (எ-ம்) (௬௨)

பொங்கழ கெழுந்த வாயில் பொலிந்தகோ புரத்து நெற்றி
தங்குசெம் மணியின் பாங்கர் தாளபவச் சிரமே கண்க
ளங்குறு வெள்ளை மேக மடலையங் கலையின் சென்னி
தங்கிட மதியங் கங்கை தழுவிடப் பரமன் போன்ற.

(இ-ள்) மிகுந்த அழகு தோன்றிய கோபுரத்து நெற்றியில் பதிக்கப்பட்ட மாணிக்கமணியின் பக்கத்தில் முத்தும் வச்சிரமும் நேத்திரங்களாகவும், அவ்விடத்து வந்து தங்கும் வெண்ணிறமேகம் விபூதியாகவும், அவ்விரண்டினைப்போலக் கோபுரத்தினுச்சியில் தங்குகின்ற சந்திரன் கங்கையாகவும் பொருந்த (கோபுரமானது) பரமேசுரனைப்போலிருந்தது. (எ-ம்) (௬௩)

மகரதோ ரணத்து நெற்றி வயங்குகண் ணுடி பானு
நகுவெயில் விரிக்குஞ் சோதி நாற்றுநித் திலத்தின் கோவை
தருநிலாப் பொங்கு மந்தத் தயங்கொளி யொன்றே டொன்று
பகைபெறு மன்றி மற்றைப் பகையில்ல நகரின் மன்றே.

(இ-ள்) மகரதோரணத்தின் உச்சியில் விளங்கும் கண்ணுடியாகிய சூரியனானவன் விளங்குகின்ற வெயிலை விரிக்கும் பிரகாசமும் (அதன் கீழே) தொங்கவிட்டிருக்கிற முத்துமாலையின் தருதியாகிய கிரணம் பொங்கும் அந்த

* திட்பமாகிய நிலம்-கொழுதத பூமி.

ஒளியும் ஒன்றோடொன்று பகை செயுமல்லாமல் திருப்பரங்கிரி யென்னும் நக ரில் வேறு பகையில்லை. (எ-ம்) (௩௨)

கொடிக்கழைக் காங்க ளாட்டிக் குளிர்முக முடைய மாதர்
நடித்தல்போன் மணித்தேர் சூழ நாடியே தம்ப மாக்கள்
கடிக்கமழ் சென்னி மீது கொடியெனக் கலையை வேய்ந்தோர்
துடித்தெழு பார்வை போலத் தோரணக் கயிறு நீடும்.

(இ-ள்) குளிர்ந்த முகமுடைய பெண்கள் நடனஞ்செய்தல் போலக் கழையிலேகட்டிய கொடிகளாகிய கைகளையசைத்து, அழகிய தேர்கள் சுற்றி வர(தோரணங்கள்கட்டிய) தண்டங்களைப் பிடித்துவரும் மனிதராகிய,வாசனை வீசுகின்ற தலைமேலே கொடியெழுதிய சேலையைத் தரித்தோரது துடித் தெழுகின்ற கண்களைப்போல தோரணமாகிய கயிறு நீட்டம் பெற்றிருக் கும். (எ-ம்) (௩௩)

தரைதனில் வைக்க வோங்குந் தம்பமான் முதலி னோர்கை
மருவுதோ ரணப்பன் னகம வீக்கிய மணித்தேர் வெற்பைச்
சுருதிவாய் மிழற்று மோசைத் தொன்னகர்க் கடலிற் பாய்ச்சித்
திருவிழா வமுதங் காணச் செய்தனன் போலு மன்றே.

(இ-ள்) பூமியிலே நடுதற்காக உயருந் துசத்தம்பத்தோடு,விஷ்ணு முத லிய தேவர்கள் கையிற்பொருந்திய வாசுகி யென்னும் பாம்புபோலுந் தோர ணங்கட்டிய அழகிய தேராகிய மந்தரமலையை வேதங்களொலிக்கும் ஒலி மிகுந்த பழைய பரங்கிரி நகரமாகிய கடலினுள்ளே புகுத்தித் திருவிழாவாகிய அமுதத்தை யெல்லாருங் காணத் தேவதச்சன் செய்தான். (எ-ம்) (௩௪)

மாளிகை முன்றில் வேதி வகுத்தத னடுவே வைத்த
நீளுநீர்க் குடங்கண் மீது நிறைதழை தழலா மீசன்
மூளுவெங் காற்ற சைக்க மொழிந்தநீள் வரத்தைத் தந்து
வாளிருஞ் சோதி கான்று வளர்குவான் போலு மன்றே.

(இ-ள்) மாடங்களின் முற்றந்தோறும் திண்ணைகள் வகை வகையாகச் செய்து அவற்றின் மேல் உயர்ந்திருக்கும் பூரண கும்பங்களின்மேல் நிறைந்து (உயர்ந்த) மாந்தழை (நிற்றலானது) அக்கினி வடிவமாகிய பரமேசுரன் வாயு வானவன் வந்தசைத்துக்கேட்க அவன் கேட்டவரத்தைக் கொடுத்து மிகுந்த பிரகாசத்தை வெளிப்படுத்தி வளர்ந்து நிற்றல் போலும். (எ-ம்) (௩௫)

நிறைகுடம் பாங்கா வைக்கு நிரைமணி விளக்கின் சென்னி
யறைதரு காற்றுற் கம்ப மணுகிவெங் கொழுந்து தாவல்
கறைகசிந் தாறும வேலோன் கருதியே யுறையு மூரி
லுறைவரை யணுகொ ணாதென் றும்பர்போங் கேதுப் போன்ற.

(இ-ள்) பூரணகும்பத்தின் பக்கத்திற்றங்கும் வரிசையாகிய அழகிய தீபங்களின் பிரகாசம் மோதப்பட்ட காற்றால் நடுக்கமுற்ற கூடுள்ள நுனிச் சுடர் மேலே யெழுந்து தாவுதலானது இரத்தங் கசிந்தாறும் வேலாயுதக் கடவுள் விருப்பமுற்றுத் தங்கு நகரினிடத்து வசிக்கின்றவரைப் பிடிக்க முடியாதென்று (நவக்கிரகங்களுளொன்றாகிய) கேதுவின்னுலகத்துக்குச்செல்லுதல் போலும். (எ-ம்) கேது நிறஞ்சிவப்பாதலால் விளக்கின் சுடருக்கு உவமானமாயிற்று. (கசு)

சேண்முக டணுகுந் தேரில வீக்கிய மாலைத் தேனை
யோணமீன் பக்க மேவி யொளிர்பிறை நெற்றி யென்று
நாண்மதி முகவின் மாத ரமுதினு நலத்த தென்று
மாணுறக் கொள்வ தாக வளர்ந்தன வீதி யெல்லாம்.

(இ-ள்) ஆகாயத்தினுச்சியில் நெருங்குந் தேரினிடத்துக் கட்டிய பூமாலையிலுள்ள தேனைத் திருவோண நக்ஷத்திரத்தின் பக்கத்திற் பொருந்திப் பிரகாசிக்கும் பிறைச்சந்திரனே நெற்றியென்று சொல்லப்படும் புதிய சந்திரன் போலுமுகத்தையுடைய தேவப்பெண்கள் அமுதத்தைப் பார்க்கினும் நன்மையுடையதென்று மாட்சிமை பொருந்த (எடுத்துக்) கொள்வதாக வீதிதோறும் அத்தேர்கள் வளர்ந்தோங்கின. (எ-ம்) (கஎ)

அறைகுதற் கரிய தான வழகிய குமரன் மன்றல்
பெறுவதற் கெழிலின் வீதி போழ கியற்றுங் காலை
மறுவறு திசையில் வானோர் வளர்முசு குந்த னாதி
குறைவிலா முனிவ ரேனோர் குறுகியே பரங்குன் றுற்றார்.

(இ-ள்) சொல்லுதற்கு முடியாத அழகிய முருகக்கடவுள் திருக்கலியாணஞ் செய்வதற்கு அழகினையுடைய (திருப்பரங்கிரியின்) தெருக்கள் மேலே சொல்லியபடி பேரழகு செய்யுங்காலத்தில் குற்றமற்ற திக்குப்பாலகர் முதலானவர்களும் முசுகுந்தச் சக்கரவர்த்தி முதலாகிய அரசர்களும் குற்றமில்லாத தேவர் முனிவர்களும் மனிதர்களுந் திருப்பரங்குன்றத்தில் நெருங்கிவந்து சேர்ந்தார்கள். (எ-ய) (கஅ)

பத்தாவது சூரசங்காரச் சருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் க௦-க்குக் கூடிய செய்யுள் சஅருகூ.

## பதினொன்றாவது

# திருக்கலியாணச் சருக்கம்.

தேர்ந்துளும் பியசொற் குமரவேள் சூரைச்
செகுத்தபின் பரங்கிரி யடைந்து
வேந்தர்கோன் மருவும் வரமளித் திடுங்கால்
விண்ணவர் மண்ணவர் விரைந்து
போந்ததும் புரத்தி னணிமையும் புகன்றோம்
புலங்கெழு முருகவேள் தெய்வக்
கூந்தலம் பிடியை மணம்புரிந் துவகை
குலவிய காதையை யுரைப்பாம்.

(இ-ள்) தேன் ததும்பிய சொற்களையுடைய குமாரக்கடவுள் சூரசங்காரஞ் செய்தபின்னர்த் திருப்பரங்கிரியினிடத் தெழுந்தருளித் தேவேந்திரன் பொருந்தும் வரத்தைக் கொடுத்தருளும்போது தேவர்களும் மனிதர்களும் அவசரப்பட்டு வந்ததும் பரங்கிரியை யலங்காரஞ் செய்ததும் சொன்னோம். (இனி) அம்முருகக்கடவுள் கூந்தலையுடைய பெண் யானை போன்ற தெய்வயானை யம்மையை விவாகஞ்செய்து மனமகிழ்ந்து விளங்கிய கதையைச் சொல்லுவோம். (எ-ம்) (க)

வண்டுகிண் டியதண் டுளவனுங் கடவுண்
மன்னனுங் கூறவே மயனு
மெண்டிசை புகழ மாமணக் கோயி
லியற்றினன் கனகமால் வரையுங்
கண்டுநா ணுறவே மண்டப முகட்டிற்
கதிர்பல கோடியர் போன்றே
யண்டரண் டங்க ளிருளொடுத் துண்ண
வருண்மணிக் குடம்பதித் தனனால்.

(இ-ள்) வண்டுகள் கிண்டுகின்ற துளவமாலையணிந்த விஷ்ணுவும் இந்திரனும் உத்தரவுசெய்ய, தேவதச்சனும் எட்டுத்திக்கும் புகழும்படி திருக்கலியாண மண்டபத்தைச் செய்தான். மகாமேருமலையுங்கண்டு வெட்கமடையும்படி மண்டபத்தினுச்சியில் கோடிசூரியர்களை யொத்த தேவர்கள் வசிக்கும்

அண்டங்களிலுள்ள இருட்கூட்டங்களைக் கெடுத்துச் சிவந்த மாணிக்கங்கள் பதித்த ஒரு கலசத்தைப் பதித்துவைத்தான். (எ-ம்) (௨)

நவமணி யிழைத்த கோபுர மேரு
நாற்றிசை வாயிலிற் செறியக்
குவைசெய்மண் டபத்து நாகமா மணிகள்
குலவுமுத் திடையிடை வீக்கி
வயிரவெள் ளாடி யிட்டிமைத் திடவே
வல்லிருள் சுருட்டியே விழுங்குந்
தவனகோ டியர்போற் பீடிகை நடுவே
தருமணிப் பீடமவைத் தனனால்.

(இ-ள்) நவரத்நங்கள் பதித்த மகாமேருவை யொத்த கோபுரங்களில் நாலு திசைகளிலும் வாயில்கள் நெருங்கக்கூட்டமாகச் செய்யப்பட்ட (திருக்கலியாண) மண்டபத்தில் நாகரத்நங்களையும் விளங்குகின்ற முத்துக்களையும் இடையிடையே கட்டி வயிரத்தாலாகிய வெள்ளிய கண்ணாடிகளைத் தூக்கவே வலிய இருட்கூட்டங்களை யெல்லாம் அவ்விரணடும் ஒதுக்கிப் பிரகாசிக்கும். (அவ்விடத்து) கோடிசூரியரைப்போல மணவறைத் திண்ணையினடுப்பக்கத்தில் தருந்த மணிகள் பதித்த ஆசனமொன்று செய்தான். (எ-ம்) (௩)

வயின்வயிற் செய்த வரைகளிற் பீடம்
வகுத்துவெண் சாமரை தூக்கி
வெயில்விடு நவமா மணிமைநாற் றியபின்
விளங்குதூ ணிரைத்தன முழுதுங்
குயிலுடன் பசிய கிளிகள்சேர் கமுகுங்
கட்டிய வாழையுங் கரும்புஞ்
செயிரறு சூழ்ச்சிப் பொம்மையோ வியமூர்
திசைதிசை யெங்கணு மியற்றி.

(இ-ள்) இடம் இடந்தோறுஞ் செய்த மலைபோன்ற மண்டபங்களில் ஆசனங்கள் வகைவகையாகச் செய்து வெண்சாமரை தூக்கிச் சூரியகாந்தியைச் செய்யும் நவரத்நங்களாற் செய்த மாலைகள் தூக்கியபின் விளங்குகின்ற தூண்கள் முழுவதுங் குயிலும் பசிய கிளிகளுஞ் சேரப்பட்ட கமுகும் வாழையுங் கரும்புகளும் வரிசையாகக் கட்டப்பட்டன. குற்றமற்ற ஆராய்ச்சியுடைய சித்திரம் போன்ற பொம்மைகளும் செய்து நாலு திசைகளிலும் வைக்கப்பட்டன. (எ-ம்) (௪)

பாதசா டகத்தைத் தருஞ்சில பொம்மை
பாண்மிழற் றிடுஞ்சில பொம்மை
யிருகையாற் றாளம் புடைக்குமோர் பொம்மை
யிலாகுபாய்ந் திடுஞ்சில பொம்மை
சுருதியை யிசையாச் சொலுஞ்சில பொம்மை
துடையறைந் தசையுமோர் பொம்மை
வரிசையாக் கதைசொல் வகுக்குமோர் பொம்மை
வட்டமிட் டாடுமோர் பொம்மை.

(இ-ள்) சில பொம்மைகள் நாட்டிய மாடும். சில பொம்மை (அதற்கிசைய) பாட்டுகள் பாடும். ஒரு பொம்மை இரண்டு கைகளாலும் தாளமடிக்கும். சில பொம்மை இலாகு பாய்ந்திடும். சில பொம்மை வேதங்களை இசையாகப் பாடும்; (அதைக் கண்டு கேட்டு) ஒரு பொம்மை தொடையைத் தட்டி மகிழ்ந்து நடிக்கும். ஒரு பொம்மை (முருகக்கடவுள் சரிதமாகிய) கதையை வரிசையாக வகுத்துச் சொல்லும். ஒரு பொம்மை வட்டமாகச் சுற்றி விளையாடும். (எ-ம்) (௫)

வின்னா மெடுத்துத் தெரிக்குமோர் பதுமை
கேடகஞ் சுழற்றுமோர் பதுமை
மன்னிய கதிர்வாள் விதிர்க்குமோர் பதுமை
வலியகட் டியஞ்சொலும் பதுமை
தன்னிலே குகன்சீர் சாற்றுமோர் பதுமை
தலையசைத் துலவுமோர் பதுமை
பொன்னணி கவரி யிரட்டுமோர் பதுமை
புதுமையாய் விசிறுமோர் பதுமை.

(இ-ள்) ஒரு பொம்மை வீணையெடுத்து வாசிக்கும். ஒரு பொம்மை கேடகமென்னும் ஆயுதத்தைச் சுற்றி விளையாடும். ஒரு பொம்மை நிலைபெற்ற ஒளியையுடைய வாளாயுதத்தை யெடுத்தசைத்துவிளையாடும், (ஒரு)பொம்மை கட்டியங் கூறி நிற்கும். ஒரு பொம்மை தன்னுள்ளே முருகக்கடவுள் கீர்த்தியை யெடுத்துச் சொல்லிக்கொண்டிருக்கும். ஒரு பொம்மை (அதைக் கேட்டுத்)தலையசைத்து உலாவிக்கொண்டு நிற்கும். ஒருபொம்மை பொற்பூண் பிடித்த சாமரமெடுத்து வீசிக்கொண்டு நிற்கும். ஒரு பொம்மை புதுமையாய் விசிறி விசிறிக்கொண்டு நிற்கும். (எ-ம்) (௬)

மண்டப முகட்டி னூற்றிய மாலை
மதுவொழு கியவொழுக் குடனே
யண்டர்மா மகுடக் கற்பக மாலை
யணிகறை விழுந்துசே றெழுப்பத்
தொண்டைவாய் மூரல் வானமங் கையர்க
டுணைமுலை யணிந்தகுங் குமத்தூள்
விண்டுக விறுகி நடைபெயர்த் திடுவோர்
விரைமலர்த் தாளடி பதியா.

(இ-ள்) மண்டபத்தினுச்சியிற் றொங்கவிட்ட பூமாலையினொழுகிய தேனுடனே தேவர்கள் கிரீடத்திலணிந்த கற்பகப் பூமாலையின் தேன் கலந்து விழுந்து பூமியிற் சேற்றையுண்டுபண்ண (அச்சேறு) கொவ்வைக்கனிபோன்ற வாயிற் புன்சிரிப்புடைய தேவப்பெண்கள் இரண்டு தனங்களிலுமணிந்த குங் குமப்பொடி யுதிர்ந்துவிழ இறுகி (விடலாலங்கே) நடப்பவர் மலர்போன்ற பாதங்கள் பதியமாட்டா. (எ-ம்) (எ)

செவ்வரி யெழுந்தோட் டாயிரங் கதவந்
திறந்துபுக் கிருந்தபொன் கோடி
மௌவல்வெண் ணகைய வாணியுங் கோடி
வானமங் கையர்களுங் கோடி
*யவ்விய மகன்ற முளைத்தபா லிகைக
ளாதிய மணத்தொழி லியற்றப்
பௌவமே ழுடுத்த பாரெலாம் பயந்த
பதுமநா பியன்முத லானோர்.

(இ-ள்) செந்நிறமெழுந் தாமரையின் ஆயிரமிதழாகிய கதவுகளைத் திறந்து புகுந்திருந்த இலக்குமிகள் கோடி. முல்லையரும்புபோலும் பற்களை யுடைய சரசுவதிகள்கோடி. தெய்வப்பெண்கள் கோடி. குற்ற நீங்கிய முளைப் பாலிகை முதலிய வைக்கும் கலியாணவேலைசெய்யச், சத்தசமுத்திரஞ்சூழ்ந்த உலகமெல்லாம் படைத்த பிரமதேவன் முதலியவர்கள். (எ-ம்) (அ)

மன்றலுக் குரிய வகையியற் றியபின்
வானவர் தமதெனக் கொண்டு
துன்றிடத் திங்கள் பன்னிரு பதங்கர்
சோதிசெய் விளக்கிட இயக்கர்

*அவ்வியம்-குற்றம். இது தாற்பரியம்.

நன்றென இசையை யிழற்றவின் மடவார்
நாடகந் திசைதிசை குனிக்கத்
தென்றலங் குழவி தத்தடி யிட்டுத்
திருமணப் பந்தரி னுலவ.

(இ-ள்) விவாகத்துக்குரிய எல்லாக் கிரியைகளுஞ்செய்து முடித்தபின் தேவர்களெல்லாம். தமது சொந்தக்காரியமென்றெண்ணி வந்து நெருங்கச் சந்திரனும் பன்னிரண்டு சூரியர்களும் பிரகாசமிக்க விளக்குகளை யேந்திக் கொண்டு நிற்க இயக்கராகிய இசைப்புலவர் நன்றென்று சொல்ல இசைப் பாட்டுகள் பாடத் தெய்வப்பெண்கள் நடனஞ்செய்யத் தென்றற் காற்று அசைந்தசைந்து கலியாணப்பந்தரினுள்ளே வர. (எ-ம்) (க)

பாசடை யுடுத்த வரசுவைத் திடுவார்
பாலிகை நிரம்பவைத் திடுவார்
மூசொளி கிளக்கு மணிவிளக் கேற்றி
மூலைக டோறும்வைத் திடுவார்
வாசமார் களபக் குங்குமச் சேறு
மருவுபொற் கிண்ணம்வைத் திடுவார்
தேசவிர் செம்பொற் குடத்துநீர் வார்த்து
மாந்தழை செறியவைத் திடுவார்.

(இ-ள்) பசிய அரசிலை கொண்டுவந்து வைப்பார். முளைப்பாலிகைகள் நிறையவைப்பார். மொய்க்கின்ற ஒளியை யெழுப்பும் இரத்நதீபங்களையுயர்த்தி மூலைகளெல்லாம்வைப்பார். வாசனை நிறைந்த குங்குமங்கலந்த சந்தனக்குழம்பு பொருந்திய பொற்கிண்ணம் வைப்பார். அழகு பிரகாசிக்குந் தங்கக்குடங்களில் நீரை வார்த்து நெருங்கும்படி மாந்தழை வைப்பார். (எ-ம்) (உ)

பல்லியங் கறங்கக் கிளத்துவார் சிலர்கள்
பங்கயன் பக்கலி லோரை
சொல்லெனத் திரண்டு வினவுவார் சிலர்கள்
சொல்லிய முகூர்த்தமீ தெனவே
யெல்லவிர் பணியை யிருவர்க்கு மணிய
வெழுமெனச் செப்புவார் சிலர்க
ளொல்லையிற் கருமங் கிளத்துவார் பிறி
துவரியொத் ததுமணப் பந்தர்.

(இ-ள்) சிலர் பல வாத்தியங்களையு முழங்க அவைகளை முழக்கச் சொல்லுவார். சிலர் கூடிப் பிராமணிடத்தில் வந்து முகூர்த்த லக்கினத்தைச் சொல்லென்று கேட்பார். முகூர்த்தமிதுவென்று, அவன் சொல்லவே, மாப்பிள்ளைக்கும் பெண்ணுக்கும் பிரகாசம் பொருந்திய ஆபரணங்களணியச் சொல்லுங்களென்று சிலர் சொல்லுவார். (இவ்விதமாகக் கலியாண) காரியங்களைப் பேசுவாருடைய சத்தம் கலியாணப் பந்தரினிடத்துச் சமுத்திர முழக்கத்தைப் போன்றிருந்தது. (எ-ம்) (யக)

செய்வகை யியற்றித் தேவருஞ் சரிவைச்
சேர்ந்துபூ மகண்முத லானோர்
துய்யவெண் கலையில் வடித்தெடுத் தரிய
தூயகங் கையைமணங் காட்டிப்
பையவே யம்மை குழல்வருந் தாட்டிப்
பரிவொடு தடித்தையே வெளிய
மைவளைந் தெனவொற் றுடையா லொற்றி
வண்டிரு மேனிநீர் சுவற்றி.

(இ-ள்) செய்யத்தக்க காரியங்களைச் செய்து தெய்வயானையம்மையைச் சேர்ந்து, இலக்குமி முதலிய தெய்வப்பெண்கள் மிக்க வெள்ளை வஸ்திரத்தில் வடித்தெடுத்த அருமையாகிய சுத்த கங்கையை வாசனைப்பொருள் சேர்த்து மிருதுவாகக் கூந்தலை விரித்து ஸ்நானஞ்செய்வித்து, அன்போடு மின்னலை வெள்ளைமேகம் வளைந்தாற்போல வெள்ளை வஸ்திரத்தால் சரீரமெங்கும் ஒற்றி யீரத்தைப்போக்கி. (எ-ம்) (யஉ)

இலங்குமின் னரைக்கீழ் வாலசூ ரியன்போ
லிமைத்தசெம் பட்டினை வீக்கித்
துலங்குபொன் சிவிறிக் காற்றினாற் குழலைத்
தூற்றியே வருந்துபின் னுணக்கிப்
பொலங்கெழு மகிலா தியபுகை யூட்டிப்
புதுமணச் சாந்தினாற் கோதி
யிலங்குகா ருடுக்கள் சேர்ந்தெனக் குழன்மே
லிமைத்தநித் திலங்கள்கோத் திணக்கி.

(இ-ள்) இலங்காநின்ற மின்னலைப்போலும் இடைக்குக் கீழே இளஞ்சூரியன்போற்பிரகாசித்தபீதாம்பரத்தையுடுத்தி விளங்குகின்ற பொன்கட்டிய விசிறிக்காற்றினாற் கூந்தலை வருந்து பின்புறத்திலீரத்தைப் போக்கிப் பொன்

விறமுள்ள அகிற்புகை முதலிய வாசனைப் புகைகளையூட்டிப் புதிய மண மூள்ள மயிர்ச்சாந்து தடவி, கரிய மேகத்தில் நக்ஷத்திரங்கள் கூடியிருந்தாற் போலக் கூந்தலின்மேலே பிரகாசிக்கின்ற முத்துக்களைக் கோத்துப் புனைந்து. (எ-ம்) (ரு௩)

தந்தையைச் சுமந்த நீலமே கத்தைத்
 தான்சுமந் தனையபூங் குழலிற்
சுந்தர விரவி யெனுந்தலைப் பணிகள்
 சுமந்திடக் கூந்தலே முடித்தே
யிந்துவை யிளமை தனிற்பணி தீண்டிற்
 றெனநுதற் சாந்தமுஞ் சாத்தி
யந்திலப் போதிற் பனிப்பருந் துளிபோ
 லாடக நாசிமுத் தணிந்து.

(இ-ள்) தன் பிதாவாகிய தேவேந்திரனை வாகனமாகிச் சுமந்த கரிய மேகத்தைத் தான் சுமந்தாற்போலும் பூங்கூந்தலினிடத்து, அழகிய சூரியன் போலும் நெற்றிச்சுட்டிகள் முதலிய ஆபரணங்களைத் தாங்கும்படி யணிந்து, அக்கூந்தலை முடித்து, இளஞ் சந்திரனைப் பாம்பு தீண்டினாற்போல நெற்றி யிலே கஸ்தூரிப் பொட்டணிந்து, அப்போதே பனியின் பெரியதுளிபோலும் வெள்ளிய முத்து மூக்குத்தியணிந்து. (எ-ம்) (ரு௪)

கருவளை புகும்பான் மிதந்தநீ லம்போற்
 கண்பெற வஞ்சனந் தீட்டித்
திருமுக மதிமேற் பவளமே போலுஞ்
 சேயிதழ் மணிநகை பாய
வருமுக மலரில் வண்டுமொய்த் ததுபோன்
 மருவுகண் ணேறுறு மறுவை
யருள்கபோ லத்தில் வைத்துமங் கையர்கண்
 ணுடியை யேந்தினின் றனரால்.

(இ-ள்) சூல்கொண்ட சங்கு புகுந்த பாற்கடலில் மிதந்த நீலரத்நம் போலக் கண்களலங்காரம்பெற மைதீட்டிச் சிறந்த முகமாகிய சந்திரனிடத் துப் பவளந் தோன்றுதல்போலச் சிவந்த அதரத்தினுள்ளே யிருக்கும் முத் துப்போலும் பற்களினொளியானது பாய்ந்துசெல்ல வருகின்ற அம் முகமாகிய தாமரை மலரில் வண்டு மொய்த்ததுபோலக் கண்திட்டி படாவிதமாகக் கன்

ணத்தில் மறுவாகிய கரியசாந்தைச் சிறுகத்தொட்டு வைத்துத் தெய்வப்பெண் கள் கண்ணாடியை யேந்திக் காண்பித்து நின்றார்கள். (எ-ம்) (மஙு)

வட்டமா மதிக்கீழ்ச் சூரியன் வரல்போல்
வாளியுங் கொப்புநற் றோடு
மிட்டுநற் கமுகை மின்னுடுத் ததுபோற்
கழுத்தெழு மங்கலக் காறை
தொட்டிட வணிந்து தோற்றிய கிரியே
யடைந்திடுந் தொலைவரை யிருபாற்
கிட்டிட நடுவே கிடந்தசூ ரியன்போற்
கிளர்முலை நடுப்பணி சாத்தி.

(இ-ள்) வட்டமாகிய சந்திரனுக்குக் கீழே சூரியன் வருதல்போல (காதுகளில்) வாளி, கொப்பு, தோடு என்ற மூன்று ஆபரணங்களையுமணிந்து, கமுகமரத்தை மின்னல்வந்து வளைந்தது போலக் கழுத்திலே மங்கலமுடைய பொற்காறை புனைந்து, உதயகிரி, அஸ்தமனகிரி என்னுமிரண்டு மலைகளுக்கு நடுவேயிருந்த சூரியன்போல விளங்கா நின்ற இரண்டு தனங்களுக்கு நடுவே இரத்நப்பதக்கம் அணிந்து. (எ-ம்) (மசு)

வாணியின் மடவார் சரிவளை யாகி
மருவலர்த் துணித்திட வுரையென்
றாணியே கையைப் பிடித்துரைப் பதுபோ
லொலிவளை பொற்சரி சாத்தி
மாணெழுங் கையின் மார்பினிற் பலவா
மணிக்கல னிமைத்திடச் சாத்திக்
கோணிடைக் கூறை யுறுதிநன் றெனவே
கூறிய மேகலை சாத்தி.

(இ-ம்) சாசுவதியும் தெய்வப்பெண்களும் சரியும் வளையலுமாகி, எங்கள் பகைவராகிய அசுரரைக் கொல்லும்படி (உன்னாயகனுக்கு) சொல்லென்று தெய்வயானையம்மை கைகளை யிறுகப்பிடித்துச் சொல்லுதல்போல முழங்கு கின்ற வளையலும் பொன்னாலாகிய சரியும் அணிந்து, (பின்னும்) மாட்சிமை தங்கிய அக்கைகளிடத்தும் மார்பினிடத்தும் பலவாகிய இரத்நாபரணங்கள் பிரகாசிக்கும்படி யணிந்து, வளைந்த இடையிலுள்ள சேலை (வழுவாமல்)உறுதி யிக்கதென்றுசொல்ல மேகலாபரணமணிந்து. (எ-ம்) (மஎ)

சுமையைமாற் றிடுவோன் றேவியென் றாகஞ்
சுடர்மணி யேந்திய பொன்னு
லமைசெய்பா டகமா மெனப்பதஞ் சாத்தி
யன்னங்கள் பொம்மென வஞ்ச
இமைசெயும் தண்டை நூபுரஞ் சாத்தி
யிருபத நகமெனு மதியைத்
தமரவெண் கதிரோன் சிற்றுருப் படைத்துத்
தணிதல்போல் விரற்பணி யமைத்தார்.

(இ-ள்) அசுரராகிய பாரத்தை நீக்கிய முருகக்கடவுள் தேவியென்று ஆதிசேடன் இரத்நங்களைப் பதித்துப் பொன்னுலமைத்துச் செய்த பாடகமா மென்று (பாடகங்களைப்) பாதங்களிலேயணிந்து, அன்னப்பறவைகள் விரைவாகப் பயப்படும்படி பிரகாசிக்கும் தணடையும் பாதசரங்களும் புனைந்து இரண்டு காலிலுமுள்ள நகமாகிய சந்திரனை முழுக்கத்தையுடைய சந்திரன் சிறிய வடிவங்கொண்டுவந்து தாழ்தல்போலக் கால்விரல்களிலணியும் ஆபரணங்களை யணிந்தார். (எ-ம) (மஅ)

செய்யவாய்க் கிளியாந் தெய்வயா னைக்குத்
திருக்கலன் சாத்திமற் றவையு
மொய்யென வியற்ற மாலயன் முதலோ
ருடையவன் கோயில்புக் கிறைஞ்சி
யையநீ வருக வேண்டுமென் றியம்ப
வதற்குநன் றெனத்தலை துளக்கப்
பையரா வணையான் மாமணி யிழைத்த
பணியெடுத் தணிகுவான் மன்னோ.

(இ-ள்) சிவந்த வாயினையுடைய கிளிபோலுந் தெய்வயானையம்மைக்கு (இவ்விதமாகச்) சிறப்புத் தங்கிய ஆபரண மணிந்தபின் பூமாலை முதலியவைகளையுஞ் சாத்த (அதுகண்டு) பிரம விஷ்ணுக்கள் முதலிய தேவர்கள் குமாரக் கடவுளெழுந்தருளியிருக்கும் மண்டபத்துக்கு வந்து வணங்கிச் சுவாமீ! நீர் மணக்கோலங்கொள்வதற்கெழுந்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, அதற்கு அவர் நல்லதென்று தலையசைக்க, விஷ்ணுவானவர் இரத்நாபரணங்களை யெடுத்துத் தரித்துத் திருமணக்கோலஞ்செய்யத் தொடங்கினார். (எ-ம்) (மக)

தந்தைமா மதியைச் சூடினா னெனவே
தவனனா மணிமுடி சாத்தி
யந்தர வானோர் பகையெரித் திடவே
யழலெனத் திலதமுஞ் சாத்தி
யிந்துமா முகஞ்சேர் பன்னிரு கதிர்போ
லிமைத்திடு மணிக்குழை சாத்தி
வந்திடும் புகழ்போ லனைவருங் காண
மணித்தொடை நித்திலஞ் சாத்தி.

(இ-ள்) குமாரக்கடவுள் பிதாவாகிய சிவபிரான் சந்திரனைத் தலையிலே தரித்தார். இவர் சூரியனைத் தரித்தாரென்று சொல்ல இரத்ந கிரீடந்தரித்து, தேவர்களுடைய பகையாகிய அசுரர்களை யெரிப்பதற்கு அக்கினி யென்று சொல்லும்படி (சிவந்த) சந்தனப்பொட்டுமணிந்து, சந்திரன் போன்ற முகத்திற்சேர்ந்த (பன்னிரண்டு காதுகளிலும்) பன்னிரண்டு சூரியர்போலவிளங்கு மாணிக்கம்பதித்த குண்டலங்களையணிந்து, குமாரக்கடவுளிடத்திலுண்டாகும் புகழைப்போல எல்லாருங்காண முத்தாரங்களை யணிந்து. (எ-ம்) (௨௰)

தந்திடுஞ் சுமையாற் றினையெனச் சேடன்
றழீஇயெனத் தோட்பணி சாத்தி
யுந்திய வெள்ளி விஞ்சுதா னவரை
யுவந்திடப் பொன்னுருப் படைத்து
வந்தெனக் கடக முன்கையிற் சாத்தி
வலியதா ருகனுரத் தாழி
முந்துறப் பணித்த கரத்தினால் மற்றை
மொய்த்தபூ ணிலகிடச் சாத்தி.

(இ-ள்) (எனக்குக்) கொடுக்கப்பட்ட (அசுரராகிய) பாரத்தை நீக்கினா னென்று, ஆதிசேடன் (வந்து) தழுவிக்கொண்டாற்போலவாகுவலயமணிந்து, சுக்கிராசாரியன் மிகுதியாகிய அசுரரை மகிழ்ச்சிசெய்யும் பொருட்டுப் பொன் வடிவமாகி வந்தாற்போலப் பொன்னாற்செய்த கங்கணத்தை முன்கையிலே புனைந்து, வலிமையுடைய தாரகாசுரன் மார்பில் முன்னஞ் சக்கரத்தையேவிய கையினால் கங்கணத்தைச் சேர்ந்த மற்றைத்திரண்ட ஆபரணங்களையுந்தரித்து (எ-ம்) திருமால் தாரகன்மார்பிற் சக்கரத்தை யேவிய கதையைக் கந்தபுராணத்திற் காண்க. (௨௧)

மாமடி யெனவே பொற்கலை சாத்தி
மாமறை யாயிரந் திரண்டு
தாமுறை யிடுநூ புரம்பதஞ் சாத்தித்
தண்கதிர் பழுத்தவா பரணம்
பூமகள் மணாளன் முருகவேள் மேனி
புனைந்தன னந்தநாள் முருகன்
காமர்சே வடியைக் கண்டிட விமையாக
கண்பெறு வானவர் களித்தார்.

(இ-ள்) உயர்ந்த கலை யென்று சொல்லப் பொன்னுலாகிய வஸ்திரந்த ரித்து அநேக வேதங்கள் முறையிட்டொலிக்குந் திருவடிகளிலே பாதசரம் புனைந்து (இவ்விதமாக) குளிர்ந்த பிரகாசம் பொருந்திய திருவாபரணங்களை யெல்லாம் விஷ்ணுமூர்த்தி முருகக்கடவுளுடைய திருமேனியிலேபுனைந்தனர். அந்தத்தினத்தில் முருகக்கடவுளது அழகிய திருவடிகளைத் தரிசிக்க இமையா நாட்டம்பெற்ற தேவர்களெல்லாம் சந்தோஷமடைந்தனர். (ஏ-ம்) (உஉ)

சலதியே முடுத்த புவிமக ளிழைக்குந்
தவப்பயன் பரங்கிரிக குமரன்
மலரடி யேத்தி வேதனு தியர்கள்
வாய்புதைத் தெழுந்தரு ளென்னப்
பலமணி குயிற்றும் பீடிகை யிழிந்து
பங்கையன் செங்கையைப் பற்றி
நிலமிசைப் போத மாபவன் முதலோர்
நெருங்கியே யாப்பரித் தனரால்.

(இ-ள்) சத்தசாகரஞ் சூழ்ந்த பூமிதேவி செய்த தவப்பிரயோசனத் தால் (வந்த) பரங்கிரியிலெழுந்தருளிய குமரக்கடவுளது தாமரைமலர்போன்ற திருவடிகளைத் துதித்துப் பிரமதேவன் முதலிய தேவர்கள் வாயைப் பொத்தி நின்று மணவறைக்கெழுந்தருளும்படி பிரார்த்திக்க இரத்ந சிங்காசனத்தை விட்டுக் கீழேயிறங்கிப் பிரமதேவன் கையைப்பிடித்துப் பூமியில் முருகக் கடவுள் நடந்துவர விஷ்ணு முதலிய எல்லாத் தேவர்களும் நெருங்கிவந்து மங்கல வாழ்த்துக்கூறி ஆரவார முழக்கமிட்டார்கள். (எ-ம்) (உரு)

பணிமுடி நெளிய நடஞ்செயு மயூரப்
பரிமுது கேறியூர்ந் திடுங்கா
லணிமலர் பொழியத் துந்துபி யிளிற
வண்டகு டாகமு நெரியத்

தணிவில திமிலை சல்லரி பம்பை
படக்கைபே ரியமொடு படக
மணிகொள்வீ ராணந் திண்டிமம் டமார
வாச்சியந் தமுக்கிவை கறங்க.

(இ-ள்) (அதன்மேல்) ஆதிசேடன் தலைகள் நெளியும்படி நடனஞ்செயு மயில்வாகனத்தின்மேலே குமாரக்கடவுளேறி வரும்போது தேவர்கள் புட்ப மாரி பெய்யத் தேவதுந்துபி முழங்க அண்டங்களினுச்சிகள் நெரியக் குறை வில்லாத திமிலை சல்லரி பம்மை படக்கை முதலிய வாத்தியங்களோடு படகம் வீராணம் திண்டிமம் டமாரம் தமுக்கு ஆகிய சிறிய வாத்தியங்களும் முழங் கின. (எ-ம்) (உச)

வளர்பிறை யெயிற்றுப் பூதர்கூத் தாட
மங்கையர் மங்கள மியம்ப
முளரியங் கண்ண னாதிய ருடுத்து
முன்வரு மூர்திபிற் படர
விளையுடுப் பொறியிற் கொறிக்கவங் காந்து
வியந்தருக் குடக்கொடி படரத்
தளரிடை யரம்பை மார்நடம் புரியத்
தண்மணச் சினகரம் புக்கான்.

(இ-ள்) மூன்றாம்பிறைபோலும் பற்களையுடைய பூதவீரர் நடனஞ் செய்யப் பெண்கள் மங்களவாழ்த்துக் கூற விஷ்ணு முதலிய தேவர்கள் தங் கள் தங்கள் வாகனத்திலேறி மயில்வாகனத்தைச் சூழ்ந்து முன்வர நட்சத்தி ரங்களை நெற்பொரியைப்போலக் கொறிக்க வாயைப்பிளந்து மகிழ்ந்த கோழிக் கொடி முன்னேவரச் சிற்றிடையுடைய தெய்வப் பெண்கள் நாட்டியமாடக் குளிர்ச்சியுடைய திருக்கலியாணமண்டபத்துள் குமாரக்கடவுள் புகுந்தனர். (எ-ம்) (உரு)

போந்தபின் மயில்விட் டிழிந்தசெவ் வேளைப்
புலோமசை யேத்தியே வாணி
தேன்றுளும் பியபால் கொடுத்திட வாங்கி
மருகனார் திருவடி விளக்கி
யார்ந்தவெண் கலைபா லொற்றிமா மாலை
யணிந்தபின் மணப்புகை காட்டிச்
சாந்ததி பத்துத் தட்டது சுற்றித்
தனதுள நாணியே யினளால்.

(இ-ள்) அதன்மேல் மயில்வாகனத்தை விட்டிறங்கிய குமாரக்கடவுளை இந்திராணி துதித்துச் சரசுவதி இனிமை நிரம்பிய பால் கொண்டுவந்து கொடுக்க வாங்கி மருமகனார் திருவடியில் அபிஷேகஞ்செய்து வெள்ளியவஸ்திரத்தால் ஈரம்புலர்த்திப் பூமாலைகள் புனைந்து வாசனைதங்கிய தூபதீபங்காட்டிச் சந்தனக்குழம்பிலே வைத்த தீபத்தினால் ஆலத்திசுற்றித் தன் மனத்துள்ளே வெட்கப்பட்டுச் சென்றனள். (எ-ம்) (உசு)

மருக்கிளர் மாலை நாற்றிய தெரியல்
மாபணக் கோயிலி னடுவே
யிருட்பிழம் புடைய விமைத்திடுஞ் சோதி
யெழின்மணிப் பீடமேல் வைகித்
திருக்கிளர் மார்பன் முதலினோ ரிருக்கச்
செப்பிய மாமணிப் பீடம்
பொருக்கென விருந்தார் மற்றைவா னவர்கள்
பூங்கா முகிழ்த்துநின் றனரால்.

(இ-ள்) வாசனை வீசுகின்ற பூமாலை தூக்கிய கலியாண மண்டபத்தின் நடுவே இருட்கூட்டங்கள் கெடும்படி பிரகாசிக்கும் ஒளியுள்ள மணிகள்பதித்த ஆசனத்தின்மேல் இலக்குமியை மார்பில் வைத்திருக்கும் விஷ்ணு முதலிய தேவர்முனிவ ரிருக்கும்படி முருகக்கடவுள் கட்டளையிட்டு முருகக்கடவுளும் இரத்நசிம்மாதனத்தி லெழுந்தருளியிருந்தனர். மற்றைத் தேவர்களெல்லாங் கைகளைக்குவித்து வணங்கி நின்றனர். (எ-ம) (உஎ)

இப்படி நிகழுந் திருமணங் காண
விளம்பிறை கங்கையா லொதுங்குந்
துப்பெழுஞ் சடையான் மலையினிற் பிறந்த
தோகையை வருகென விரைந்தே
யொப்பரி தான கணங்கள்சே விப்ப
வொளிர்மணித் தேரினைக் கடவிச்
செப்பருஞ் சீர்த்திப் பரங்கிரி யணைந்தான்
தேவர்கள் கூடியார்ப் பரித்தார்.

(இ-ள்) இந்தப்படி நடக்குந் திருமணக்காட்சியைக் காணுதற்கு, மூன்றாம்பிறைச் சந்திரன் கங்கையினலைகளா லொதுங்கியிருக்கும் பவளம்போன்ற சடையினையுடைய சிவபிரான் பார்வதி தேவியாரைச் சீக்கிரம் வரும்படி யழைத்துச் சிவகணங்கள் சேவை செய்துவர, இரத்நம்பதிந்த பொற்றேரி

ளைச் செலுத்திச் சொல்லுதற்கரிய கீர்த்தியுடைய திருப்பரங்குன்றத்தின்கண் வந்து சேர்ந்தனர். அப்போது தேவர்களெல்லாந் திரண்டு (அரகரவென்று) ஆரவாரமுழக்கஞ் செய்தனர். (எ-ம்) (உஅ)

வண்டுமு கறவு கொடுத்தபூங் கடம்ப
மாலையா னளவிலா வுவகை
கொண்டுதாய் தந்தை யவரெதிர் குறுகிக்
குலவுபன் னிருவிழி தேனை
யுண்டிடக் களிக்கும் வண்டென நோக்கி
புபயதா ளருச்சனை யிழைத்துத்
தண்டலி சேற்ற வெடுத்தனைத் திறுகத்
தழுவியே யுச்சிமோந் தனரால்.

(இ-ள்) வண்டுகள் கிண்டத் தேனைத் தந்ததவுங் கடம்பமாலை யணிந்த குமாரக்கடவுள் அளவில்லாத மகிழ்ச்சியடைந்து மாதாபிதாவாகிய சத்திசிவத்தை நெருங்கித் தம்முடைய பன்னிரண்டு கண்களாலும் தேனை யுண்ணுதற்கு மகிழும் வண்டுகளைப்போலப் பார்த்து அவர்களுடைய இரண்டு பாதங்களையும் அருச்சனைசெய்து குளிர்ந்த ஆசனத்திலெழுந்தருளச் செய் தலும் முருகக்கடவுளைத் தாய்தந்தையராகிய இருவரும் இறுகத்தழுவி யுச்சி மோந்தனர். (எ-ம்) (உக)

உலகமீன் றெடுத்த கன்னியோ டமல
னுவப்பொடு மகன்கரம் பற்றி
நலமெழத் தவிசி லிருத்திட வைக
னனிமா ளிகையுறை கடவு
ளலைகடற் றுயின்றோ னுதிவின் னவரு
மடிபணிந் தருச்சனை யிழைத்து
மலைபெறு மகளார் முலைமுக டழுந்து
மார்பனை யேத்தினின் றனரால்.

(இ-ள்) எல்லா வுலகத்தையும் பெற்ற பார்வதி தேவியாருடனே நின்மலவடிவாகிய சிவபிரான் குமாரக்கடவுள் கையைப்பிடித்து மணஞ்செய் யும் சிங்காசனத்திலிருத்திவைக்கக் குமாரக்கடவுளிருந்தபின் பிரமன் விஷ்ணு முதலிய மற்றைத் தேவர்களுந் திருவடிகளை வணங்கி யருச்சனைசெய்து பார்வதியார் கலந்த மார்பையுடைய பரமேசுரனைத் தோத்திரஞ்செய்து நின் றார்கள். (எ-ம்) (கூ0)

கூன்பிறைக் கோட்டுக் கரிமுகன் பெருத்த
குடவயி றெழுந்துபூ ரிக்கத்
தேன்பிலிற் றியபூங் கோயிலான் றெங்கம்
பழங்களை யுடைத்தருச் சித்து
வான்பெறு கழலை யோம்பிநால் வேதம்
வடித்தெடுத் திடுமனுக் கூறி
யான்பெரு கியநெய் சமித்தொடு தருப்பை
யனைத்தையு மிருபுறத் தமைத்து.

(இ-ள்) வளைந்த ஒற்றைக்கொம்புடைய யானைமுக விநாயகக்கடவுளது குடம்போலும் வயிறு நிரம்பத் தேங்காயுடைத்துப் படைத்து நிவேதித்துப் பூசித்துப் பெருமைபெற்ற அவரது திருவடிகளுக்கு உபசாரஞ்செய்து பிரமதேவன் நான்குவேதங்களின் சாரமாகிய மந்திரங்களைச் சொல்லிப் பசுவி னெய் சமித்துத் தருப்பை முதலிய திரவியங்களையும் இரண்டு பக்கத்திலும் வரவழைத்து வைத்துக்கொண்டு (எ-ம்) (கூக)

அங்கியின் கருமத் தேத்திய பொருளா
லாகுதி பலபல வியற்றிப்
பங்கையன் விதித்த வோரைவந் தணுகப்
பல்லியங் கடலெனக் கறங்கக்
கொங்கவிழ் துளவன் குலிசனை நோக்கிக்
குளிர்கிடந் திறைத்த சொற் குயிலை
யிங்ஙனம் விரைந்து கொடுவரு கென்ன
விந்திர னெழுந்துபோ யினனால்.

(இ-ள்) ஓமாக்கினி காரியங்கள் செய்து, உயர்ந்த நெய் பஞ்சாமிர்தங் களால் ஆகுதிசெய்து பிரமதேவன் சொல்லிய திருக்கலியாண முகூர்த் தம் வந்து சேர்ந்தவுடனே பலவித வாத்தியங்கள் கடல்போல் முழங்க விஷ்ணுவானவர் தேவேந்திரனைப் பார்த்துக் குளிர்ச்சியிருந்து வெளிப்படுஞ் சொற்களையுடைய குயில்போன்ற தெய்வயானையம்மையை யிவ்விடத்துக்கு அழைத்துக்கொண்டு வாவென்று சொல்லத் தேவேந்திரனெழுந்து சென் றான். (எ-ம்) (கூஉ)

அடைந்துதன் மகள்பா லெய்தியங் கண்ணே
யரசிள வன்னமே யமுதே
தொடர்ந்துசேர் தவமே தவப்பெரும் பேறே
சோதியின் கொழுந்துவிட் டெழுந்து

படர்ந்தபைங் கொடியே பச்சிளங் கிளியே
பார்த்திடுந் தோறுந்தோறு மினிக்க
நடந்தசித் திரமே நங்குல விளக்கே
நன்மணஞ் செயவரு கென்றான்.

(இ-ள்) தன் மகளாகிய தெய்வயானையம்மையிடம் போய் அழகிய கண்ணே! அரச அன்னமே! அமுதமே! என்னை விடாது பற்றிய தவமே! அத்தவத்தின் பெரிய பயனே! இளம்பிரகாசங் கொழுந்துவிட்டெழுந்த பசுங் கொடியே! இளம்பசுங்கிளியே! பார்க்குந்தோறு மினிமைசெய்ய நடந்த சித்திரமே! நமதுகுலதீபமே! திருமங்கல்யந்தரிப்பதற்கெழுந்து வருவாயாகவென்று சொன்னான். (எ-ம்) (௬௩)

வரைந்திடா வேத மிசைத்திடுங் கணிதம்
வடித்தெடுத் ததிற்பிழிந் தெடுத்துப்
பொருந்திய வோரை வழாதெழுங் காலைப்
பொருப்பெனப் பணைத்திறு மாந்த
பெருந்தன பாரக் குடச்சுமைக் கிளைத்தேன்
பிழைக்கிலே னெனவிடை நுடங்கி
நெரிந்திடப் புனைமே கலைகிடந் தரற்ற
நிலத்தின்மேல் லெனவடி பெயர்த்தாள்.

(இ-ள்) எழுதமுடியாத வேதங்கள் சொல்லுஞ்சாரமாக, எடுத்துப்பொருந்திய லக்கினம் தவறாமல் (தெய்வயானையம்மை) எழுந்துவரும்போது மலை போலப் பருத்துத்திரண்டு இறுமாந்த பெரிய தனபாரங்களைச் சுமக்கமாட்டாமலிளைத்துப் போனேன். இனிப் பிழைக்கமாட்டேனென்று, இடையான தசைய, மேகலாபரணங் கிடந்துமுழங்கப் பூமியிலே பாதங்களை மிருதுவாக எடுத்துவைத்தாள். (எ-ம்) (௬௪)

வெளியபட் டாடை முன்கையிற் பொதிந்து
விதியுல கோர்கரங் கொடுப்ப
முளரியங் கண்ண னுலகமா மடவார்
முன்னரராய் மங்கல மிசைப்பக்
களிபெறு மியக்க நாரியர் குளிர்ந்த
காற்றெழுங் கவரியை யிரட்டக்
குளிர்மதி யிரவி யுலகமா மடவார்
கோடியர் சக்கிர நிழற்ற.

(இ-ள்) சத்தியவுலகத்துப் பெண்கள் வெள்ளிய பட்டுவஸ்திரங்களைச் சுருட்டிக்கொய்து கையிலே கொடுக்கவும் வைகுந்தலோகத்துப் பெண்கள் முற்பட்டு மங்கலவாழ்த்துக் கூறவும் சந்தோஷமடையும் இயக்கலோகத்துப் பெண்கள் குளிர்ந்தகாற்று வரும்படி சாமரங்களையசைத்துவரவும் குளிர்ந்தசந்திர லோகத்துப்பெண்களும் சூரிய லோகத்துப்பெண்களுங் கோடிக்கணக்காயுள்ளவர்கள் பூச்சக்கிரவாளக்குடை பிடித்துவரவும் (எ-ம்) (௬௫)

சூரணங் கினர்கை யடைப்பைகொண் டிலையின்
சுருள்கொடுத் தருகினிற் படர
வாரழற் பதிய ரிருளொடுத் தறிஞ்ச
மனந்தமாம் பந்தங்க ளேந்தச்
சேருடு வுலகோர் கனியிதழ் துடைக்குந்
திருக்கலை தோளமைத் துலவ
நீரெழிற் பதியார் கங்கைநீர் புகட்டு
நிரைமணிச் செம்பெடுத் தியங்க.

(இ-ள்) தெய்வப்பெண்கள் கைகளில் வெற்றிலைப்பையைத்தாங்கி வெற்றிலையைச் சுருட்டிக்கொடுத்துப் பக்கத்தினிற்செல்லவும் அருமையாகிய அக்கினி யுலகத்துப்பெண்கள் இருளைக்கெடுக்கும் பலவாகிய தீவர்த்திகள்பிடித்துவரவும் நட்சத்திரவுலகத்துப் பெண்கள் வாய்துடைக்குஞ் சிறந்த வஸ்திரத்தைத் தோளிலே சுமந்து உலாவி வரவும் வருணலோகத்துப் பெண்கள் கங்கைநீரைக்கொண்ட இரத்நங்கள் பதித்த செம்புகளைத் தூக்கிக்கொண்டு வரவும் (எ-ம்) (௬௬)

மருவுகாற் றுலகோர் விசிறியின் விளிமபு
மணித்தக டசைத் தசைத் தணுக
நிருதியி னுலகோர் செய்யவாய் துமிக்கு
நிறைந்தபொற் படிக்கம தேந்தக்
கருதுகூற் றுலகோர் செங்கையா லத்தி
காட்டியே திசைதொறுங் குவிக்கப்
பொருவில்காந் தருவ நாரியர் வீணை
பொருந்துபாண் மிழற்றிடத் தெறிக்க.

(இ-ள்) வாயுலோகத்துப் பெண்கள் விளிம்புகளில் மாணிக்கத் தகடு பொதிந்த விசிறி வீசிக்கொண்டு நெருங்கிவரவும் நிருதிலோகத்துப் பெண்கள்

சிவந்த வாய்நீர் உமிழும் பொன்னாலாகிய படிக்கங்களைச் சுமந்துவரவும், யமனுலகத்துப் பெண்கள் ஆலத்திசுற்றி நாற்றிசையிலும் விளங்கிவரவும் கந்தருவலோகத்துப் பெண்கள் வீணையினிடத்துச் சமயத்துக்கேற்ற இசைபாடிக் கொண்டுவரவும் (எ-ம்) (கஎ)

மற்றைய வணங்கோர் நொய்யபட் டெனும்பா
வாடையை மகிழ்ந்துமுன் விரித்துச்
சிற்றுளி நிரம்பும் பனியினீர் பிலிற்றித்
திரண்டபூச் சிதறியே பரப்பப்
பற்றிய புவன நாயகி வந்தாள்
பாவையர் சிரோமணி வந்தா
ளெற்றுநீர்த் தடஞ்சூழ் பரங்கிரி வந்தா
ளென்றுசின் னம்பணி யாற

(இ-ள்) மற்றுள்ள தெய்வப்பெண்கள் மிருதுவாகிய பட்டுப்பாவாடையை மனமகிழ்ந்து முன்னே விரித்து சிலதுளிகள் நிறைந்த பன்னீரைச் சிந்தி சுகந்த புட்பங்களை வாரியிறைத்துக்கொண்டுவரச் சர்வலோகநாயகி வந்தாள் பெண்கள் சிரோரத்நம் வந்தாள் மோதுகின்ற அலைகளைவீசுந் தடாகஞ்சூழப்பட்ட திருப்பரங்கிரியினிடத்து வந்தாளென்று திருச்சின்னமூதி வரவும் () ()

எளியனே னெஞ்சத் திருந்திடச் சிவந்த
தெனச்செய்ய பஞ்சிடச் சிவந்த
குளிர்பொதி தாளிற் சிலம்புவீ றிட்டுக்
குளறிடக் குறுநடை பெயர்த்து
வெளியதோ ரன்னப் பேடென வருங்கால்
விண்ணவர் மகுடகோ டிகளி
னளிர்பெறும் பிரம்பு கலீரென வோச்சி
நாரியர் பரிசனங் கிளத்த.

(இ-ள்) எளிமையாகிய அடியேன் மனமாகிய (கல்லில்) இருந்திடலாற் சிவப்படைந்ததுபோலச் செம்பஞ்சுக் குழம்பை யூட்டச் சிவந்த குளிர்ச்சிபொருந்திய பாதங்களிற் சிலம்பு மிகுதியாக முழங்கச் சிறுநடை நடந்து வெண்ணிறம் பொருந்திய பெட்டையன்னம்போலத் (தெய்வயானை யம்மை) வரும்போது, தெய்வப்பெண்கள் தேவர்கள் கிரீடங்களிற் குளிர்ச்சி தங்கிய பிரம்பாலோங்கி அடித்துக் கூட்டத்தை விலக்கி வரவும் (எ-ம்) (கஅ)

உண்டிட வுவட்டா தெழுந்தபுத் தமுதே
யூற்றெழப் பழுத்ததீங் கரும்பே
வண்டெழா தலர்ந்து வளர்ந்தபூங் கொடியே
வடித்திடாத் தெளிந்தசெந் தேனே
யெண்டிசை விளக்க வருந்தனி விளக்கே
யினித்தினித் தருந்துகற் கண்டே
மண்டலம் புகழ வளர்ந்தபெண் ணரசே
மறுவெழா தெழுந்ததீப வொளியே.

(இ-ள்) உண்ண வெறுப்பில்லாத புதிய அமுதமே! மதுரங்கசிய முதிர்ந்த தித்திப்பான கரும்பே! வண்டுகள் நீங்கப்படாமல் மலர்ந்த பூங்கொடியே! வடிகட்டுதற்கிடமில்லாமற் றெளிந்த செந்தேனே! எட்டுத்திசைகளையும் பிரகாசப் படுத்தவரும் ஒப்பற்ற விளக்கே! மிகவும் மதுரம் பெருக வுண்ணப்பட்ட கற்கண்டே! உலகமெல்லாம் புகழும்படி வளர்ந்த பெண்ணரசே! குற்றமில்லாமற் றோன்றிய செகசோதியே! (எ-ம்) (சய)

மழலையங் கிளவி துளும்புவாய்க் கிளியே
மரகதப் பசியபசா மயிலே
யொழுகுதே னூறி யுவட்டெழுங் கனியே
யொளிகெடந் திமைத்தபொற் கொடியே
தழையிசை கெழுமபாண் மிழற்றிய குயிலே
தனிரெழுந் தசைந்தபூங் கொடியே
யெழுமிருட் படலங் கிழித்தமா மணியே
யெழுதரி தாணசித் திரமே.

(இ-ள்) மழலைச்சொற்கள் பேசும் வாயையுடைய கிளியே! மரகதம் போலும் பசியநிறமுள்ள மயிலே! வடியப்பட்ட தேனூறிப் பெருகுங் கனியே! பிரகாசம் பொருந்திய பொற்கொடியே! தழைப்பப்பட்ட இசை நிரம்பிய பாடலைப் போலக் கூவுங் குயிலே! இளந்தளிரெடுத்தசையும் பூங்கொடியே! மிகுந்த இருட்கூட்டத்தைத் தூரத்திய மாணிக்கமணியே! எழுதுதற்கரிதாகிய சித்திரமே!. (எ-ம்) (சக)

இன்னன கூறிக் கட்டியம் பொலிவோ
ரிரண்டரு கும்பிரம் பேந்திப்
பொன்னணு ரொழுங்காய்ப் பயப்பய நடக்கப்
பொற்சிலம் பரற்றியே புலம்பத்

அன்னுவா னுடுச்சூ ழமுதமூற் றெழும்புஞ்
சுடர்மதி யெனநடை பெயர்வா
ளென்னையாள் செவ்வே ளற்புதம் விளைக்க
வெழின்மணிச் சினகரம் புக்காள்.

(இ-ள்) இவ்விதமான வார்த்தைகளைச் சொல்லி இரண்டு பக்கமும் பிரம்பைத் தாங்கிக் கட்டியங் கூறுவோராகிய இலக்குமியைப் போலும் பெண்கள் ஒழுங்காகப் பையப்பைய நடந்துவரவும், நெருங்கிய நட்சத்திரக் கூட்டங்கட்கு நடுவே வரும் அமுதமூற்றெழுந் தொழுதுங் காந்திதங்கிய சந்திரனைப் போலச் சிலம்புகள் கலீரென முழங்க நடந்து வருபவளாகிய தெய்வயானையம்மை என்னையும் அடிமையாகக்கொள்ளும் முருகக்கடவுளுக்கு ஆச்சரிய முண்டாக அழகிய நவரத்நங்களா லலங்காரஞ்செய்யப்பட்ட திருக்கலியாண மண்டபத்துள்ளே புகுந்தாள். (எ-ம்) (சஉ)

மன்றல்மண் டபத்திற் புக்கபின் கடுக்கை
மாலிகை வீக்கிய சடையான்
குன்றின்ன் முளைத்த கொடிபதம் பணிந்து
குவித்தகை கொடுவலஞ் சூழ்ந்து
முன்றிகழ்ந் திடவே சுமங்கலம் பெறுவை
யென்றவர் மொழிந்திருந் திடுங்காற்
றன்றிரு முகஞ்சாய்த் திருந்தபின் கடைக்கண்
டழைந்தவா தரத்தொடு பார்த்தாள்.

(இ-ள்) அதன் பின் கொன்றைமாலையணிந்த சடையுடைய சிவபெருமான் திருவடிகளையும் இமையமலையிற்றோன்றிய பார்வதிதேவியார் திருவடிகளையும் வணங்கிக் கும்பிட்ட கைகளோடு வலப்பிரதக்ஷணஞ்செய்து முன்னே வந்து பிரகாசித்துநின்றாள். அவ்விருவரும் நீ நல்ல மங்களம் பெறுவாயென்று ஆசீர்வதித்து இருக்கும்படி கட்டளையிட்டருளும்போது தெய்வயானையம்மை தன்னுடைய திருமுகத்தை யொருபக்கஞ்சாய்த்து வெட்கமுற்றிருந்து பின்பு மிகுந்த ஆசையோடு கடைக்கண்ணால் முருகக்கடவுளைப் பார்த்தாள். (எ-ம்) ()

மாமிபுன் மூரல் விளைக்குமென் பதற்கோ
வானவர் திரண்டதென் பதற்கோ
பூமியின் முறைமை புரிகவென் பதற்கோ
புதுமணக் கோயிலென் பதற்கோ

தேமலர் மகள்சொல் வழுவுமென் பதற்கோ
திருப்புகு முன்னமென் பதற்கோ
தூமலர் வதனத் தழகுதிக் கெறிப்பச்
சுடர்க்கொடி முகங்கவிழ்த் ததுவே.

(இ-ள்) இவ்விதம் பரிசுத்தமாகிய தாமரைபோலும் முகத்தினழகு திக்குகளெல்லாம் பிரகாசிக்கப் பொற்கொடிபோலுந் தெய்வயானையம்மை முகங் கவிழ்ந்து நாணியிருந்தது,மாமியாராகிய பார்வதிதேவியார் புன்சிரிப்புச் செய்வாரென்பதற்கோ, தேவர்கள் கூட்டங்கூடியிருந்த சபை யென்பதற்கோ, உலகத்தார்செய்யும் முறைமையைத் தானுஞ்செய்யவேண்டுமென்பதற்கோ, இலக்குமி (மணவறையிலிருக்கும்போது முகங்கவிழ்ந்திருவென்று சொல்லிய) வார்த்தை (முகங்கவிழ்ந்திராவிட்டால்) தவறிவிடுமென்பதற்கோ, திருப்பூட்டு முற்காலமிது வென்பதற்கோ (யானறியேன்) (எ-ம்) (சச)

அப்பொழு தரிவை கடைக்கணூற் பார்க்கு
மருள்விளங் தழகுட னெழுகத்
துப்பமர் கனிவாய் நகைநில வொழுகச்
சுடர்ப்பணி கதிர்பழுத் தொழுகச்
செப்பரு முலைக்குன் றிரண்டின்மே லெறிக்குந்
திங்கள்போன் முகங்கவிழ்ந் திருக்கு
மொப்பரி தான சித்திர வுருவை
யும்பர்கோன் றலைநிமிர்ந் தெடுத்தான்.

(இ-ள்) அந்தச் சமயத்தில் தெய்வயானையம்மை கடைக்கண்ணாற் பார்க்கும் அருள் மிகுந்து அழகுடனே பிரகாசிக்கப் பவளம் போலும் வாயினின்றுஞ் சந்திரகிரணம்போலும் புன்சிரிப்புத்தோன்ற ஆபரணங்களின் மிகுந்த காந்தி யெங்கும் வியாபிக்கச் சொல்லுதற்கரிய தனங்களாகிய மலைகளின்மேற் பிரகாசிக்குஞ் சந்திரனைப்போலு முகங்கவிழ்ந்திருக்கும் ஒப்பில்லாத சித்திரம்போலும் (தன்னுடைய புத்திரியின்) திருவுருவத்தைத் தேவேந்திரன் தலை நிமிர்ந்து பார்த்துச் சந்தோஷித்தான். (எ-ம்) (சரு)

அக்கண மிளமை யழகுட னெழுக
வண்ணல்பன் னிரண்டுகட் கடையா
மிக்கதோர் கருணை கடலெனப் பெருகி
வெள்ளமூற் றெழுந்துமிக் கொழுகப்

பக்கம்விற் றிருந்த கிளிதனைப் பார்த்தான்
பாவியே னவ்வருட் கடலுட்
டக்கதோர் திவலை பெறுகுவான் வேண்டிச்
சண்முகன் புகழ்விரிப் பதுவே.

(இ-ள்) அப்பொழுது இளமைப்பருவமும் அழகும் பிரகாசிக்க எப்பொருட்கு மிறைவராகிய முருகக் கடவுள் பன்னிரண்டு கடைக்கண்களினு மூண்டாகுங் கருணை வெள்ளங் கடல்போல ஊற்றிருந் தொழுகும்படி பெருகத் தமது பக்கத்திலிருந்த கிளிபோலுந் தெய்வயானையம்மையைப் பார்த்தருளினார். பாவியேனாகிய நான் அந்த அருட்கடலினிடத்துண்டாகிய ஒரு சிறு துளியைப் பெறும் பொருட்டு ஆறுமுகக்கடவுளுடைய புகழை விரித்து உங்களுக்கு நான் சொல்வது என்றார் சூதமுனிவர். (எ-ம்) (௪௬)

இருவரும் விரும்பி யிருந்திடுங் காலை
யிளமதி நுதலயி ராணி
பரிவொடு நாணிப் பணிவிடை யியற்றப்
பவளவாய்க் குகன்பத பூசை
மருவியீ ரெட்டாம் வரிசைக ளியற்றி
வளரடை காய்கொடுப் பித்துத்
திருமகள் கையிற் குமரர்கை யமைத்துச்
சிறுவிரல் கோத்துவைத் தனனால்.

(இ-ள்) இந்தப்படி முருகக்கடவுளுந் தெய்வயானையம்மையு மிருக்கும்போது இளஞ்சந்திரனைப்போலும் நெற்றியையுடைய இந்திராணி அன்போடு நாணப்பட்டுக் கலியாணச் சடங்குக்கேற்ற காரியங்களைச்செய்யப் பவளம்போலும் வாயையுடைய முருகக்கடவுள் பாதபூசனை செய்யத் தொடங்கிச் சோடசோபசாரமாகிய வரிசைகளைச்செய்து தாம்பூல நைவேத்தியஞ்செய்வித்துத் தேவேந்திரன் சிறந்த புத்திரியாகிய தெய்வயானையம்மை கையிலே குமாரக்கடவுள் திருக்கரத்தைச் சேர்த்து, அவ்விருவர் கைவிரல்களையுங் கோத்துவைத்தான். (எ-ம்) (௪௭)

பின்னையன் கரிமா முகன்பத பூசை
பேணுவித் தறுமுகன் கையின்
மன்னிய பொருளீந் தழல்முகட் டதனின்
மந்திர வாகுதி செலுத்தப்

பொன்னெழின் மார்பன் சொற்படி குகற்குப்
புலோமசை கொடுத்தநீர் மகவான்
றன்னெழின் மகவைத் தத்தமென் றிசைத்து
வார்த்திடத் தடங்கையேற் றனனால்.

(இ-ள்) அதன்மேல் பிரமதேவன் யானைமுக விநாயகக் கடவுளைப் பூசைசெய்து குமாரக் கடவுளது திருக்கரத்தில் ஓமஞ்செய்யும் பொருள்களைக் கொடுத்து ஓமாக்கினியின் உச்சியில மந்திரத்தா லாகுதி செய்விக்க, இலக்குமியை மார்பிலே வைத்திருக்கும் விஷ்ணுமூர்த்தி யுத்தரவுப்படி முருகக் கடவுளுக்கு, இந்திரன் தன்னுடைய மகளாகிய தெய்வயானையம்மையைத் தத்தஞ் செய்தேனென்று சொல்லி இந்திராணியார் கொடுக்கப்பட்ட நீரை வாங்கித் தாரைவார்த்தான். அந்த நீரை முருகக்கடவுள் தமது விலாசமாகிய திருக்காத்திலேற்றுக் கொண்டனர். (எ-ம) (சஅ)

பழிச்சுவோர் தமக்கும பாவினோர் தமக்கும்
பதமலர்ப் பூசையோர் மலரா
லிழைத்துளோர் தமக்கு நால்வகைப் பொருளு
மீந்திடும பராபரக கடவுள்
குழூச்செயுஞ் சுராகோ னொழுக நீர் கொண்டான்
குவலய நீதியை முயலத்
தொழிற்செயு மகவான் பெற்றபே றதனைச்
சுராதிபர் சொல்லவல லவரோ.

(இ-ள்) துதிக்கின்றவர்க்கும் வணங்குகின்றவர்க்கும் திருவடித் தாமரையை யொருமலராலாயினும் பூசை செய்வோருக்கும் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால்வகைப் பொருள்களையும் கொடுத்தருளும் மேலாகிய குமாரக்கடவுள் கூட்டமாயநின்ற தேவர்களுக்கரசனாகிய தேவேந்திரன் ஒழுக்கிய தாரை நீரைத் திருக்கரத்தில் வாங்கிகொண்டனர். (அது) உலகம் நீதி சாத்திர விதிகளைக் கைகொண்டு செய்தற்பொருட்டே யாகும். இத்திருமணச் சடங்கைச் செய்விக்கும் இந்திரன் பெற்ற தவப்பயனைத் தேவர்களுக்குள் தலைமையாவாருள் யார் சொல்ல வல்லவர். (எ-ம) (சக)

வண்டுழு கமலன் மந்திரங் கூறி
மங்கல நாணெடுத் துதவக்
கண்டுவாங் கியபின் புன்னகை யருப்பிக்
காரிகை கழுத்திலீக் கினனே

வண்டரார்ப் பரித்தார் பூதரார்ப் பரித்தா
ரந்தா துந்துபி யதிர்ச்சி
கொண்டன நறிய பொன்மலர் மாரி
குவிந்தன திசைதிசை யெல்லாம்.

(இ-ள்) வண்டுகள் கிண்டும் தாமரைப் பூவிலிருக்கும் பிரமதேவன் திருமங்கல்யத்தை யெடுத்துக்கொடுக்க முருகக்கடவுள் வாங்கிய பின்னர்ப் புன்சிரிப்புச்செய்து தெய்வயானையம்மை கழுத்திலே கட்டியருளினர். தேவர்களும் பூதகணங்களும் மனமகிழ்ந்து, ஆரவார முழக்கஞ்செய்தனர் ஆகாய துந்துபிவாத்திய முழங்கின. நல்லபொன்னாலாகிய புட்பமாரி நாலுதிக்கிலும் பொழியப்பட்டன. (எ-ம்) (௩0)

இத்தகை யியற்றுங் காலைநஞ் சொழுகு
மெயிறுடை நாகணைத் துயின்றோன்
கொத்தெழு கடம்ப மார்பனை நோக்கிக்
குளிர்நடை பெயவெனப் பெயர்ந்து
மொய்த்தவங் குரப்பா விகைகுடந் தீப
முளைத்தெழில் விளையா சனை
வைத்தது நோக்கித் தேவருஞ் சரியு
மணாளனு மூவலம் படர்ந்தார்.

(இ-ள்) இந்தப்படித் திருமங்கல்யதாரணஞ் செய்தபின் சர்ப்பசயனத்தில் நித்திரை செய்யும் விஷ்ணுவானவர் கடம்பமாலையணிந்த முருகக்கடவுளைப் பார்த்துச் சிறிது எழுந்தருளவேண்டுமென்று சொல்ல, அவர் தெய்வயானையம்மையுடனெழுந்து முளைப்பாலிகை பூரணகும்பம் தீபம் அழகு நிறைந்த அரசாணை வைத்திருந்தலைத் திருக்கண் சாத்தி மூன்று தரம் பிரதக்ஷணம் வந்தனர். (எ-ம்) (௩க)

படர்ந்தபின் னிருவர் வடதிசை முகட்டி
லருந்ததி பார்ப்பவர் போலத்
தொடர்ந்தகற் பதனை யருந்ததிக் குதவிச்
சூரியர் கோடிய னையான்
மடந்தைதாள் சிலைவைத் திடுதியென் றரியும்
வகுத்திட வம்மியி லழகா
லடைந்தபுன் னகைகொண் டமைத்தன னடியே
னகச்சிலை யழுத்திய பதத்தான்.

(இ-ள்) அதன்மேல் நாயகனும் நாயகியும் வடபக்கத்து ஆகாயத்தினுச்சியில் அருந்ததியைப் பார்ப்பவர்போல அவளுக்கு நீடித்த கற்பினையருளிச் செய்து கோடி சூரியப்பிரகாசம் போன்ற முருகக்கடவுள் விஷ்ணுவானவர் சொல்லியபடி தெய்வயானையம்மை திருவடியைத் தமது திருக்கையினலெடுத்துப் புன்சிரிப்புச்செய்து அம்மிக்கல்லில் வைத்தருளினர். (அவர் எத்தன்மையுடையவரென்றால்) அடியேனுடைய மனமாகிய கல்லிற் றமது திருவடியை யழுத்தும்படி பதித்தவர். (எ-ம்) (கூஉ.)

களிற்றினைச் செகுத்த களிற்றினுக் கிளைய
களிறுவான் களிற்றினை மணந்து
துளித்தவெண் டிவலைக் கங்கைவே ணியனைத்
தொலைவிலா மகிழ்பெறுந் தாயைக்
குளித்தவா தரத்தோ டிறைஞ்சியே சூழ்ந்து
குளிர்செவ்வாய் மலர்ந்துசொற் பழிச்ச
விளித்தெடுத் தணைத்து முத்தமிட் டாசி
விளம்பியே யுச்சிமோந் தனரால்.

(இ-ள்) கயமுகாசுரனை வென்ற விநாயகக் கடவுளுக்குத் தம்பியாகிய குமாரக்கடவுள் தெய்வயானையம்மையை விவாகஞ்செய்து வெள்ளிய துளிகளையுடைய கங்காநதியைத்தரித்த சடையினையுடைய சிவபிரானாகிய பிதாவையும் மிகுந்த மகிழ்ச்சியுடைய உமாதேவியையும் படர்ந்த அன்போடு வணங்கிப் பிரதக்ஷணஞ்செய்து குளிர்ந்த திருவாயால் தோத்திரஞ்செய்ய (அவ்விருவரும்) முருகக்கடவுளைப் பக்கத்திலழைத்துக் கைகளாலணைத்து முத்தமிட்டு ஆசீர்வாதஞ்சொல்லி யுச்சிமோந்து மகிழ்ச்சியடைந்தனர். (எ-ம்) (கூ௩)

ஆதியெம் பரமன் களித்துவாழ்த் தியபின்
னந்தர துந்துபி பிளிறத்
தீதில்பல் லியங்கள் கறங்கவான் களிறு
சிவிகையிற் குமரன்யா னையின்மேல்
வீதிகள் விளங்க வூர்வலம் படர்ந்து
விளங்கிய கோயின்முன் னிழியச்
சீதன மாகத் தன்கிளை முழுதுந்
தேவர்கோன் குமரனுக் களித்தான்.

(இ-ள்) ஆதியாகிய சிவபிரானிவ்வாறு செய்தபின் ஆகாயத்தில் துந்துபி வாத்திய முழங்குதலுடனே குற்றமில்லாத பலவகை வாத்தியங்களொலிக்கவும்

தெய்வயானையம்மை சிவிகைமேலுங் குமாரக்கடவுள் யானையின்மேலுமெழுந் தருளித் தெருக்கள் பிரகாசமடைய நகர்வலஞ்செய்து ஆலயத்தின் முன்னே வந்திறங்கத் தேவேந்திரன் தன்னுடைய சுற்றத்தாரெல்லாரையுந் தெய்வ யானையம்மைக்குச் சீதனமாகக் கொடுத்தான். (எ-ம்) (௫௪)

அப்பொழு தமரர் வானகத் திருந்தே
யரியபொற் பூமழை சிதற
மைப்பொரு மாய னாதியோர் சூழ்ந்து
வாழிய வென்றுடன் படரத்
துப்பமர் கனிவாய்க் கிளியுடன் குமரன்
சோதியஞ் சினகர புகுந்தே
யொப்பரி தான தந்தைமான் முதலோ
ருற்றிட நாப்பணி லிற் றிருந்தான்.

(இ-ள்) அப்பொழுதே தேவர்கள் ஆகாயத்திலெழுந்து பொன்மலர் மாரி பொழிந்தார்கள். மேகம்போன்ற விஷ்ணு முதலியோர்கள் மங்கல வாழ்த் துச்சொல்லிச் சூழ்ந்துவரப் பவளம்போலக் கனிந்த வாயையுடைய தெய்வ யானையோடு முருகக்கடவுள் பிரகாசமுடைய ஆலயத்துள்ளே புகுந்து ஒப்பில் லாதபிதாமாதாவாகிய சிவபிரான்உமாதேவி விஷ்ணு முதலோரிருக்கும் திருக் கலியாணமண்டபத்தினடுவே யெழுந்தருளியிருந்தார். (எ-ம) (௫௫)

இருந்தகா லையினிற் செந்திரு முதலோ
ரெழிலபெறு சோபனங் கூறக
குருந்தின்மீ திவருங கொண்டல்வா னவர்கள்
குளிர்ந்தபச் சறுகுதண் டுலங்கொண்
டருந்தொன்மா மறையின் மந்திரங் கூறி
யருண்பணி யியற்றிவா னவர்கண்
விருந்தயின் றிடவே பூசனை யியற்ற
வேதனா தியர்துதி புகல்வார்.

(இ-ள்) இவ்விதமிருந்த காலத்தில் இலக்குமி முதலிய தெய்வப் பெண் கள் சோபன மங்களம் பாடவும், குருந்தமரத்திலேறி விளையாடும் விஷ்ணு முதலிய தேவர்கள் குளிர்ந்த பசிய அறுகம்புல்லும் பச்சரிசியுங் கொண்டு வந்து வைத்து, அருமையாகிய வேதமந்திரங்களைச் சொல்லி அறுகுமணச் சடங்கு செய்து, தேவர்கள் கண்கள் களிகூர்ந்து தரிசிக்கப் பூசைசெய்யவும், பிரமதேவன் முதலிய தேவர்கள் தோத்திரஞ்செய்யத் தொடங்கினர்.() (௫௬)

கோலுமீ ராறு ஞாயிறு போலுங்
குண்டலக் காதுளாய் சரணஞ்
சாலுமவெண் டிங்கள் வதனனே சரணந்
தயங்குசெவ் வாயனே சரணம்
ஏலவே யன்பு தனதென வியாழ
மிறைஞ்சிய வெள்ளியங் கிரியான்
பாலனே சூரற் கசனியே சரணம்
பரங்கிரிக் குமரனே சரணம்.

(இ-ள்) பன்னிரண்டு சூரியர்களைப்போலும் வளைவாகிய குண்டலங்களணிந்த காதுகளையுடையாய், மிகுந்த வெண்ணிறமுடைய சந்திரன்போலு முகங்களையுடையாய், அன்பு தனதாகப்பொருந்த வியாழபகவான் வணங்கப்பட்ட கயிலாச மலையுடைய சிவபிரான் மைந்தனே, சூரனுக்கு இடிபோன்றவனே, பரங்கிரிக் குமாரக்கடவுளே! (உனக்கு நாங்கள்) அடைக்கலம். () (ருஎ)

அரியயன் முதலோர் துதிக்கைபெற் றாறு
மருள்மதஞ் சொரிந்துநின் விழியாம
வரியளி யுலவப் புகர்முகங் கொண்ட
மார்புடைத் தெய்வயா னையினைக்
கருதுமங் குசங்கொண் டிணக்கியே நீங்காக்
காதலாஞ் சங்கிலி பூட்டிப்
பருமணிப் புயத்தி லணைத்துளாய் சரணம்
பரங்கிரிக் குமரனே சரணம்.

(இ-ள்) பிரமா விஷ்ணு முதலியோர் தோத்திரங்களைப் பெற்றுப் பெருகுங் கருணையாகிய மதத்தைச் சொரிந்து, உன்னுடைய கண்களாகிய வண்டுகளுலாவ யானைபோலுந் தனங்களைக்கொண்ட மார்பினையுடைய தெய்வயானையம்மையைக் கருதுகின்ற அவ்விடத்து அன்பால் வசப்படுத்தி ஆசையாகிய சங்கிலியைப் பூட்டிப் பெரிய இரத்நாபரணங்களணிந்த மார்பாகிய (கட்டுத்தறியில்) சேர்த்தவனே அடைக்கலம். (எ-ம்) (ருஅ)

தேமலர்த் தருவை வானவ ரிருப்பைச்
சிதறிடக் கவடுகொண் டோங்கி
யாமெனத் திமைத் தளிர்தழைத் தோங்கி
யத்தியில் முளைத்துநின் றருளு

மாமா மிரண்டு துண்டமாய்ப் பிறக்க
வளர்திரு வேல்கொடு தாக்குந்
தாமரைப் பூங்கைக் குமரனே சரணந்
தமிழ்ப்பரங் கிரியுளாய் சரணம்.

(இ-ள்) கற்பக விருக்ஷத்தையுந் தெய்வலோகத்தையும் அழிக்கும்படி கவடுகொண்டெழுந்தாற்போலத் தீமையாகிய தளிரெடுத்து உயர்ந்து சமுத்திரத்தின் மத்தியில் முளைத்தெழுந்த (சூரனாகிய) மாமரம் இரண்டு துண்டாகித் தோன்ற உயர்ந்த சிறப்புத்தங்கிய வேலாயுதத்தினால் தாக்கும் தாமரை மலர்போலுங் கையையுடையவனே! தமிழ் நிறைந்த பரங்கிரிக்குமாரக் கடவுளே! அடைக்கலம். (எ-ம்) (௫௬)

வேறு.

மாவுடனே சூர்மகளிர் மங்கலியப் பிச்சையிடு
மலர்க்கை போற்றி
தேவர்சிறை மீளவொரு சூரனெதிர் தேரேறுந்
திருத்தாள் போற்றி
பாவைபங்கர் திருச்செவியிற் குனிந்துரைக்கு மந்திரவாய்ப்
பவளம் போற்றி
கோவிறல்சேர் வேலவநின் பரங்கிரியி லிருந்தமணக்
கோலம் போற்றி.

(இ-ள்) பெருமையுடனே தெய்வப்பெண்களுக்குத் தாலிப்பிச்சை கொடுத்த மலர்போலுந் திருக்கரத்துக்கு நமஸ்காரம். தேவர்களெல்லாருஞ் சிறைச்சாலையை விட்டு நீங்கச் சூரனுக்கெதிரே திருத்தேரேறிச் சென்ற திருவடிகளுக்கு நமஸ்காரம். அர்த்தநாரீசுரராகிய சிவபிரான் திருச்செவியில் தலைகுனிந்து மந்திரோபதேசஞ்செய்த பவளம்போன்ற திருவாய்க்கு நமஸ்காரம். உயர்ந்த வெற்றி பொருந்திய வேலேந்தியவரே! உம்முடைய பரங்கிரியிலெழுந்தருளியிருந்த திருமணக்கோலத்துக்கு நமஸ்காரம். (எ-ம்) ()

வருதெய்வ யானைபத மம்மியிட நகைவிளைக்கும்
வதனம் போற்றி
ஒருதமைமை யருளொழுகி வடிந்திடவே நோக்குமிரு
கடைக்கண் போற்றி

யரிபிரமர் கண்கலக்க மகற்றுதுமென் றபயவர
மருள்கை போற்றி
குருதியெழு வேற்கரத்தாய் பரங்கிரியி லிருந்தமணக்
கோலம் போற்றி.

(இ-ள்) தெய்வயானையம்மை திருவடியை உம்முடைய திருக்கர மெடுத்து அம்மியிலே வைக்க அப்போது புன்சிரிப்புக்கொண்ட உம்முடைய திருமுகத்துக்கு நமஸ்காரம். நினைக்கின்ற அடியேங்களிடத்துக் கருணை கசிந்தொழுகி வடியும் உம்முடைய திருக்கடைக்கண்களுக்கு நமஸ்காரம். பிரம விஷ்ணுக்கள் கண்கலக்கத்தை நீக்குவோமென்று அபயவரங் கொடுத் தருளிய உமது திருக்கரங்களுக்கு நமஸ்காரம். (எ-ம்) (சுக)

மன்னியமின் னெழுசெக்கர் வான்போலும் பொற்புரிநூன்
மார்பம் போற்றி
கன்னிறைத்த மணிமகர குண்டலங்க ளிலங்கியிடுங்
காது போற்றி
வன்னமெழுங் கோடிசூ ரியர்களென முடிகவிழ்த்த
மகுடம போற்றி
கொன்னவிலும் வேலணிவோய் பரங்கிரியி லிருந்தமணக்
கோலம் போற்றி.

(இ-ள்) நிலைபெற்ற மின்னலையுடைய செவ்வானம்போலும் பொன் னாற்செய்த முப்புரிநூல் தரித்த உமது மார்புகளுக்கு நமஸ்காரம். இரத்தினங் கள் நிறைக்கப்பட்ட அழகிய மகரகுண்டலங்கள் பிரகாசிக்கும் உம்முடைய காதுகளுக்கு நமஸ்காரம். நிறம் பொருந்திய கோடிசூரியர்களைப் போலும் உம்முடைய திருமுடியிற் சூட்டிய கிரீடங்களுக்கு நமஸ்காரம். அச்சத்தைச் செய்யும் வேலாயுதத்தைத் தரித்தவரே! திருப்பரங்குன்றத்திலெழுந்தருளி யிருந்த உமது திருமணக் கோலத்துக்கு நமஸ்காரம். (எ-ம்) (சுஉ)

ஆருயிரே புத்தமுதே யரசேகண் மணியேயென்
றழைக்குந் தோறும்
பாரமுலை யுமைமடியிற் பதறிவந்து பாய்ந்தேறும்
பதுமம் போற்றி
தாரெனவே குமுகுமென நறையொழுகுங் கடம்பிருந்த
சைலம் போற்றி
கூரியதோர் வேலணிந்த குமரபரங் கிரியின்மணக்
கோலம் போற்றி.

(இ-ள்) அருமையாகிய உயிரே, புத்தமுதே, அரசே, கண்மணியே யென்று கூப்பிடுந்தோறும் பரியதனங்களையுடைய உமாதேவியார் மடியின்மே லோடிவந்தேறியிருக்கும் உம்முடைய பாதங்களுக்கு நமஸ்காரம். பூங்கொத் துப்போலக் குமுகுமெனத் தேனொழுகுங் கடப்பமாலையணிந்த உம்முடைய புயங்களுக்கு நமஸ்காரம். கூரியதாகிய ஒப்பற்ற வேலாயுதத்தைத் தாங்கிய பரங்கிரிக் குமாரக்கடவுளே நமஸ்காரம். (எ-ம்) (௬௩)

மத்தமணிச் சடைப்பரம ரெடுத்திறுகத் தழுவியெழின்
மடிமேல் வைத்து
முத்தமிடத் திரும்பியெதிர் தாவியெட்டிக் காட்டியசண்
முகங்கள் போற்றி
சித்திரப்பா வெனவடித்த தமிழ்க்குருகிச் சாற்றுதிருச்
செவிகள் போற்றி
கொத்திருந்த கடம்பணிவோய் பரங்கிரியி லிருந்தமணக்
கோலம் போற்றி.

(இ-ள்) ஊமத்தம்பூ மாலையணிந்த சடையையுடைய சிவபெருமான் எடுத்து இறுகத்தழுவி அழகிய மடியின்மேல் வைத்து முத்தமிட அப்போது திரும்பி யெதிரே தாவி நெருங்கிக்காட்டிய ஆறுதிருமுகங்களுக்கு நமஸ்காரம். சித்திரகவியெனத் தெளிந்தெடுக்கப்பட்ட தமிழுக்கு மனமுருகி (அத் தமிழை)க் கேட்கின்ற திருச்செவிகளுக்கு நமஸ்காரம். பூங்கொத்திலிருந்த கடம்பமலர்மாலையைப் புனைந்தவரே! பரங்கிரியிலெழுந்தருளிய உமது திரு மணக்கோலத்துக்கு நமஸ்காரம். (எ-ம்) (௬௪)

கையிலணி வேல்போற்றி கருதிவரு மயில்போற்றி
கனக தண்டைச்
செய்யமல ரடிபோற்றி திருச்சேவற் கொடிபோற்றி
திகழுஞ் சோதி
மெய்யிலகு மெழில்போற்றி விளங்கியகண் முகம்போற்றி
மேன்மை போற்றி
கொய்யுமலர்க் கடம்பணிவோய் பரங்கிரியி லிருந்தமணக்
கோலம் போற்றி.

(இ-ள்) உமது திருக்கரத்திலணியப்பட்ட வேலாயுதத்துக்கு நமஸ் காரம். உம்மை நினைத்து வருகின்ற மயிலுக்கு நமஸ்காரம். பொற்றண்டை

பணிந்த உமது செந்தாமரைபோலுந் திருவடிக்கு நமஸ்காரம். உமது திருமேனியிற் பிரகாசிக்கும் அழகுக்கு நமஸ்காரம். உமது கருணைப்பிரகாசமுடைய கண்களுக்கும் முகங்களுக்கும் நமஸ்காரம். கொய்யப்பட்ட கடப்பமாலையணிகின்றவரே! பரங்கிரியிலெழுந்தருளியிருந்த உமது திருமணக்கோலத்துக்கு நமஸ்காரம்.(என்று விஷ்ணு முதலிய தேவர்கள் துதித்தார்கள்) (எ-ம்)　(கூ0)

வேறு.

நன் றுநன் றெனவே திருமுடி துளக்கி
　நாரணன் முதலினோர் தம்மைக்
குன்றெனத் திரண்ட தோளுடைக் குமர
　குருபரன் மனமகிழ்ந் தன்பா
லின்றுபோ லென்றுந் திருமணக் கோலத்
　தெழில்விழி யருந்திட நீவிர்
வென்றிசே ரிந்தப் பரங்கிரி யுறைமி
　னென்றுரை விளம்பிய காலை.

(இ-ள்) (அது கேட்டு) மலைபோலத்திரண்ட புயங்களையுடைய முருகக்கடவுள் நல்லது நல்லதென்று தலையசைத்து விஷ்ணு முதலிய தேவர்களைச் சந்தோஷித்து நீங்கள் இன்றைத்தினம்போல எக்காலத்தும் நம்முடைய திருமணக்கோலத்தை யன்பினாலே தரிசிப்பதற்கு வெற்றி பொருந்திய திருப்பரங்குன்றத்தில் இருப்பீராகவென்று கட்டளையிட்டருளிய காலையில், (எ-ம்)　()

வாமமென் புறத்தின் மகவெழி லெடுத்து
　மடுத்திரு விழியுணத் தெவிட்டா
தியாமளை பரம னுடல்கள் பூரிக்க
　விருந்தன ரிடத்துமா லியானை
மாமுகன் றெய்வ யானையு நாண
　மருவுமென் றோர்புறத் திருந்து
காமர்பின் னவனைக் கடைக்கணாற் பார்த்துக்
　களித்திடக் குமரன்வீற் றிருந்தான்.

(இ-ள்) இடப்பக்கத்தில் பார்வதியும் பரமேசுவரனும் முருகக்கடவுள் திருமணக்கோலத்தினழகைப் பார்த்துத் தெவிட்டாமல் தங்கள் திருமேனி பூரிக்க இருந்தனர். இடப்பக்கத்திலிருந்தால் அவ்விடத்தில் தெய்வயானை வெட்கப்

படுவானென்று ஒருபுறத்தி லொதுங்கி யானைமுக விநாயகக்கடவுளிருந்து அழகு நிறைந்த தமது தம்பியாகிய குமாரக்கடவுளைக் கடைக்கண்ணாற் பார்த்து மனமகிழ்ந்திருக்கக் குமாரக்கடவு ளெழுந்தருளியிருந்தனர். (எ-ம்) ()

மற்றைய வானோர் வயின்வயி னிருக்க
மாமகள் வாணியா தியர்க
ளுற்றகண் ணுற்றுப் பார்த்தபி னிமையா
வுயர்விழிப் பேறென இருந்தார்
சொற்றது விருக்க மானிடத் தொகுதி
தூய்த்தவங் கோடியாண் டிழைத்துப்
பெற்றபேற் றினர்போ லியாவருங் காணப்
பிரான்பரங் கிரியில்வீற் றிருந்தான்.

(இ-ள்) மற்றைத் தேவர்கள் அவரவர்களுக்குரிய இடத்திலே யிருக்க இலக்ஷுமி சரசுவதி முதலிய தெய்வப்பெண்கள் திருக்கலியாணக் கோலத்தைக் கண்களாலுற்றுப்பார்த்து இமையாநாட்டம் பெற்ற பயனிதுவென்று பேசிக்கொண்டிருந்தார்கள். இங்கே சொல்லிய விஷயம் இவ்வளவாக(இனி) மனிதர் கூட்டங்கள் பரிசுத்தமாகிய தவத்தைக் கோடி வருடங்கள் செய்து பெற்ற பயனடைந்தவர்போல எல்லாருந் திருமணக்கோலக் காட்சியைத் தரிசிக்க முருகக்கடவுள் திருப்பரங்கிரியில் எழுந்தருளியிருந்தனர். (எ-ம்) ()

வேறு.

திருப்பரங் கிரியின் காதை சிவாலய மதனிற் பூவின்
மருப்பொழி லதனிற் சோதி மடத்தினி னதிதீ ரத்தி
லுருப்பொலி தலத்தில் வைகி யுரைத்துளோர் விழைந்து கேட்போர்
விருப்பெழு பொருளை யெய்தி முடிவினில் வீடு சேர்வார்.

(இ-ள்) திருப்பரங்கிரியின் மகத்துவமாகிய கதையைச் சிவாலயத்திலாவது, பூக்கள் நிறைந்த வாசனைதங்கிய சோலையினிடத்தாவது, பிரகாசந் தங்கிய மடத்திலாவது, நதிக்கரையிலாவது சுத்தமாகிய இடத்திலிருந்து படித்தவர்களும் அதை அன்புடன் கேட்போர்களும் அவரவர்கள் இச்சித்த தருமம் பொருள் இன்பங்களைப் பெற்று முடிவிலே மோக்ஷத்தையடைவார்கள். (எ-ம்) (கசு)

வேறு.

அந்த ணாளர்சொல் லாரண மோங்குக
வந்து நீதியை மன்னவர் மன்னுக
வெந்தை யாறெழுத் தேபொரு ளாகுக
கந்த வேளடி யார்கள் களிக்கவே.

(இ-ள்) அழகிய குளிர்ந்த குணமுடையவராகிய பிராமணர்கள் ஓதுகின்ற நான்கு வேதங்களும் உயர்ச்சியடையவேண்டும். அரசர்கள் வந்து செங்கோலை நிலைபெறும்படி நடாத்தவேண்டும், எங்களுக்குப் பிதாவாகிய முருகக்கடவுளது சடாக்ஷர மந்திரமே எல்லாப்பொருளுக்கும் மூலப்பொருளாக வேண்டும். முருகக்கடவுளடியார்கள் எந்தக்காலமும் மனமகிழ்ச்சியடைய வேண்டும். (எ-ம்) (எ0)

பதினோராவது திருக்கலியாணச் சருக்கம் முற்றிற்று.
ஆகச் சருக்கம் கக-க்குக் கூடிய செய்யுள் ருஉசு.

---

திருப்பரங்கிரிப் புராணம் முற்றிற்று.
முருகக்கடவுள் திருவடி வாழ்க.



# பிழையும், திருத்தமும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 10 | 11 | குடமு ய | குடமு யி |
| 13 | 30 | விலக்கும் | விலகும் |
| 23 | 32 | துடைக் | துடைத் |
| 25 | 20 | றைவ | நறைவ |
| 33 | 27 | இருந்தார் | இருக்தான் |
| 42 | 2 | பரணனெ | பரணனே |
| 48 | 3 | பல்லுயர் | பல்லுயிர் |
| 49 | 25 | இரதங்களே | இரத்நங்களே |
| 54 | 20 | குறடுமஞ் | குறடுறிஞ் |
| 70 | 24 | கவுத | கவுதம |
| 71 | 4 | டை | டை |
| 73 | 19 | ளியன்றான் | யின்றான |
| 74 | 20 | கவுத | கவுதம |
| 90 | 5 | | முத்திதீர்த்தமென் |
| | | முத்தீர்த்தமெனக் கடை குறை, | |
| ,, | 20 | கோள | கோர்ள |
| 91 | 5 | மைப்புன | மைப்புய |
| 110 | 6 | யான்ப | யரன்ப |
| ,, | 15 | கூவனீ | கூவரீ |
| 116 | 22 | | வேறு |
| 117 | 11 | ஆலாகல | ஆலகால |
| 128 | 29 | மழவா | மழுவா |
| 129 | 32 | பெற்றோ | பெற்று |
| 139 | 9 | வழங்கு | வங்கு |
| 142 | 26 | தனதி | தமதி |
| 162 | 20 | றியயின் | றியபின் |
| 170 | 15 | பொறி | பொரி |
| 183 | 8 | யமுத்தும் | யமுக்தும் |